# நம்மாழ்வார் காட்டும் தெய்வம்

T. S. ராஜகோபாலன்

# Nammalvar Kattum Deivam

[TAMIL]



This Book is Published
with the Financial Assistance
of
Thirumala Tirupati Devastanams
Under their Scheme
Aid to Publish Religious Books.

## நன்றி!

மத சம்பந்தமான நூல்கள் வெளியிடு வதற்கான பொருளுதவி என்ற திட்டத் தின்படி திருமலை திருப்பதி தேவஸ்தா னங்கள் வழங்கிய பொருளுதவியைக் கொண்டு இந்நூல் வெளியிடப்படுகிறது. இதனை ஆய்ந்து அச்சிட ஏற்றதென ஆதரவு நல்கிய பெரியோர்க்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானங் களின் அதிகாரிகளுக்கும் எனது வணக்கம் கலந்த நன்றி!

T. S. ராஜகோபாலன்

# நம்மாழ்வார்
# காட்டும் தெய்வம்

செஞ்சொற்கவி, கவிரத்ந-கண்டீரவ
அபிநவ பட்டர்பிரான், அபிநவ வித்யாபாஸ்கர
வித்யாரத்நம்

**T. S. ராஜகோபாலன், B. A., L. T.**

முன்னாள் தலைமை யாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி,
திருவல்லிக்கேணி

திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

**1994**

# முன்னுரை

ஸ்ரீமந் நாராயணனது திருவருளாலே நம்மாழ்வார் தமது ப்ரபந்தங்களை அருளினார். இவற்றில் வேதங்களின் கருத்துக்களே தெள்ளத் தெளிவாக, யாவரும் ஐயந்திரிபற உணர்ந்து கொள்ளுமாறு அடர்ந்துள்ளன. ஆதலால் இவை வேதங்களின் சாரமாகப் போற்றப் பெறுகின்றன.

இவர் காட்டும் தெய்வம் ஸ்ரீமந் நாராயணன். இவன் உலகங்களுக்கெல்லாம் மூவகைக் காரணமுமானவன்; உயிர்களைப் படைத்துக் காப்பவன். இவன் பிரமன் முதலான சேதனர்களுக்கு அந்தர்யாமியாகி யாவரையும் இயங்கச் செய்கிறான், இவன் தன்னைத் தன் அடியார்களுக்கே யாக்கிக் கொண்டு, இவர்களை உய்யச் செய்து தானும் பெரிதும் மகிழ்கிறான். ஸ்ரீவைகுண்டத்தில் இவனது திருமேனியின் கட்டழகு, இளமை, திவ்யபரிமளம் போன்றவற்றையும், அளவில்லாத கல்யாண குணங்கள்பலவற்றையும் முற்றூட்டாக அநுபவித்துப் பேரானந்தத்தில் திளைப்பவர் நித்யரும் முக்தரும். வியூஹம், விபவம், அர்ச்சை போன்ற நிலைகளிலும் இந்த மேன்மை சிறிதும் குறையாமல் இவன் விளங்குகிறான். இவன் சேதனரிடம் கொள்ளும் அன்பும் கருணையும் அபாரமானவை. மனைவி, மக்கள் இவர்களது குற்றங்களைக் காணாக் கண்ணிட்டு அன்பே கொள்ளுங் குடும்பத் தலைவன் போல், ஸர்வேச்வரன் சேதனரிடம் வாத்ஸல்யத்தால் அருள்புரிந்து இவர்களை நன்னெறியில் ஊன்றச் செய்து, தன்னிடம் பக்தி வளரச் செய்து, தன்பால் ஏற்றுக் கொண்டு பெரிதும் மகிழ்ந்து, இவர்களுக்கும் என்றுங் குறையாத பேரின்பம் விளைவிக்கின்றான்.

சேதனர் இவனையே புகலாகப் பற்றி உய்தல் எளிதாகும். இவன் ஆராதனைக்கு எளியவன். அர்ச்சையில் இவனை ஆராதித்து திருமந்த்ரத்தை ஓதி வந்தால் மோக்ஷமாகிய பேற்றை எளிதில் பெறலாம். சேதனர் உய்வதற்கெனவே இவன் அவதாரங்கள் பல செய்து, அறநெறியை வளர்க்கின்றான், அன்றியும் ஞானத்தால் மிகச் சிறந்த மஹான்களிடம் ஆவேசித்து, நன்னெறி நூல்களை அருளி உபதேசிக்கச் செய்கிறான். உய்வதற்கு இவனையே பற்ற வேண்டுமென்று ஆசார்யர்கள் உபதேசித்துள்ளனர்.

இவ்வாழ்வார் தமது அநுபவங்களை விவரிப்பது தனிச் சிறப்புடையது. சேதனர்களைப் பெறுவது தனது பேறாக ஸர்வேச்வரன் கருதிப் பலவாறு முயற்சி செய்கிறான். இவன் தம்மைத் "தீமனம் கெடுத்தான்" என்கிறார், ஆழ்வார்—அதாவது உலக வாழ்க்கையிற் மனம் செல்லாதவாறு இவருக்கு மதிநலம் அருளி பக்தியை விளைவிக்கிறான், இந்த பக்தி பரபக்தி, பரஞானம், பரமபக்தியாகி, இவர் பகவானது திருவடிகளைக் காணவேண்டுமென்று துடிக்கிறார். எவ்வகையாலும் இவரைத் தனக்கே யாக்கிக் கொள்ள ஸர்வேச்வரன் விழைகின்றான், இவரை உரிய பெருமையுடன் வரவேற்க ஸ்ரீவைகுண்டத்தைப் புதுப் பொலிவுடன் திகழச் செய்கிறான். இவன் இவரிடம் கொள்ளும் காதல், இவர் காட்டும் காதலைவிஞ்சுகிறது. விடாய்த்தவன் இரு கரங்களாலும் தண்ணீரை வாரி வாரிப் பருகுவது போல் இவன் இவரது திருவுள்ளத்தில் உறைந்து, இவருடன் கலந்து பெரிதுங் குலவுகிறான். "ஆருயிர் பட்டது எனதுயிர் பட்டது?" என்கிறார் இவர். இவரது திருமேனியில் பெரிதும் மோகங் கொண்டு இவன் திவ்யதேசங்களில் தான் கொள்ளும் அன்பை இவரது அவயவங்களில் காட்டுகிறான்— "திருமாலிருஞ் சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே, திருமால் வைகுந்தமே திருவேங்கடமே எனதுடலே" என்கிறார் இவர். இவரது பேரவா பலன்பெறுகின்றது; இவரை ஸர்வேச்வரன் தன்னிடம் ஏற்றுக் கொள்கிறான். "அவாவற்று வீடு பெற்ற" என்கிறார் ஆழ்வார்.

இவர் வெளியிட்டுள்ள கருத்து: பகவானது திருவருளாலே சேதனன் ஒருவன் தனது அறிவின்மை நீங்கிச் சிறந்த ஞானத்தால் பக்தி வாய்ந்து, ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யர் முக்தர்களுடன் ஸர்வேச்வரனுக்கு எல்லாவகைக் கைங்கர்யங்களுஞ் செய்து, மீட்சியின்றி எக்காலமும் பேரின்பம் பெறுவது.

இவரது அருளிச்செயல்கள் பெரியதோர் மணற்கேணி போல் தொட்ட தொட்ட இடமெல்லாம் இன்பச் சுவை குமிழ்த்துப் பொங்கி வெழுகின்றது. பகவானிடம் கொள்ளும் அன்பின் மேலீட்டால் இவர் இவனது திருமேனிக் கட்டழகையும், ஆத்ம குணங்களையும் நினைந்து நினைந்து நைந்துருகித் தமது மனத்தில் ஏற்பனவற்றை விவரிக்கும் பாங்கு வேறு எந்த பக்தரிடமுங் காண்பதற்கில்லை. இவரது அநுபவங்கள் ஒப்பற்ற சொல் லோவியமாகித் தொண்டர்க்கு அமுதமாகின்றன. இறைவனது

திருமேனி எங்குந் தாமரை பூத்த கருமாணிக்க மலை என்றும், இலைகளிடையே மலர்கள் அடர்ந்த தாமரைத் தடாகம் என்றும், ''அரவணைமேல் இருள்விரி நீலக் கருநாயிறு சுடர்கால்வது போல் இருள் விரி சோதி'' என்றும், திருத்தோள்கள் கற்பகக்கா என்றும், ''கோலமே! தாமரைக் கண்ணது ஓர் அஞ்சன நீலம்'' என்றும் இவ்வகைகளிலே அநுபவித்து, இவ்வாறு அநுபவிப்பது, அப்பொழுதைக் கப்பொழுது ஆராவமுதமென்றும், இவன் கோதவமில் கன்னற் கட்டி என்றும், ''அச்சுவைகட்டி என்கோ? அறுசுவை அடிசில் எனகோ?'' என்றும், ''முன்நல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவை'' என்றும், இவனது புகழ் தமது செவிகள் சுவைக்கும் ''கீர்த்திக் கனிகள்'' என்றும் ஆழ்வார்விவரிக்கிறார். இவ்வாறான இன்பம் ப்ரபந்தங்கள் முழுதும் பயின்றுமேன்மேலும் அநுபவிக்கக் கூடும். பாசுரங்களின் கருத்துக்களை அசார்யர்களது வ்யாக்யானங்களோடே அநுபவிப்பது என்றுந் தெவிட்டாத ஆராவமுதமாகும். இவரது அநுபவங்கள் சிலவற்றைப் பகுதிகளாக எளிய தமிழில் விளக்கத்துடன் அமைந்திருக்கிறேன். இந்நூலின் மூலம் அருளிச் செயல்களிலும் வ்யாக்யானங்களிலும் ஆர்வம் விளைந்து அன்பர் பயின்று இன்புறுவராக.

ஆசிரியன்

# பொருளடக்கம்



---

திரு வி.—திருவிருத்தம்

திருவா.—திருவாசிரியம்

பெ. திரு—பெரிய திருவந்தாதி

# 1. பரத்வம்

நம்மாழ்வார் காட்டும் தெய்வம் ஸ்ரீமந் நாராயணன். இவன் எங்கும் உறைந்திருப்பவன்; உலகங்களுக்கெல்லாம் நாதன்; உயிர்களைக் காப்பதே தனது பேறாகக் கொள்பவன், தனது அடியார் தன்னை அனுபவித்து இன்புறுமாறு, பேரெழில் வாய்ந்த திருமேனியோடு சோதிமயமாய் விளங்குகிறான். பிறவியே இல்லாத இவன் உயிர்களைக் காத்து நன்னெறியில் உய்த்திடப் பலவகைப் பிறவிகள் பிறந்து அருள் பாலிக்கின்றான். அர்ச்சா மூர்த்தியாகத் திருக்கோயில்களிலும இல்லங்களிலும் உறைந்து யாவரையும் காப்பாற்றுகிறான். இவனது மங்கள குணங்கள் எண்கடந்தவை; இவற்றால் விவரிக்கப் பெறும் திருநாமங்கள் ஆயிரக் கணக்கானவை.

## 1. 1. பரமன், பரமபதம்

இவன் யாவரிலும் வேறுபட்டு மேம்பாடுடையவன்; ஆதலால் இவன் பரன், பரமன், பரம் பொருள். இவன் உறையுமிடங்களில் சிறந்தது பரமபதம்; இது என்றும் அழியாமல் நிலைத்துள்ளது,

1. ஆதி மூர்த்தி (3-3-5).
யாவர்க்கும் இவன் முதல்வன், ஆதலால் பரமன்.

2. ஆதியம் புருடனென்கோ? (3-4-4).
புருடன் என்கோ—புருஷன் என்பேனோ?

3. கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதியம் பகவன் (1-3-5).

எல்லையில்லாத வள்ளல் தன்மை யுடையவன்; அந்த மில்லாதவன்; யாவர்க்கும் காரணமாக இருப்பவன். இழிவு யாதுமில்லாமல ஞானமயமாக இருப்பவன்.

4. பரமபரம்பரன் (10-4-11);
யாவர்க்கும் ஈச்வரன்.

5. பரவி வானவர் ஏத்த நின்ற பரமனை (3-6-3).
வானவர்—நித்திய சூரிகள்.

6. வரனவில் திறல் வலி அளி பொறையாய் நின்ற—பரன் (1-1-11).

வரன் நவில் திறல்—சிறந்ததாகச் சொல்லப்பெறும் சக்தி (தீயின் குணம்), வலி—வலிமை (வாயுவுக்கு). அளி—சீதளம் (நீர்), பொறை — பூமியின் குணம். இவ்வாறு பண்புடைய பஞ்ச

பூதங்களுக்கும் இவன் இறைவன். உபலக்ஷணமாக ஸ்ரீவைகுண்டமும் இவனது உடைமை. இவ்வகையால் இவன் பரன்.

7. படியே இதுவென்றுரைக்கலாம் படியனல்லன் பரம்பரன் (8-8-2).

படி இது—இது ஒப்பு, என்று உரைக்கலாம் படி அல்லன்—என்று சொல்ல இயலாதவாறு மேன்மை யுடையவன். ஆதலால் பரம்பரன்.

8. வைகுந்த மாநகர் (4-10-11).

9. அந்தாமம் (2-5-1).
அம்—அழகிய; தாமம்—உறைவிடம்: பரமபதம்.

10. பொன்னுலகாளீரோ (6-8-1).
பொன் உலகு—பரமபதம்.

11. நலமந்த மில்லதோர் நாடு (2-8-4).
நலம் அந்தம் இல்லது ஓர் நாடு—நன்மைக்கு முடிவின்றிக்கே இருக்கும் நிலம்; பரமபதம்.

12. பெரிய வானுள் நிலாவுவரே (6-10-11).
பெரிய வான்—பரமபதம்.

13. எம்மா வீட்டுத் திறமும் (2-9-1).
எம் மா வீடு — எல்லா வகையாலும் சிறப்புடைய ஸ்ரீவைகுண்டம்.

14. தன் சோதி புக்க அமர ரரியேற்றினையே (7-6-9).
தன் சோதி—சோதி மயமாய் (பகவானுக்கு) இருப்பிடமான பரமபதம். அமரர்—நித்தியசூரிகள். அமரர் அரி ஏறு – நித்திய சூரிகளுக்குத் தலைவன்.

15. பரமேட்டி (9-10-8).
பரமபதத்தில் உறைபவன்.

16. வீடுடையான் (1-2-1).
பரமபத நாதன், வீடு-பரமபதம்.

## 1. 2. பெருமானின் கட்டழகு

பகவானது திருமேனி பஞ்ச-உபநிஷத் மயமானது. சோதிமயமானது, பரிமளம் மிக்கது, கட்டழகு வாய்ந்தது, இளமையே விளங்குவது.

1. செந்தண் கமலக் கண் கை கால் சிவந்த வாயோர் கருநாயிறு, அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்கும் (8-5-7).

நீலநிறமுடைய சூரியனது கதிர்கள் பரந்துள்ளது போல் திருமேனி விளங்கும்; குளிர்ந்த தாமரைபோன்ற கைகள், கால்கள், வாய் இவை உடைய சூரியன் போன்றது திருமேனி.

2. கருகிய நீலநன் மேனி வண்ணன் செந்தாமரைக் கண்ணன் (1-9-3).

மிகவுங் கறுத்த நீலமணிபோல் திருமேனி நிறமுடையவன்; தாமரை போன்ற திருக்கண்கள் உடையவன்.

3. அப்பொழுதைத் தாமரைப்பூக் கண்பாதம் கை கமலம் (2-5-4).

அப்போதலர்ந்த தாமரைபோல் கண், பாதம், கை இவை புதுமை பெற்றுள்ளன.

4. விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை பாதம் கைகள் கண்கள் (2-7-5).

பரந்து விளங்கிச் சிவந்த தாமரை போல்வன பாதங்கள், கைகள், கண்கள்.

5. நேரா வாய் செம்பவளம், கண் பாதம் கை கமலம் (2 5-5).

சிவந்த பவளம் வாய்க்கு ஒப்பாகாது. கண், பாதம், கை இவற்றிற்குக் கமலங்கள் ஒப்பாகமாட்டா.

6. கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள் போல், திருமார்பு வாய் கண் கை காலுடை ஆடைகள் செய்ய பிரான் (8-9-1).

கறுத்த மாணிக்க மயமான மலையின் மேல் படர்ந்த தாமரைக் காடுகள் போல் திருமார்பு முதலியன சிவந்து விளங்க, இச்செவ்வியால் விளங்கும் பெருமான்,

7. தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி, நீளும் படர்பூங் கற்பகக் காவும் நிறை பன்னாயிற்றின், கோளுமுடைய மணி மலை போற் கிடந்தான் (8-10-8).

இவன் சோதியடர்ந்த கருமாணிக்க மலை போல் விளங்குகிறான். சமனிலாத—ஒப்பில்லாத. இதில் விளங்குவன பல தாள்கள், தோள்கள், முடிகள். இவை ஓங்கிப் பணைத்த கற்பகச் சோலைகள் போல் படர்ந்துள்ளன. ஆதித்யர் பலர் அடர்ந்தாப் போல் இம்மலை சோதி மிக்கது. பல் நாயிறு—பல ஆதித்யர். கோள்—சோதி.

8. அந்தரமேல் செம்பட்டோடு அடி உந்தி கை மார்பு கண்வாய், செஞ்சுடர்ச் சோதிவிட உறை யென் திருமார்பனையே (7-6-6)

அநதரம மேல் — உடமபுக்கு நடுவான அரையில். செம்பட்டு — சிவப்புப் பீதாம்பரம். அரைக்குக் கீழும் மேலும் இவ்வாறு சிவப்புடையன. திருவடிகள், கொப்பூழ், திருக்கைகள், திருமார்பு, திருக்கண், பவளவாய்.

## 1. 3. திருமேனி வண்ணம்—சோதி

1. எங்கும் அழகமர் சூழொளியன் (3-10-8)

எங்கும் பரவிய உறுப்புக்களின் பேரெழிலோடு இயைந்த கட்டழகு வாய்ந்தவன்.

2. பயிலுஞ் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை (3-7-1).

பயிலும்—பரந்த.

3 வண்ண மாமணிச் சோதியை (2-7-13).

நிறத்தாலே சிறந்த நீல மணிபோல் ஒளியுடையவனை.

4. நீலமலர் நெடுஞ்சோதி சூழ்ந்த நீண்ட முகில்வண்ணன் கண்ணன் (8-2-3)

நிறத்தாலே சிறந்த நீல மணிபோல் ஒளியுடையவன்.

5. என் மைதோய் சோதிமணி வண்ண! எந்தாய்! (2-9-2).

கருமை அடர்ந்த ஒளியுடைய மாணிக்கம்போல் வடிவழகுடையவனே! என் ஸ்வாமியே!

6. மாசூணாச் சுடருடம்பாய் (3-1-8).

குறைவில்லாத சோதிமயமான திருமேனியுடைய.

7. உயர்வினையே தரும் ஒண் சுடர்க் கற்றையை (1-7-4).

ஞானம், பக்தி போல்வனவற்றை அளிப்பவனாய், சோதிமயமான திருமேனியுடையவனை. உயர்வு, உயர்வினை (இரண்டாம் வேற்றுமை).

8. அஞ்சன வண்ணனென்கோ? (3-4-3).

அஞ்சனம்போல் நிறமுடையவன் என்பேனோ?

9. சாதி மாணிக்கமென்கோ? சவிகொள் பொன் முத்தமென்கோ? (3-4-4).

சாதி மாணிக்கம்—சிறந்த மாணிக்கம், சவி—ஒளி, முத்தம்—முத்து.

10. நீலத் தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள், போலப் பொலிந்து (திருவி. 39).

வரை—மலை, தடங்கள்—தடாகங்கள்.

மாசு அறு சோதி—குறை ஏதுமில்லாமல் சோதியே அடர்ந்த, மணிக்குன்றத்தை—மாணிக்க மலைபோல் விளங்குவோனை

12. சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே (8-5-1).

சாயல்—ஒளி, சாமம்—கறுப்பு, பசு—பசுமை, அடை—இலை, திருமேனியின் அழகு: பசுமையான இலைகள் அடர்ந்து, தாமரை மலர்கள் நிறைந்து, பெரியதாய், பரிமளம் மிக்க த்டாகம் நடந்து வருவதுபோல.

13. சோதியாகி எல்லா உலகுந் தொழும் ஆதி மூர்த்தி (3-3-5).

## 1. 4. திருவடிகள்

திருவடிகள் முதல் திருமுடி வரையில் பெருமானது பேரெழிலை ஆழ்வார் விவரிக்கிறார், பல பாசுரங்களில்.

1. பூவார் கழல்கள் (6-10-4).

தேவர், முனிவர், ரிஷிகள் இவர்கள் இடும் மலர்கள் அடர்ந்தன. திருவடிகள்.

2. தேனே மலருந் திருப்பாதம் (1-5-5).

தேனைப் பெருக்கி மலருந் திருவடிகள்.

3. மலர்த் தாமரைப் பாதங்களே (5-9-6).

மலர்ந்த தாமரைபோல் அழகிய திருவடிகள்.

4. அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ? (3-1-1).

திருவடிகளின் ஒளியே ஆஸன பத்மமாகக் கீழே பரவியதோ? ஆஸநபத்மம்—திருவடிகள் பொருந்தியிருக்கும் தாமரைமலர்.

5. நறுமாவிரை நாண்மலரடி (8-10-3).

நறு மா விரை—பரிமளத்தால் சிறந்த. நாள் மலர்—அப்போதலர்ந்த தாமரை போல் அழகிய

6 மலரடிப் போதுகள் (7-10-5).

7. தனிமாத் தெய்வத் தளிரடி (8-10-7).

ஒப்பில்லாத தேவபிரானுடையவனாய், தளிர்போல் மெல்லிய திருவடிகள்.

8 வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி (9-2-10).

வடிவால் ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும், இவள் போன்ற பூமிப்பிராட்டியும், தங்களது மெல்லிய கரங்களால் பிடித்தால் திருவடிகள் கன்றுமோ என்று அஞ்சிப் பிடிக்கிறார்கள்.

9. துயரறுசுடரடி (1-7-1)

அடியார்களது துயரத்தைத் தீர்ப்பதால் ஒளி வாய்ந்த திருவடிகள். சுடர் அடி—பஞ்ச—உபநிஷத் மயமான திருவடிகள். இங்குப் பஞ்சபூதங்கள் போல் ஸ்ரீவைகுண்டத்தில் பஞ்ச உபநிஷத்துக்கள்; இன்பமே தருவன.

## 1. 5. உந்தி

உந்தி—கொப்பூழ்.

1. தாமரை உந்தித் தனிப்பெரு நாயக! (திருவா. 1).
   நாயக—நாயகனே!

2. கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்பு,[3] கால் கண் கை செவ்வா யுந்தியானே! (8-7-6).

3. அயனிடமே கொப்பூழ் (2-5-2).
   அயன்—பிரமன்.

## 1. 6 திருமார்பு

பெரிய பிராட்டியாருக்கு உறைவிடம்

1. அலர்மேல் மங்கை உறைமார்பா! (6-10-10).

2. அல்லி மாதரமருந் திருமார்பினன் (9-10-10).

அல்லி மாதர்—தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பெரிய பிராட்டியார். பரிமளம் அடர்ந்த திருமேனி வாய்ந்த பெரிய பிராட்டியார் விரும்பி உறையுந் திருமார்பு.

3. மலர் மாதருறை மார்பன் (4-8-2).

4. திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும், திகழ்கின்ற திருமாலார் (10-6-9).

இயல்பாக அழகு வாய்ந்த திருமார்பு. பிராட்டி உறைவதால் அழகு மிக்கு விளங்குகிறது. திருமாலார்-பிராட்டியிடம் பிரேமம் வாய்ந்தவன்.

5. மார்பில் திருமறுவும் (5-5-2).
   மறு—மச்சம், ஸ்ரீவத்ஸம்

6. மடத்தையை வண்கமலத் திருமாதினைத், தடங்கொள் தார் மார்பினில் வைத்தவர் (4-2-7).

தடங்கொள்—பரப்புடைய. தார் மார்பு—திருத்துழாய் மாலை வேய்ந்த மார்பு.

7. மையார் கருங்கண்ணி கமல மலர்மேல், செய்யாள் - திருமார் பினில் சேர் திருமாலே! (9-4-1)

செய்யாள்—தாமரை மலரில் வீற்றிருந்து, சிவந்த திருமேனி வாய்ந்தவள்.

## 1. 7. திருவதரம்

அதரம்—உதடு.

1. பவளச் செவ்வாயன் என்கோ? (3-4-3).
பவளம்போற் சிவந்த வாயுடையவன் என்பேனோ?

2. செம்பவளத் திரள் வாயன் சிரீதரன் (3-5-4).
செம்பவளம் போலே விளங்கும் வாயுடையவன்.

3. செங்கனிவா யொன்றினோடுஞ் செல்கின்றதென் நெஞ்சமே (5-5-1).

கனி—கோவைக் கனி.

4. பனிங்குநீர் முகிலின் பவளம்போற் கனிவாய் சிவப்ப (9-2-4).
தெளிந்த நீரை முகப்பதாலே அழகிய மேகமானது பவளம் பூத்தாப்போல் வாயின் பழுப்பு.

5. தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரானை (5-3-8).
தொண்டை—தொண்டைக் கனி.

6. வாலியதோர் கனி கொல்?..., நீல நெடுமுகில் போல் திருமேனி யம்மான் தொண்டை வாய் (7-7-3).

அம்மான் தொண்டை வாய்—(பெருமானுடைய) தொண்டைக் கனியின் நிறமுடைய வாயானது; வாலியது ஓர் கனி கொல்?—நன்மையுடையதாய், நிறத்தாலும், இனிமையாலும் ஒப்பில்லாத தொண்டைக் கனி என்னலாமோ?

## 1. 8. திருமூக்கு

1. கோல நீள் கொடிமூக்கும் (5-5-6).
அழகு மிக்க கொடிபோல் விளங்கும் மூக்கு.

2. மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ அறியேன் (7-7-2).

மாடு உயர்—பக்கத்திலே ஓங்கியிருக்கும், கற்பகத்தின்—கற்பகத்தின், வல்லி—கொடி.

## 1. 9. திருப்புருவம்

1. நீண்ட புருவங்களும் (5-5-5).

2. இன்னுயிர்க்கு ஏழையர்மேல் வளையும் இணை நீளவிற்கொல் மன்னிய சீர்மதனன் கருப்புச் சிலைகொல்? மதனன், தன்னுயிர்த் தாதை கண்ணபெருமான் புருவமவையே (7-7-4).

ஏழையர்மேல்—பெண்பாலரைக் குறித்து, இன் உயிர்க்கு—உயிரைக் கவர்வதற்காகவே. நீல வில் கொல்—கறுத்த வில்லோ? (இந்தப் புருவம்). அன்றி, மதனன்—மன்மதன். கருப்பு—கரும்பு. தாதை—தகப்பன.

## 1. 10. திருத்தோள்கள்

1. தோளுமோர் நன்குடைத் தூமணி வண்ணன் (3-7-2).

2. கற்பகக் காவன நற்பல தோளற்கு (6-6-6).
காவன—காவைப்போல், நல்—சிறந்த.

3. சேண்சுடர்த் தோள்கள் பல தழைத்த தேவபிராற்கு (8-2-9).
சேண்—ஓங்கி, சுடர்—சோதி வாய்ந்த

4. தோள்களாயிரத்தாய் (8-1-10)
(இவன் எங்கும் பரந்திருப்பதால் ஆயிரக்கணக்கான தோள்கள்).

## 1. 11. திருச்செவிகள்

1. மகரம் தழைக்குந் தளிர்கொல், பைவிடப் பாம்பணையான் திருக்குண்டலக் காதுகளே (7-7-6).

பை—படம். மகரம் தழைக்கும் தளிர் கொல்—மகரவடிவில் தழைத்த தளிர்களோ? என்னுமாறு. குண்டலக் காதுகள்—குண்டலங்கள் அணிந்த காதுகள். குண்டலங்கள் மகரமீன்வடிவுடையன.

## 1. 12. திருக்கண்கள்

1. கண்ணுஞ் செந்தாமரை (திருவி. 43).

2. சோதி வாயவுங் கண்ணவுஞ் சிவப்ப (திருவா. 1).

3. தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனை (2-6-3).

4. அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனை (6-7-10).

5. கோலமே! தாமரைக் கண்ணதோர் அஞ்சன, நீலமே! (3-8-8).

கோலமே!—ஒப்பனை ரூபம் தரித்தாற் போல் விளங்கு ரானே! தாமரைக் கண் அது அஞ்சன நீலமே!—தாமரைபோற் கள் வாய்ந்து, நீல நிறத்தின் வடிவானவனே!

செந்தாமரைத் தடங்கண் (2-5-1).

கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும் பெரிய கோலத் ங்கண்ணன் (4-5-6).

கரிய மேனி மிசை-கறுத்த வடிவழகுக்கு மேலே. நீறு—அஞ்சனம் தே இடும்—ஓரளவு அணிகின்ற (மங்களகரமாக).

எரிகொள் செந்நாயிறிரண்டுடனே உதயம் மலைவாய் விரி ற வண்ணத்த எம்பெருமான் கண்கள் (திருவி. 82).

எரிகொள் உதயம் மலைவாய்—நெருப்புடைய உதய கிரியில் னே—ஒரே காலத்தில். செம் நாயிறு இரண்டு—சிவந்த கதிர் நடைய சூரியன் இரண்டு, எழுந்தால் போல்; விரிகின்ற ணத்த—பரவும் இயல்புடையன, சோதியாலே

## 1. 13. திருக்குழல்

சுரிகுழல் (10-1-1). சுருண்ட குழல்.

மொய்ய நீள்குழல் தாழ்ந்த தோள்களும் (5-5-8).

மொய்ய—அடர்ந்து. தாழ்ந்த—தாழ்கின்ற. தோள்கள் வரை தாழ்கின்ற.

மாசறு நீலச் சுடர்முடி வானவர் கோனை (6-8-8).
முடி—குழற்கற்றை.

கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ் சுருளின், கொண்ட நீல நன்னூல் தழைகொல் அன்று மாயன் குழல் 7-9).

கொள்கின்ற கோள் இருளை—ஊழிக் காலத்தில் எங்கும் ர்ந்துள்ள இருட்டை சுகிர்ந்திட்டு—பஞ்சைப்போல் எஃகுட் சாரமில்லாததை அகற்றி இவ்வாறு பெற்ற, கொழும் ளின்—திணிந்த சுருளின். உள்கொண்ட—நூற்றுக் கொள்ளப் ட. நீல நல்நூல் தழைகொல்—கருமையே திணிந்து அழகிய ப் திரளோ? அன்று—இல்லை; இவ்வாறும் விவரிக்க இயலாது.

நூல்—பூணூல்.

6. மன்னு பூணூம் நான்கு தோளும் ([illegible]).

பூண்—ஆபரணம்.

7. உடையார்ந்த ஆடையன் கண்டிகையன் உடை நாணினன் புடையார் பொன் நூலினன் பொன்முடியன் மற்றும் பலகலன் (3-7-4).

உடை ஆர்ந்த ஆடையன் — அரையில் [illegible] போல் விளங்கும் திருப்பீதாம்பரம் [illegible] கண்டிகையன் — திருக் கழுத்தில் கண்டிகை வேய்ந்தவன் [illegible] நாணினன் பீதாம்பரத் தின் மேலே சாத்திய கோவை [illegible] பலகலன்—பலவ கைப்பட்ட திருவாபரணங்கள் பூண்டவன்.

8. பூந்தண் மாலைத் தண்டுழாயும் பொன்முடியும் வடிவும் (5-5-4).

9. தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந் துழாயுடை யம்மான் (1-9-7).

10. துழாய்விரைப் பூமருவு கண்ணி எம்பிரானை (2-6-3).

விரை—பரிமளம். பரிமளமும் மதுவும் மருவியிருந்துள்ள துழாய்க் கண்ணி வேய்ந்த பெருமானை

## 1. 16. திவ்யாயுதங்கள்

பெருமானிடம் அன்புடையோர்களுக்கு இவை ஆபரணங்கள் போல் விளங்கும்.

1. அறமுயல் ஆழியங்கைக் கருமேனி யம்மான் ([illegible]).

அறம் முயல் ஆழி—அடியார்களைக் காப்பாற்றிய தர்மத்தில் ஊன்றியிருக்கும் சக்கரம் கருமேனியோடு இயைந்த அழகு குறிப்பு.

2. சக்கரத் தண்ணலே! என்று ([illegible]).

அண்ணல் — கையுந் திருவாழியுமான அழகைக் காட்டி அடிமைக் கொண்ட ஸ்வாமியே! என்று.

3. கையார் சக்கரத்தென் கருமாணிக்கமே! ([illegible])

4. திண் சக்கர நிழறு தொல்படையாய்! ([illegible])

திண் சக்கரம்—பகைவர் [illegible] எதிர்த்து நிற்கும் திண்மையுடைய சக்கரம். நிழறு— [illegible] பரப்புகின்ற. தொல்—ஒப்பில்லா ஆயுதம்.

வளைவாய்—சூழ்ந்த வாயுடைய; எங்கும் கூர்மையுடை
நேமி—சக்கரம்.

6. சுடராழி சங்கேந்தி அளிக்கின்ற மாயப்பிரான் (2-3-10).

7. வலக்கையாழி இடக்கைச் சங்கம் இவையுடைய வண்ணனை (6-4-9).

மால் வண்ணனை—கறுத்த திருமேனியுடையவனை.

8. சங்கு வில் வாள் தண்டு சக்கரக் கையற்கு (6-6-2).

9. வெள்ளைச் சுரி சங்கொடாழி ஏந்தி (7-3-1)
சங்கொடு ஆழி ஏந்தி.

10. விடலில் சக்கரத் தண்ணலை (2-9-11).
கையை விட்டு நீங்காத சக்கரத்தையுடைய பெருமானை

11. எப்போதுங் கை கழலா நேமியான் நம்மேல் வினை கடி (பெ. திரு. 87).

நம்மேல் வினைகடிவான்—நமது வினைகளைப் போக்கு காக. கை கழலா நேமியான்—கையை விட்டு நீங்காமல் சக்கர ஏந்துபவன்.

இந்த ஆயுதங்களே பகைவர் அஞ்சுமாறு விளங்குகின்ற

12. அடலாழி யம்மானை (1-4-10).
அடல் ஆழி—விரோதிகளை அழிப்பதே இயல்பான சக்

13. பொருமா நீள் படை ஆழி சங்கத்தொடு (1-10-1).

பொருமா நீள் படை—விரோதிகளை அழிப்பதில் முனை இத்தாலே மிகச் சிறந்தனவாய், வடிவோட்ட வளரக் கட யுள்ள சக்கரத்தோடும் சங்கோடும்.

14. வென்றி வில்லும் தண்டும் வாளும் சக்கரமும் சங் (5-5-3).

வென்றி—வெற்றி கொள்ளும்.

15. சீறா வெரியுந் திருநேமி வலவா! (6-10-2).

(அசுரர் குலங்களை நீறாக்கி) சீறா—சீறி. எரியும்—அ கக்குகின்றன.

16. திண்பூஞ் சுடர் நுதி நேமியஞ் செல்வர் (திரு வி. 9).
திண்ணியதாய், அழகியதாய், ஒளியும் வாயுமுடைய ச ஏந்தும் பெருமான்.

17. ஒண்மை யுடைய உலக்கை ஒள்வாள் தண்டு கொண்டு புள்ளூர்ந்து (3-10-1).

தண்டு—கதை. ஒள்—ஒளியுடைய; கூரான. புள்—கருடன்.

## 1. 17. அணை

1. அணைவது அரவணைமேல் (2-8-1).
2. நாகணை மிசை நம்பிரான் (5-10-11).
3. சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை (8-7-11).
சுடர்—சோதி அடர்ந்த.
4. பைகொள் பாம்பேறி உறைபரனே! (3-8-4)
பை—படம்

## 1. 18. வாகனம்

1. தூவியம் புள்ளுடையான் (4-5-4).

அம் தூவி புள்—அழகிய சிறகுகளுடைய கருடன். கருடனை வாகனமாக உடையவன் பரமன்.

2. ஆடும் பறவை மிசைக் கண்டு (7-10-3)
அழகிய நடையுடைய கருடன்மேல் கண்டு.
3. பொருசிறைப்புள் உவந்தேறும் (1-9-3).
பொருசிறை—அடர்ந்த சிறகுகளுடைய.
4. கறையணி மூக்குடைப் புள்ளைக் கடாவி அசுரரைக் காய்ந்த அம்மான் (3-10-2).

கறை அணி மூக்குடை—முட்டை பக்குவமாவதற்கு முன்னே உடைக்கையாலே நுனியில் கருகுதலாகிய அடையாளமுடைய அலகு வாய்ந்த கருடன்.

5 காய்சினப் பறவை யூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார் முகில்போல் (9 2-6)

காய் சினப் பறவை—பகைவர்களிடம் மிகுந்த சீற்றமுடைய கருடன்.

## 1. 19. கொடி

1. ஏறும் இருஞ்சிறைப்புள், அதுவே கொடியா உயர்த்தானே! (8-5-9).
2. வெஞ்சிறைப்புள் ளுயர்த்தார்க்கு (1-4-1).

வெம் சிறை புள்—பறந்து வரும்போதே பகைவர்களை முடித்துக்கொண்டு வரும் கருடன். உயர்த்தார்க்கு—கொடியிலே கொண்டவருக்கு.

3. கொடி மன்னு புள்ளுடையண்ணல் (4-1-9)

4, கருளப்புட்கொடி சக்கரப் படை வான நாட! (5-7-3).
கருளன் — கருடன்

5. நிறை புகழஞ்சிறைப் புள்ளின் கொடியானை (9-4-10)
கொடியான் — கொடியுடையவன்

## 1. 2. தேவிமார்

தேவிமார் இருமருங்கிலும் அமர்ந்து இப்பெருமானது பேரெழிலை அனுபவிப்பர். தேவிமார் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டி, நீளாதேவி

1. பூவினை மேவிய தேவி மணாளனை (திருவி. 89).

பூ—தாமரை. பூவினை—பூவின் மேல்; இவளது திருமேனியின் மென்மை, பரிமளம் குறிப்பு.

2, மைய கண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினன் (4-5-2).

இவளது கண்ணழகில் ஆழ்ந்திருப்பவன்.

3. ஒசிந்த ஒண் மலராள் கொழுநன் (6-7-8).

இவளோடு எப்போதும் இணைந்திருப்பதால் துவண்டிருப்பன் இவளுக்கு நாயகன்.

4. மணிமாமை குறைவில்லா மலர்மாதர் உறைமார்பன் (4-8-2).
புகரோடு விளங்குபவள்.

5. பாரணங்காளன் (10-5-2)
பாரணங்கு—பூமிப் பிராட்டி.

6. குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளுந் திருவும் நிழற் போல் வனர் (திருவி. 43).

குழல் கோவலர் மடப்பாவை—அழகிய குழற்கற்றையுடையவளாய், ஆயர் குலத்தில் அவதரித்த நப்பின்னைப் பிராட்டி.

7. உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர், மடமகள் (1-9-4).

காதல்: அகலகில்லேன் இறையும் என்றவாறு பெருகும் காதல்.

8. நிறைவினாற் குறைவில்லா நெடும் பணைத்தோள் மடப் பின்னை (4-8-4).

நிறைவு—பெண்மைக்கான பூர்த்தி. குறைவில்லா—அடர்ந்துள்ள. நெடும் பணை தோள்—நீண்டு பணைத்த தோளுடைய மடம்—மடப்பம்.

## 1. 21. பரிஜனங்கள்

பெருமானும் பிராட்டிமாரும் கூடியுள்ள சேர்த்தியில் கைங்கர்யம் செய்வோர் ஆதிசேஷன், கருடன், சேனைத் தலைவர் போல்வார்

1. அயர்வறு மமரர்களதிபதி (1-1-1).

அயர்வு அறும்—பகவானை அனுபவிப்பதில் தடங்கல் இல்லாத. அமரர்—நித்தியசூரிகள். அதிபதி—தலைவன்; இவர்களிலும் மேம்பட்ட தலைவன்

2. அயர்விலமரர்களாதிக் கொழுந்தை (1-7-4).

அயர்வு இல்—பகவத் விஷயத்தில் மறதியில்லாத. ஆதி கொழுந்தை—இவர்களது வாழ்வுக்குக் காரணமாய் இவர்களுள் முக்கியமாக இருப்பவன்.

3. விண்ணோர் பரவ நின்ற நாதனை (திருவி. 79).
விண்ணோர்—நித்தியசூரிகள்.

4. கலக்க மில்லா நல்தவ முனிவர் கரை கண்டோர், துளக்க மில்லா வானவரெல்லாந் தொழுவார்கள் (8-3-10).

கலக்கம் இல்லா—உலகப் பிறவியால் நிகழும் கலக்கம் இல்லாத. நல் தவ முனிவர்—ஸநகாதி முனிவர். கரை கண்டோர்—உலக வாழ்க்கையாகிய கடலைக் கடந்து வந்த முக்தர் (மோக்ஷம் பெற்றவர்). துளக்கம்—சலனம் வானவர்—நித்தியசூரிகள்.

5. பேர் வானவர்கள் பிதற்றும் பெருமையனை (10-4-1).

வானவர்கள்—நித்தியசூரிகள். பேர்—திருநாமங்களை. பிதற்றும்—விருப்பாமேல அளவு கெடக் கூறும். பெருமையன்—பெருமை வாய்ந்தவன்.

## உ. கல்யாண குணங்கள்

பெருமானது குணங்கள் எண்ணிறந்தன. இவற்றுள் சில. இவனது இயல்பை விவரிப்பன; சில அடியார்கள் அனுபவித்து மகிழ்வதற்காவன; பகைவர்களுக்கு அச்சம் விளைவிப்பன சில. இவை மேல் வரம்பில்லாமல மேலை மேலும் ஓங்கி விளங்கும் என்கிறார் ஆழ்வார். யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ—இவற்றை அனுபவித்து விளக்கும் வாசகங்கள் விவரிக்க இயலாமல் செயலற்று மீண்டன என்கிறது தைத்திரீயம்.

## 2. 1. ஞானம்

இது சங்கல்ப ஞானம் எனப்பெறும். பிரபஞ்சத்தில் எங்கும் நிகழ்வனவற்றை ஒரே காலத்தில் நேரிற் காண்பது போல் அறியும் பேராற்றல் இது.

1. உணர் முழு நலம் (1-1-2).

முழு உணர்வும் முழு நலமுமான ஞான ஆனந்த மயமானவன். ''ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்''.

2. மிக்க ஞான மூர்த்தியாய வேத விளக்கினை (4-7-10).

அளவிட முடியாத ஞான ஸ்வரூபனாய், வேதமாகிய விளக்காலே காணப்படுவோன்.

3. ஆர்ந்த ஞானச் சுடராகி (1-5-10).

பரிபூர்ணமாய், ஞானத்தின் ஒளியுடையவனாய்.

4. செய்ய சூழ் சுடர் ஞானமாய் வெளிப்பட்டிவை படைத்தான் (3-6-1).

செய்ய சூழ் சுடர் ஞானமாய்—செவ்வியதாய், சூழ்லதாய்க் கொண்டு, ஒளிர்கின்ற சங்கல்ப ஞானம் இயல்பாகவே உடையவன். வெளிப்பட்டு—படைப்பதற்கு முற்பட்டு. இவை படைத்தான்—எல்லாவற்றையும் படைத்தான்.

5. வருந்தாத ஞானமாய் வரம்பின்றி முழுதியன்றாய்(3-1-5).

வருந்தாத ஞானமாய்—முயற்சி ஏதுமில்லாமல் இயல்பாகப் பெற்ற ஞானம் வாய்ந்தவனாய். வரம்பு இன்றி—எல்லையில்லாமல். முழுது இயன்றாய்—எல்லாப் பொருள்களிலும் இருப்பவனாய்.

6. மாசூணா ஞானமாய் முழுதுமாய் (3-1-8).

மாசூணா—ஐயந்திரிபுகளாகிய இழுக்கு இல்லாமல். முழுதுமாய்—யாவற்றையும் உனதாக்கிக் கொண்டு.

7. மழுங்காத ஞானமே படையாக (3-1-9).

மழுங்காத—குறைவேயின்றி அடர்ந்துள்ள. படையாக—பரிகரமாக, உதவியாகக் கொண்டு.

## 2. 2. ஆனந்தம்

தைத்திரீய உபநிஷத்தில் பகவான் ஆனந்த மயன் என்று போற்றப்படுகிறான். இவன் கொள்ளும் ஆனந்தம் பரிபூர்ண மானது; இவன் அனுபவிப்பது பேரின்பம்.

1. முட்டில் பல்போகத் தொருதனி நாயகன் (3-10-3).

முட்டு இல்—முடிவே யில்லாத. பல் போகத்து—பலவகையாக இன்பம் வாய்ந்த.

2. வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்த நம் அச்சுதன் (4-5-3).

வீவு இல் - குறைவே காணாத. இன்பம் மிக—இன்பம் பெருக. எல்லை நிகழ்ந்த—மிகுதியான எல்லையாயிருக்கும்; மிகுந்த என்றவாறு.

3. வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய் (8-1-9).

வான்—பரமபதத்தில். உயர் இன்பம்—மேன்மேலும் பெருகும் இன்பத்தை. மன்னி—பெற்று. வீற்றிருந்தாய்—பெருமையுடன் விளங்குகிறாய்.

4. (1) கடிசேர் நாற்றத்துள்ளாலை, (2) இன்பத்துன்பக் கழி நேர்மை, ஒழியா இன்பப் பெருமையோன், (3) உணர்விலும்பர் ஒருவனே (8-8-2).

(1) கடிசேர் நாற்றத்து உள் ஆலை—பரிமளமே அடர்ந்து பரிமள மயமான தேக்கம். ஆலை—மது; "ஸர்வ கந்த: ஸர்வரஸ" என்பது குறிப்பு. (2) இன்பத் துன்பக் கழி நேர்மை—இன்பத்திற்கான துன்பம்: அற்பமாயிருத்தல், நிலையற்றது என்ற காரணங்களால் காணும் குறைவு. இவை கழி நேர்மை ஒழியா—இவை நீங்கி, இன்பம் சிறிதேனும் குறையாதவாறு விளங்குவோன், (3) உணர்வில்—ஞானத்தால். உம்பர் ஒருவன் - மேம்பட்டவன். ஒருவன்—யாவரினும் சிறப்புடையவன்.

## 2. 3. செல்வம்

இவன் யாவர்க்கும் ஈசன்; யாவரையும் தனக்காக்கிக் கொண்டு காக்கும் பேராற்றல் வாய்ந்தவன். ஈசன்: இப்பண்பு ஐச்வர்யம். ஸ்ரீவைகுண்டமும் அண்டங்கள் யாவும இவனதுடைமை. ஸ்ரீவைகுண்டம் நித்யமாயிருப்பது, ஆதலால் நித்ய விபூதி. அண்டங்கள் இவனது லீலைக்கானவை; ஆதலால் இவை லீலா விபூதி; இவை இரண்டும் உபய விபூதி எனப்பெறும். விபூதி—செல்வம். இவன் உபய விபூதி நாதன். உபய விபூதியும் இவனுக்கு ஐச்வர்யம், உடைமை.

1. ஈசன் என் கருமாணிக்கம் என் செங்கோலக் கண்ணன், விண்ணோர் நாயகன் (2-7-1).

எனக்கு நாதன், நித்ய ஸூரிகளுக்கு நாதன்; ஆதலால் உபய விபூதி நாதன்.

2. உயிர்கள் எல்லா உலகு முடையவன் (3-2-11).

எல்லா உலகங்களும் இவற்றில் வாழும் உயிர்களும் உடையவன்.

3. ஓர் ஆயிரமாய் உலகேழ் அளிக்கும், பேர் ஆயிரம் கொண்டதோர் பீடு உடையன் (9-3-1).

பீடு—மேருமை. பேர்கள் ஆயிரங்களாக வாய்ந்தவன். ஒவ்வொரு பேரும் ஆயிரம் வகைகளிலே உயிர்களைக் காக்கும்.

4. அமைவுடை அமரரும் யாவையும் யாவரும் தானாம், அமைவுடை நாரணன் (1-3-3).

அமைவு—இயல்பு, நிறைவு. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவை கை வந்துள்ள பிரமன் முதலோரும், அசேதனங்களும் தானேயாகி விளங்கி, அமைவு உடை நாரணன்—இந்த தேவர்களுக்கு முதல்வனாக இருப்பதால் நாராயணன் என்ற திருநாமமுடையவன்.

5. வீற்றிருந்து ஏழுலகுந் தனிக்கோல் செல்ல (4-5-1).

வீற்றிருந்து—யாவர்க்கும் இறைவன் என்ற மேன்மையோடு விளங்கி ஏழு உலகும்-உலகங்கள் எழிலும் தனிக்கோல் செல்ல—ஒப்பற்ற தன் ஆணை நடக்குமாறு, அதாவது தனது ஆணைக்குட்பட்டவாறு

6. உண்டுமிழ்ந்தும் கடந்தும் இடந்தும்... கண்டவாற்றால் தானே உலகென நின்றான் றனை (4-5-10)

பூமியை உண்டும், உமிழ்ந்தும், கடந்தும் (அளந்தும்), இடந்தும் (வராகமாகி) கண்டவாறறல்—கண்கூடாக. உலகு தானே என நின்றான்—"பதிம் விச்வஸ்ய" (உலகுத்து நாயகனை) என்றவாறு உலகங்களுக்கு இறைவனாவான்.

## 2. 4. காரணம்

உலகங்களுக்கும் இவற்றில் வாழும் உயிர்களுக்கும் ஸ்ரீமந் நாராயணனே காரணம் "நான் பலவாகக் கடவேன்" என்று இவன் சங்கல்பித்து உலகைப் படைத்தான், சேதன அசேதனங்களானான், "இவற்றுள் புகுந்து இவற்றிற்கு நாம ரூபங்களைச் செய்வேன்" என்றான். ஆதலால் இவனே மூலவகைக் காரணமுமாவான். ஆக சேதன அசேதனங்களைச் சொல்லும் சொற்கள் தன்னளவாகுமாறு இவன் விளங்குகிறான்.

1. சோராத எப்பொருட்கும் ஆதியாம் சோதி (2-1-11).

சோராத—ஒன்றும் சோராதவாறு. ஆதி ஆம் சோதி—காரணமாகி, இதனால் பரஞ்சோதி என்றறியப்படுகிறான்.

2. மூவாத் தனி முதலாய் (2-8-5).

மூவா—மூப்பே இல்லாத. தனிமுதல்—தனக்கு வேறு உதவியில்லாமல், தானே காரணமாகி.

3. எப்பொருட்கும் வேர் முதலாய் வித்தாய்ப் பரந்து தனிநின்ற (2-8-10)

எல்லாவற்றிற்கும் இவன் வேர்—உபகரணங்களாகி, முதலாய்—செய்பவனாய். வித்தாய்—உபாதானமாய், செய்பொருளாய், இவ்வகையில் மூவகைக் காரணங்களுமாகி.

4. பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் (2-10-11).

பொருள் என்று—அடியார்களைப் பெறுவது தனக்குப் பயன் என்று

5. மண்ணும் நீரும் எரியும் நல் வாயுவும் விண்ணுமாய் விரியும் எம்பிரானையே (1-10-2).

மண், நீர், தீ, காற்று, ஆகாசம்—இவற்றுக்குக் காரணம் இவனே "பலவாகக் கடவேன்" என்று இவன் சங்கல்பித்தவாறு.

6. முனிமாப் பிரம முதல்வித்தாய் உலகம் மூன்றும் முளைப்பித்த (8-10-7).

முனி—மனனஞ் செய்பவன், "நான் பலவாகக் கடவேன்" என்று. மா பிரமம்—ப்ரஹ்மம் என்று யாவராலும் பாராட்டப் பெற்று. முதல் வித்தாய்—முக்கிய காரணமான உபாதானமாகி, செயல் பொருளாகி

7. கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள் படைத்தளித்துக் கெடுக்கும்—அப், புண்டரீகக் கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பன் (7-1-11).

குணங்கள் கொண்ட மூர்த்தி மூவராய்; படைத்து—பிரமனுக்கு அந்தர்யாமியாகி உலகைப் படைத்து. அளித்து—தானே விஷ்ணு ரூபமாய்க் காத்து. கெடுக்கும்—சிவனுக்கு அந்தர்யாமியாகி. அ புண்டரீக கொப்பூழ் புனல் பள்ளி அப்பனுக்கே—அனந்தசாயியான ஸ்ரீமந் நாராயணனுக்கே.

## 2. 5. எங்கும் பரந்திருத்தல்

இப்பண்பு வ்யாப்தி எனப் பெறும். "அநந்தம் ப்ரஹ்ம". இவன் எல்லாக் காலத்திலும், எல்லாப் பொருள்களிலும் அடர்ந்

இருக்கிறான். இந்தக் காலத்திலே தான் இருப்பவன், இந்த இடத்திலே தான் இருப்பவன், இந்தப் பொருளாக (ஜீவனாக)த் தான் இருப்பவன்—இம்மூன்றும் இவனுக்கு இல.

1. திடவிசும் பெரிவளி நீர் நிலமிவை மிசைப் படர் பொருள் முழுவதுமாய், —அவையவை தொறும், உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் (1-1-7).

திட விசும்பு—நிலையான ஆகாசம். எரி—தீ. வளி காற்று. படர் பொருள் முழுவதுமாய்—இவை ஆதாரமாகப் பரந்துள்ள பொருள்களுக்குச் செயல் பொருளாய் (உபாதானமாய்). அவை அவை தொறும்—அவை எல்லாவற்றிலும். கரந்து எங்கும் பரந்துளன்—யாவரும் அறியாதவாறு மறைந்து எல்லாவற்றுள்ளும் படர்ந்திருக்கிறான். எவ்வாறெனில், உடல் மிசை உயிரென—சரீரத்தை தரித்து இயங்கச் செய்யும் ஆத்மாவைப் போல.

2. (இவன் பரந்துள்ள இடங்கள்):சேண்பால வீடோ உயிரோ மற்றெப் பொருட்கும், ஏண் பாலும் சோரான் பரந்துளனாம் எங்குமே (2-8 8)

சேண் பால வீடு-உயர்ந்ததான பரம பதம் உயிர்—இதிலுள்ள முக்தாத்மாக்கள் மற்று எப்பொருட்கும்—தேவர், மனிதர் போன்ற ஜீவர்கள், அசேதனங்கள்—இவற்றுள் உறைந்திருக்கிறான் ஏண பாலும் — எண்ணப்படும் இடங்கள் எல்லாவற்றுள்ளும், அல்லது எட்டு திசைகளிலும், சோரான்—சிறிதளவும் விடமாட்டான்; எங்கும் பரந்துளன்.

3. (பரந்து பெறும் இன்பம்):
பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்
பரந்த அண்டமிதென, நில விசும்பொழிவறக்
கரந்த சிலிடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துளன் (1-1-10).

பரந்த அண்டம் இது என—பரந்த அண்டத்தில் அனுபவிக்கும் போகங்களுடன் பரந்த தண் பரவையுள்—பரந்து குளிர்ந்த நீருடைய கடலில் நீர் தொறும்—ஒவ்வொரு நீர்த்திவலையிலும். நிலம் விசும்பு ஒழிவற—இவ்வாறே நிலத்திலும் ஆகாசத்திலும், கரந்த சில் இடந்தொறும் —மிகவும் நுண்ணிய ஆத்மாக்களிலும், கரந்து — காணாத வகையில், எங்கும் — எல்லாவற்றுள்ளும் பரந்துளன்—வியாபித்திருக்கிறான்.

4. (எங்கும் ஞான ஒளியோடு அடர்ந்திருக்கிறான்)

சூழ்ச்சி ஞானச் சுடரொளியாகி—என்றும்
ஏழ்ச்சிக்கேடின்றி எங்கணும் நிறைந்த (3-2-4).

சூழ்ச்சி—எங்கும் சூழ்ந்துள்ள. ஞானசுடராகி—ஞானத்தாலே வந்த புகர் சோதிமயமாகி ஏழ்ச்சி—எழுதல் மலர்தல் கேடு—குறைதல் இன்றி—இல்லாமல், என்றும் எங்கணும—எப்போதும் எல்லா இடங்களிலும். நிறைந்த.

## 2. 6. காப்பு

அகாரத்தின் கருத்து, முக்கியமாக, காப்பவன் என்பது. இவன் ரக்ஷகன்; இத்தன்மை ரக்ஷகத்வம். காப்பு என்பது, அடியார் வேண்டாதவற்றை அகற்றுவதும், விரும்புவனவற்றை அளிப்பதும.

(1) அடியார் வேண்டாதவற்றை இவன் அகற்றும் வகை வருமாறு:

1. வன் சரண் சுரர்க்காய், அசுரர்க்கு வெங்கூற்றமுமாய் (6-3-8).

அமரர்க்குப் பகைவர்களான அசுரர்களை அழித்து, இவர்களுக்குப் புகலாவான் எம்பெருமான். வெம் கூற்றம்—கொடிய யமன்,

2. கூற்றியல் கஞ்சனைக் கொன்று, ஐவர்க்காய்க் கொடுஞ் சேனை தடிந்து (7-6-10).

கூற்று இயல்—யமன் போலே எப்போதும் உயிரைக் கவர்வதுவே குறிப்பாகவுடைய.

3. உட்குடை அசுரர் உயிரெல்லாமுண்ட ஒருவனே! (7-2-3).

உட்கு—மிடுக்கு. உடை—உடைய.

4. உடம்பினாற் குறைவில்லா உயிர் பிரிந்த மலைத் துண்டம், கிடந்தன போல் துணி பலவா அசுரர் குழாம் துணித்துகந்த (4-8-10).

தேவர் வேண்டாதது, அசுரர்களால் நேரும் தீமைகள், உடம்பினால் குறைவு இல்லா—திண்ணிய சரீரமுடைய. பலவா துணி—பலவகையாலும் துணிவுள்ள. அசுரர்கள் உயிர் நீத்துக் கிடந்தது, உயிர் பிரிந்த மலை துண்டம் பல போல—இந்திரனால் வெட்டப்பட்டுத் துண்டங்களாகக் கிடந்த மலைகள் போல். சிறகு

கொண்டு பறந்து துன்பிழைத்த மலைகளின் சிறகுகளை இந்திரன் வெட்டி வீழ்த்தினான்.

(2) அடியார் விரும்பியவற்றைச் செய்த வகை.

5. கூடி நீரைக் கடைந்தவாறும் (5-10-10)

அமரர்கள் இழந்த செல்வத்தை மீட்டுக் கொடுப்பதற்காக, இவர்களோடும் அசுரர்களோடும் கூடிப் பாற்கடலைக் கடைந்தான் பகவான்.

(3) உயிர்களை உய்விப்பதற்காக அவதாரங்கள்:

6. உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்? (திருவி. 1)

7. ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும், சாலப் பல நாள் உகந்தோறுயிர்கள் காப்பானே! (6-9-3)

உகந்தோறும்—அவதாரத்திற்கான யுகங்களிலே. ஞாலத்தூடே நடந்தும்—பூமியிலே எங்கும் நடந்து சென்றும். நின்றும்—வில் லேந்தி எதிரில் நின்றும் (ராமாவதாரத்தில்) கிடந்தும்—கடற் கரையில் ஒரு பெருங்கடல் போல் சயனித்துக் கொண்டும். இருந்தும்—பிராட்டியோடு இனிதுடன் வீற்றிருந்தும்.

(4) பெரிய பிராட்டியாரின் கடாக்ஷத்தாலே இவன் செய்யும் ரக்ஷணம்:

8. "என் திருமகள்சேர் மார்பனே என்னும்" என்னுடை ஆவியே! என்னும் (7-2-9).

என்னிடம் கருணை கொண்டுள்ள திருமகளின் அருள்நோக் காலே என்னைக் காப்பதால் எனக்கு உயிர் போன்றவன்.

9. என் திருமார்பன் றன்னை (7-6-7).

(5) நூல்கள் வெளியிட்டுக் காப்பாற்றும் வகை:

10. பண்புடை வேதம் பயந்த பரனுக்கு (6-6-5)

11. வேத(ம்) முன் விரித்தான் விரும்பிய கோயில் (2-10-10).

12 நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி (4-8-6).

## 2. 7. ஆண்மை

1. வளவேழ் உலகின் முதலாய வானோ ரிறையை (1-4-1).

வளம் ஏழ் உலகு—வளம் மிக்க ஏழு உலகுகள்.

2. உயிர்கள் எல்லா உலகமுடையவனை (3-2-11).

3. நாயகன் முழுவேழுலகுக்குமாய் (6-4-11).

4 பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே! பரமா! (2-6-10)

பாகின்ற—பரவியுள்ள.

5 பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும் நாயகனவனே (4-10-4)

6 மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்றன்னை (3-6-3).

## 28. இரட்டைக் குறிப்பு

ப்ரளயத்தின்போது இறைவன் சேதன அசேதனங்களைத் தன்னுள் ஒடுக்கி வைத்துக காக்கின்றான். பின்பு இவற்றைப் படைத்து இவற்றுள் உறைகின்றான். இத்தொடர்பாலே இவற்றின் இழிவுகள் இவனை அணுகவும் மாட்டா; சூரியனைக் கண்ட இருள்போலே தாமே நீங்கிவிடும் சேதனருக்கான இழிவுகள். துன்பம், பிணி, பசி, தாகம் கர்மம், பிறப்பு, இறப்பு போலவன: அசேதனங்களுக்கான இழிவுகள்: தோன்றுதல், மாறுதல், மறைதல் போல்வன. இத்தகைய இழிவுகளுக்கு எம்பெருமான் எதிர்நிலையாவான். இழிவுகளுக்கான எதிர்நிலையாகும் இந்த குணத்தோடு இணைத்துக் கூறுவது இவனது கல்யாண குணங்கள். இந்த இரட்டை குணத்தாலே இப்பெருமானது மேன்மை விளங்கும். இவை இரண்டும் உபய லிங்கம் எனப்பெறும். லிங்கம்—அடையாளம், குறிப்பு.

கல்யாண குணங்கள் என்பவை மங்களத்தைத் தருவன. பகவானுக்கு அனுகூலமாய் இன்பமே தருவன; அடியார்க்கு ஆனந்தத்தையும் மங்களத்தையும் அளிப்பன. இவனது கல்யாண குணங்களால் இழிவு என்பது இவனிடம் அணுக மாட்டா; ஸர்வேச்வரன் சிறந்த குணங்களுக்கு ஆகரமாக இருப்பவன்.

இவனுக்கே உரியனவான கல்யாண குணங்கள் உபநிஷத்துக்கள் இதிஹாஸங்கள், புராணங்கள், பாஞ்சராத்ர சாஸ்த்ரம் ஸ்ரீ பகவத்கீதை போல்வனவற்றுள் ஆங்காங்கே வெளியாகின்றன இவற்றை ஆசார்யர்கள் ஒன்று சேர்த்து வெளியிட்டுள்ளனர்;

இவற்றுள் முக்கியமானவை ஞானம், பலம், வீர்யம், ஐச்வர்யம், சக்தி, தேஜஸ் என்பன.

அடியார்கள் விஷயமாக வாய்ந்துள்ள குணங்கள் வருவன.

## 2. 9. தாயன்பு

இது வாத்ஸல்யம். அன்றீன்ற கன்றிடம் தாய்ப் பசு காட்டும் பேரன்பு வாத்ஸல்யம். இந்தப் பண்பால் பகவான் அடியார்களது குற்றங் குறைகளைப் புறக்கணித்து, அருளே பொழிகின்றான்.

(1) பொதுவாக:

1. எண்ணிலும் வரும், என் இனி வேண்டுவம்? (1-10 2).

நாம் பகவானது மேன்மையை மனத்துக் கொள்ளாமல், சாதாரணமாக, குடம், பசு என்பது போல் ஈச்வரன் என்று கருதினால், "இவன் நம்மை நினைக்கிறான்" என்று பகவான் நம்மிடம் வருவான். ஆதலால் இவன் நம்மைக் காப்பதற்கு வேறு என்ன வேண்டும்? அன்றி இவன் இருபத்தாறாவது தத்வம். எண்களை எண்ணும்போது இருபத்தாறு என்றால் ஈச்வரன் தன்னையே குறிப்பதாகக் களிப்பான். மாந்தரிடம் இவன் கொள்ளும் அன்பு இத்தகையது.

2. கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு (1-8-3) கண் ஆவான்—தாய் போல் காப்பவனாவான்.

3. சன்ம சன்மாந்தரங் காத்து அடியார்களைக் கொண்டு போய்த், தன்மை பெறுத்தித் தன தாளிணைக் கீழ்க் கொள்ளும் அப்பனை (3-7-7).

சன்ம சன்மாந்தரம்—சன்ம பரம்பரைகள். காத்து—பிறவி நேரா வண்ணம் காத்து. அடியார்களைக் கொண்டு போய் ஸ்ரீ வைகுண்டத்தில் ஏற்றுக் கொண்டு. தன்மை பெறுத்தி—ஸ்வரூபம் பெறுமாறு செய்து.

4. என்னுள் கலந்தவன் (2-5-3).

5 ஆய்கொண்ட சீர் வள்ளல் ஆழிப்பிரான் எனக்கே யுளன் (3-9-9).

ஆய்கொண்ட சீர்—வேதங்களில் ஆராயப் பெற்ற ஆனந்தம் போன்ற குணங்கள் வாய்ந்து பெருமையுடைய எனக்கே உளன்—என்னிடம் அன்பு கொண்டு நலங்கள பொழிகிறான்.

(2) மார்க்கண்டேயனிடம் அன்பு:

6 '''மார்க்கண்டேயனுக்கு வாழு நாள், இண்டைச் சடைமுடி ஈசனுடன் கொண்டு உசாச் செல்லக் கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்றது (7-5-7).

இண்டை சடைமுடி ஈசன்—மாலையும் சடையுமுடைய சிவன். உடன் கொண்டு—மார்க்கண்டேயனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு. உசா செல்ல—பரமனாகிய நாராயணனொடு உசாவுவதற்காகச் செல்ல. உடன் கொண்டு—தன்னுடன் சேர்த்துக் கொண்டு. சென்றது—பிரியாமலே நடந்து கொண்டது. (நாராயணன்) இவனைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டது.

(3) பிரகலாதனிடம் அன்பு:

7. சீற்றத் தோடருள் பெற்றவன் அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண் மால் (3-6-6).

சீற்றத்தோடு—இரணியன் விஷயமாகக் கொண்டது. இப் பெருமானது அருளைப் பெற்றவன் பிரகலாதன்.

பிரகலாதன் தனது அடிக்கீழ் ஒதுங்குமாறு நின்றவன் சிங்கப் பிரான். நின்ற—பிரேமத்தால், பகவான் காட்டிய எளிமை.

(4) சிவபெருமானிடம் பேரன்பு:

8. வாள்கொள் நீள் மழுவாளி உன் ஆகத்தான் (9-3-10).

வாள்—ஒளி, மழுவாளி—மழு ஏந்தும் சிவபெருமான். உன் ஆகத்தான்—உனது திருமார்பில் ஓரிடத்தில் உறைபவன்.

9. குமரனார் தாதை துன்பந் துடைத்த கோவிந்தனாரே (10-2-6).

குமாரனார் தாதை—சிவபெருமான். துன்பம்—பிரமன் இட்ட சாபத்தால் கையில் கபாலங் கொண்டு, அது நிரமபுவதற்காக எங்கும் பிச்சை நாடித் திரிநதது. துடைத்த—போக்கிய.

(5) பகைவனிடமும் பிரேமம்:

10. சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் திருவடி தாட்பா லடைந்த தன்மை (7-5-3).

சேட்பால்—நெடுங்காலமாகவே, பழம் பகைவன்—பழைமைப் பகையுடையவன். திருவடி—கண்ணபிரான் (கண்ணபிரானது), தாள்பால்—திருவடிகளில்.

## 2. 10. இயல்பில் கலத்தல்

இது சீல குணம், ஸௌசீல்யம் : பெரியவன் தாழ்ந்தோருடன், நீரோடு நீர் கலப்பது போல் இயல்பில் கலப்பது. இராமபிரான் வேடுவனோடும், குரங்கோடும், அரக்கனோடும் இயல்பில் கலந்து ''எழுவரானோம்'' என்றது எடுத்துக்காட்டு.

1. என்னுள் கலந்தவன் (2-5-3).

இதுவே பகவானுக்குத் திருநாமம் போலும்!

2 அந்தாமத் தன்பு செய்து என் ஆவிசேர் அம்மானுக்கு (2-5-1).

அந்தாமம்—பரமபதம்; பரமபதத்திலுள்ள நித்திய சூரிகள் குறிப்பு. இவர்களிடம் கொள்ளும் அன்பை என்னிடம் செய்து.

3. தானும் யானுமெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே (2-3-1).

தானும்—ஸர்வேச்வரனும். இயல்பில் கலந்தோம். எவ்வாறெனில்? தேனோடு தேனும், பாலோடு பாலும், நெய்யோடு நெய்யும், கன்னலோடு கன்னலும் கலப்பது போல. அன்றி எல்லா ரஸங்களும் தோன்றுமாறு கலந்தோம்.

## 2. 11. பெறுதற்கு எளிமை

இது ஸௌலப்யம்; எளிதில் கண்ணுக்கிலக்காவது. இந்திரன், பிரமன், சிவன் இவர்களும் தமது கண்ணால் காணக் கூடாதவன், மாந்தர் தமது ஊனக் கண்ணால் காணுமாறு தோன்றும் நிலை.

1. ஒரு மாணிக் குறளாகி நிமிர்ந்த, அக்கருமாணிக்க மென் கண்ணுள தாகுமே (1-10-1).

2. துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து (3-10-6).

3. எந்தாய்! தண் திருவேங்கடத்துள் நின்றாய் (2-6-9).

யாவரும் எளிதில் கண்டு வணங்குமாறு.

## 2. 12. நன்மனப் பான்மை

தன்னைப் பற்றியவர்களுக்கு எல்லா நன்மையும் உண்டாக வேண்டும் என்ற மனப்பான்மை, ஸௌஹார்தம் எனப்பெறும்

1. தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ள வல்ல, ஆர்ந்த புகழ் அச்சுதனை (3-5-11).

அச்சுதன் : அடியார்களை நழுவ விடாதவன்; இவர்களைக் காப்பதிலிருந்து நழுவாதவன்.

2 இசைவித்து என்னை உன் தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே! 5 8-9).

3. அடியானிவனென்று எனக்கு ஆரருள் செய்யும்,நெடியானை... (9-4-10).

## 2. 13. இளகும் மனம்

இளகும் மனமுடைமை மார்தவம் எனப்பெறும். ம்ருது, மார்தவம். அன்பர்களை விட்டுப் பிரிந்து வாழ இயலாமை; இவர்களது துயரத்தைப் பொறுக்க இயலாத திருவுள்ளத்தின் மென்மை.

1. பூந்தண் புனற்பொய்கை யானை இடர் கடிந்த. பூந்தண் துழாய் என் தனி நாயகன் (2-8-2).

பூ தண் புனல்—மலர்கள் அடர்ந்து, குளிர்ந்த நீர் வாய்ந்த.

2. சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை, உடலொடும் கொண்டு கொடுத்தவனை (3-10-5).

பிறந்த போதே மறைந்து போன பிள்ளைகள் நால்வரையும் கண்ணபிரான் வைதிகனுக்கு மீட்டுக் கொடுத்தது குறிப்பு.

## 2. 14. ஒப்புமை

இது ஸாம்யம் எனப்படும். ஸமம்; ஸமமாகக் கருதிப் பழகுவது ஸாம்யம். அன்பரது பிறவி, குணம், ஒழுக்கம் போன்றவற்றைக் கருதாது, இவர்களைத் தனக்குச் சமமாக நடத்துவது, இந்தக் குணம். ''தம்மையே ஒக்க அருள் செய்வர்'' என்கிறார் திருமங்கையாழ்வார்

1. உன்னதென்ன தாவியும் என்ன துன்ன தாவியும், இன்ன வண்ணமே நின்றாய் (4-3 8).

என் ஆத்ம ஸ்வரூபம் உனக்கு இன்பந் தருமாறும், உன் ஆத்ம ஸ்வரூபம் எனக்கு இன்பம் தருமாறும் நீ என்னுடன் பழகி நின்றாய்.

2. கோயில் கொண்டான் தன் திருக்கடித்தானத்தை கோயில் கொண்டான் அதனோடும் என் நெஞ்சகம் (8-6-5).

திருக்கடித்தானத்தைப் போலே என் நெஞ்சிலும் உறைந்து மகிழ்கின்றான்.

3. திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே என்தலையே திருமால் வைகுந்தமே திருவேங்கடமே எனதுடலே (10-7-8).

திருமாலிருஞ்சோலை, திருப்பாற் கடல். இந்த இரண்டு திவ்ய தேசங்களிலும் இவன் கொள்ளும் அன்பு என் தலை விஷயமாகக் காட்டப் பெறுகின்றது. எனது உடல்: திருமால் வைகுந்தம், திருவேங்கடம், என் உடல் இவனுக்கு அளிக்கும் இன்பம், ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடம் இவை அளிப்பன போன்றது.

## 2. 15. இனிமை

தன்னை வணங்கி அனுபவிக்கும் அன்பர்க்கு இவன் இன்பமயமாய் விளங்குகிறான். இது மாதுர்யம் என்பர். மதுரம்— இனிமை. மதுரம்; மாதுர்யம்.

1. அடியேன் மேவி அமர்கின்ற அமுதே! (6-10-7)

மேவி—அணுகி. அமர்கின்ற—எப்போதும் அனுபவிக்குமாறு இனிய.

2. ஆராவமுதாய் அடியேனாவியகமே தித்திப்பாய் (5-8-10).

ஆரா அமுதாய்—எவ்வளவு அனுபவித்தாலும் மேன்மேலும் அனுபவிக்க விரும்புமாறு இன்பமுள்ள. ஆவி அகமே—உனக்குப் பொருளான என் நெஞ்சுக்குள்ளேயும்.

3. கனியைக் கருப்பின்சாற்றைக் கட்டியைத் தேனை யமுதை (3-5-6)

கனி—கண்டபோதே நுகர்வது. கரும்பின் இன் சாறு—கோதில்லாத கருப்பஞ்சாறு. கட்டி - இச்சுவையே அடர்ந்த கட்டி. (பல மலர்களிலிருந்து பெறுவதால்) எல்லா ரசங்களும் வாய்ந்தது தேன், அமுது இனிமையே வாய்ந்தது.

4. முன் நல்யாழ் பயில்நூல் நரம்பின் முதிர் சுவையே! (2-3-7).

செவிகளுக்கு விருந்து: முன்...நரம்பின்—அநாதியாகச் சிறந்ததாய் யாழைப் பற்றிய கீத சாஸ்த்ரத்தில் விவரித்த லக்ஷணம் தப்பாதவாறு அமைந்துள்ள நரம்பாலே வெளிவரும் இனிமை போலே. முதிர் சுவையே!— சிறந்த சுவை போல் இனிமை யளிப்பவனே!

## 2. 16. வீறு

வீறு என்பது தனிப்பட்ட மேன்மை. பிறரது குற்றங்களைக் கண்ணெடுத்துப் பாராமல் அருள் செய்வதே இயல்பாக வுடைய பெருமை இது அடியார்களது துன்பங்களைத் தீர்த்துத் தன்பால் இவர்களைச் சேர்த்துக் கொள்ளும் பரந்த மனப்பான்மையுமாகும். இப்பண்பு காம்பீர்யம். எனப்பெறும், கம்பீரம்—பெருமையால் வரும் மேம்பாடு; இத்தன்மை காம்பீர்யம் ''ஸமுத்ர இவ காம்பீர்யே'' என்று வால்மீகி இராமனைப் பற்றிக் கூறுகிறார்.

1. சேர்ந்தார் தீவினைகட்கு அருநஞ்சைத் திண்மதியை (2-3-6).

(உன்னை)அடைந்தவர்களது பாவங்களுக்கு நஞ்சாகி திண் மதியை—அவர்களுக்கு அருள் செய்வதே திண்ணமாக நினைக்கும் உன்னை. அருள் செய்வதில் திண்மை கம்பீரமான குணம்.

2. என்னுள் புகுந்திருந்து தீதவம் கெடுக்கும் அமுதம் (2-7-3).

தீது—அறிந்து செய்யும் தீவினைகள். அவம்—அறியாமல் செய்த குற்றம். கெடுக்கும் அமுதம்—இவை தாமே கெடுமாறு, அளவு கடந்த இனிமை வாய்ந்தவன். இவ்வாறான இனிமை கம்பீரமான குணம். ''போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' இவனது அருளாலே.

## 2. 17. காருண்யம்

பிறரது துன்பங் கண்டு ''ஐயோ!'' என்று இரங்கி, அதைத் தவிர்க்க முற்படுவது கருணையினாலே. பகவான் செய்த அவதாரங்கள் பலவும் இக்கருணையினாலேயே இந்திரனிடம் கருணை கொண்டு அவன் இழந்த உலகங்கள் மூன்றையும் மீட்டுக் கொடுக்க பகவான் தன்னை வாமனனாகக் குறுக்கிக் கொண்டு, நடந்து சென்று, மூவடி மண் இரந்து, பின்பு ஓங்கி எல்லா உலகங்களையும் அளந்தது, இந்தக் கருணையினாலேயே.

1. அமரர்க்கு அமுது ஈந்த ஆயர் கொழுந்தை (1-7-9).

2. தொல்லைக்கண் மாத்தானைக் கெல்லாம் ஓர் ஐவரையே மாறாககக் காத்தானை (பெ. திரு. 19).

தொல்லைக் கண் மா தானைக்கு எல்லாம்—பழையதான பூமி தெளியுமாறு அடர்ந்த சேனைகளால் துன்பப்நேரிடா வாறு ஓர் ஐவரை—பாண்டவர்களை. மாறாக—இந்தச் சேனைகளுக்கு

எதிரிகளாகச் செய்து. காத்தானை—கருணை கொண்டு பல வகைகளாலும் காத்தவனை.

3. அடைக்கலத்து ஓங்கு—கமலத்தலர் அயன் சென்னி என்னும், முடைக்கலத்து ஊண் முன் அரனுக்கு நீக்கியை (திரு. வி. 86).

அடைக்கலத்து ஓங்கு—ஸர்வேச்வரனது காப்பிலுற்று கமலத்து அலர் அயன்—கொப்பூழ்த் தாமரையில் வாழும் பிரமனது. சென்னி—தலை. முடை கலத்து ஊண்—நாற்ற மடர்ந்த இந்தக் கபாலத்தில் பிச்சை ஏற்று உண்பதாகிய துன்பத்தை. நீக்கியை—நீக்கிய பகவானான உன்னை.

## 2. 18. வள்ளல் தன்மை

வரையின்றி வழங்குவோன் வள்ளல், உதாரன். இப்பண்பு, ஔதார்யம். ஸர்வேச்வரன் தன்னையும் தன் அன்பர்க்குக், கொடுக்கும் பெரும் பண்புடையவன்.

1. எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-11).

கற்பகம் நாம் விரும்புவனவற்றையே தரும். இவன் தன்னை யும் கொடுப்பவன்; தன் அன்பர்க்கு வசமானவன்.

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-3). ஔதார்யத்தின் எல்லை.

3. கொள்ளக் குறைவிலன், வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல் மணிவண்ணன் (3-9-5).

கொள்ள குறைவிலன்—இவனைக் கவிபாடினால், இவனிட மிருந்து பெறும் நன்மைக்கு ஒரு குறையு மில்லாதவாறு பூர்ணன். வேண்டிற்று எல்லாம் தரும்—நாம் வேண்டுவன எல்லாம் தருவான். கோது இல்—தரம் பார்த்துக் கொடுப்பது, கைம் மாறாகக் கொடுப்பது ஆகிய குற்றமில்லாத. வள்ளல்—பெரிய உதாரன்.

## 2. 19. உரை நயம்

மனங்கவருமாறு இனிமையாகப் பேசுவது உரைநயம். இது சாதுர்யம் என்பது சதுரன் (பேசுவதில்) ஆற்றல் மிக்கவன்; சாதுர்யம்: இப்பண்பு.

1. சொன்னவன் தான் மாவலி! மூவடி தா என்ற கள்வனே! (3-8-9).

"மாவலி! நான் உன்னிடமிருந்து மூவடி மண் கொள்வேன். தருவாய்" என்று இனிய மதலைப் பேச்சாலே மாவலியைத் தன் வசமாக்கிக் கொண்டவனே! வேந்தனிடம் யாசகம் செய்யும் போது பேசும் தரமன்று, இது; எனினும் இனிமையால் மனத்தைக் கவர்ந்தது.

2. பழுத்த நல்ல அமுதின் இன் சாற்று வெள்ளம் பாவியேன் மனமகந்தொறும் உள்புக்கு அழுந்த நின் செங்கனி வாயின் கள்ளப் பணிமொழி (10-3-4).

கண்ணபிரானது பேச்சினிமையை ஓர் ஆய்ச்சி நிலையில் ஆழ்வார் விவரிக்கிறார். பழுத்த—பக்குவமான. அமுதின்—அமுத மயமான இன்—இனிமையான. சாற்று வெள்ளம்—இனிய சுவையின் பெருக்கு. பணிமொழி—உரைத்த அமுதமொழி.

## 2. 20. வீரியம்

உலகங்களுக்கெல்லாம் உபாதான காரணமாகி, யாவற்றையும் தன்னுள் வைத்துக் காத்து வெளியிடுவது வீரியம் என்ற பண்பு. இவ்வாறு உலகங்களை தரித்துப் பின் வெளியிடுவதால் எம்பெருமானுக்கு யாதோர் ஆயாசமு மில்லை.

1. நம்பனை ஞாலம் படைத்தவனைத் திருமார்பனை (3-7-8).

நம்பனை - நமக்குத் தஞ்சமாக நம்பப்படுவோனை.

2. முன்னிய மூவுலகு மவையாய் அவற்றைப் படைத்து (7-8-8).

முன்னிய — தோன்றித் தோன்றி அழிந்து பழையதாகப் போருகிற. மூவுலகு அவையாய்—மூன்று உலகங்களுந் தனக்கே யாக்கி.

3. மண் கொள் ஞாலத் துயிர்க்கெல்லாம் அருள் செய்யும் வானவரீசனை (3-6-11).

மண் கொள் ஞாலம்—மண்ணே முக்கியமான பொருளாக அமைந்த உலகம்.

4. கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்றன்னை (4-5-10).

தன்னுடைய லீலைகளாலே, தானே இவ்வுலகுக்கு அதிபதி என்று விளங்குவோனை.

## 2. 21. சக்தி

பிறர்க்குத் தலைவனாய் அடக்கியாளும் ஆற்றல் சக்தி என்பது. பிறரால் செய்ய இயலாதவற்றைச் செய்யும் பேராற்றலு மாம். இது அகடித-கடநா-ஸாமர்த்யம் எனப்பெறும்.

1. கருத்தில் தேவு மெல்லாப் பொருளும் வருத்தித்த மாயப் பிரானை (2-2-8).

கருத்தில்—தன் சங்கல்பத்தாலே, தேவும் எல்லாப் பொருளும்—தேவர் முதல் புல் வரையில் யாவரையும யாவற்றையும். வருத் தித்த—வர்த்தித்த, உண்டாக்கிய. மாயப் பிரான்—வியக்கத்தக்க பேராற்றல் வாய்ந்தவன்.

2. ...தன் உந்தியுள்ளே, வாய்த்த திசைமுகன் இந்திரன் வானவர் ஆக்கினான் தெய்வ உலகுகளே (2-2-9).

தனது திருநாபிக் கமலத்திலே தோன்றிய நான்முகன், பின்னும் இந்திரன், தேவர், தேவலோகங்கள் இவற்றை உண் டாக்கினான்.

3. யவரும் யாவையும் எல்லாப் பொருளும் கவர்வின்றித் தன்னுள் ஒடுங்க நின்ற, பவர் கொள் ஞானவெள்ளச் சுடர் மூர்த்தி (2-2-6).

## 2. 22. தேசு

தேசு—தேஜஸ்; இது வீர்யம், பலம் ஆகும். இவனைக் காணும் போதே எதிரிகள நடுநடுங்கிப் பிணமாகும நிலை.

1. குழாங்கொள் பேரரக்கன் குலம் வீய முனிந்தவனை. (2-3-11)

குழாம்கொள்—சுற்றத்தாரும் தன்னுடையோருமாக. வீய—அழியுமாறு. முனிந்தவனை—சீறியவனை; சீற்றத்தாலே பாதி உயிர் போயிற்று. "இவன் ஜிதக்ரோத:"—கோபமே யில்லாதவன். "சிறிதே முனிந்த திருமார்பன்" எதிரிகளைக் கணடு சிறிதளவே கோபங்கொண்டான.

2. அங்கப் பொழுதே அவன் வீயத்தோன்றிய என் சிங்கப்பிரான் (2-8-9).

அங்கு—இரணியன் சுட்டிய இடத்திலேயே. வீய தோன்றிய—தோன்றிய போதே இரணியன் வலிமை முற்றும இழந்து வாட்டிய கோரைபோலானான; பின்பு வகிர்வது எளிதாயிற்று.

3. ஆளியைக் காண் பரியாய் அரிகாண் நரியாய் அரக்கர் ஊளையிட்டு அன்று இலங்கை கடந்து பிலம்புக் கொளிப்ப (7-6-8).

இராவணனுக்குமுன் இலங்கையில் வாழ்ந்து வந்த அரக்கரின் கதி. ஆளியை காண் பரியாய்—ஆளி என்ற கொடிய விலங்கைக் கண்டு ஒடுங்கும் குதிரைபோல், பரி—குதிரை. அரி காண் நரி—சிங்கத்தைக் காணும் நரிபோல். பிலம்—பாதாளம்.

## 2. 23. செயல் உறுதிப்பாடு

செய்யும் செயலில் ஊன்றியிருத்தல் ஸ்திரமாக இருத்தல் என்பர்; இப்பண்பு ஸ்தைர்யம். அடியார்களைக் காப்பதில் ஊன்றியிருப்பவன், இறைவன்; ஆதலால் அச்யுதன் எனப் பெறுகிறான்.

1. பகலிரா என்பதுவும் பரவியாது எம்மை, இகல் செய்து இருபொழுதும் ஆள்வர் (பெ. திரு. 81)

பகல்—என்னைக் காப்பதற்குத் தகுதியான காலம். இரா—தகுதியில்லாமை. என்னைக் காப்பதற்கு என்னிடம் தகுதி, தகுதியின்மை இவற்றைப் பாராமல், ஆராயாமல் இகல் செய்து—தீயனவற்றை அகற்றப் பெருமுயற்சி செய்து. ஆள்வர்—இவ்வகையிலே தமக் காக்கிக் கொள்வர்.

2. மறப்பற என்னுள்ளே மன்னினான் றன்னை (1-10-10).

மறப்பு என்பது நான் கொள்ளாதவாறு என்னுள்ளே இருந்து காப்பாற்றுகின்ற. அன்றி, என்னைப் பற்றித் தனக்கு மறப்பு நேராமைக்காக என்னுள்ளே இருப்பவன்.

3. இன்றிப் போக இருவினையுங் கெடுத்து ஒன்றி யாக்கை புகாமை உய்யக்கொள்வான், நின்ற வேங்கடம்... (9-3-8).

இன்றி போக—முற்றிலும் நீங்குமாறு (இருவினைகள்). இதன் விளைவு, யாக்கை ஒன்றி புகாமை—பிறவியில்லாமல். உய்யக் கொள்வான்—உய்விப்பதற்கென்றே.

## 2. 24. மனத் திண்மை

திண்ணிய மனமுடையவன் தீரன்; இப்பண்பு தைர்யம். அடியார்களைக் காப்பதே மனத்திற் கொண்டு ஈச்வரன் அருள் புரிவான்; இவ்வாறு அருள்புரிவதே இவனது மனத்தில் திண்மையுறும்.

1. அல்லு(ம்) நன்பகலும் இடைவீடின்றி நல்கி என்னை விடான் நம்பி நம்பியே (1-10-8).

இவன் என்னிடம் இடையறாமல் நட்பைச் செய்து, என்னை விடுகிறதில்லை.

2. இருப்பேன் என்று என்நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-6).

3 திண்ணமென் மனத்துப்புகுந்தான் செறிந்துஇன்றே (10-8-8).

செறிந்து புகுந்தான் — பிரேமம் அடர்த்து, இதன் விளைவாகப் புகுந்தான். திண்ணம் — நிச்சயம்; இது நிகழுமோ என்று நினைக்க வேண்டா.

4. வந்தருளி என் நெஞ்சிங் கொண்ட வானவர் கொழுந்தே! (5-7-7).

அருள் செய்வதில் ஊன்றியிருந்தமை குறிப்பு.

எதிரிகள் விஷயமான குணங்கள் இரண்டு வருமாறு:

## 2. 25. பராக்ரமம்

பரன் — மாற்றான். ஆக்ரமித்தல்—வலிந்து கவர்தல் காணும் போதே பகைவர் குலையும்படி வாய்ந்த குணம் இது.

1. மாசின மாலி மாலிமா னென்று, அங்கவர் படக் கனன்று முன் நின்ற, காய்சின வேந்தே! (9-2-6).

மா சினம்—கொடிய சினமுடைய மாலி; ஓர் அரக்கன்; மாலி மான்—மகானான சுமாலி; ஓர் அரக்கன்; பேராற்றலால் மேன்மை. பட—அழியுமாறு. கனன்று—பெரிதும் சீற்றங்கொண்டு. இவர்கள் இராவணனுக்கு முன்னால் இலங்கையில் வாழ்ந்தவர்கள்.

2. பெயர்களாயிரமுடைய வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதக மணித் தடத்தினையே (10-1-8).

இராமபிரான் நீல மணிபோல் நிறமுடைய தடாகம் போன்றவன். இத்தடாகத்தில் ஆழ்ந்து உயிர் நீத்தவர்: பெயர்கள்

ஆயிரம் உடைய—செய்த கொடுமைகளாலே யஜ்ஞ சத்ரு, ப்ரஹ்ம சத்ரு போன்ற பேர்கள் கொண்ட அரக்கர் பலர்.

3. திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும் போர் தொலையப், பொரு சிறைப் புள்ளைக் கடாவிய மாயனை (3-10-4)

திரிபுரம் செற்றவன்—சிவபிரான். மகன்—முருகன். அங்கி—நாற்பத்தொன்பது அக்நிகள். பொரு சிறை புள்—கருடன். கடாவிய—கருடன் மேலேறி நடத்திய.

## 2. 26. போர்த் திறன்

போரில் ஆற்றல் மிக்கவன் சூரன்; இவனது பண்பு சௌர்யம் அடியார்களது பகைவர்களை எளிதில் அழிக்கும் பேராற்றல் வாய்ந்தவன் எம்பெருமான்.

1. செய்குந் தாவருந் தீமை உன் அடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா! (2-6-1).

செய்கும்—செய்யப்பட்ட. தா அரும் தீமை—கடக்க அரியன வான தீமைகள்; மாற்றில்லாத கொடுமைகள் (அசுரர்கள் செய்வன). செய்—செய்கின்ற குந்தா! குந்தன் என்பது பகவானது திருநாமங்களுள் ஒன்று.

2. வாண னாயிரம் தோள் துணித்ததும் (6-4-8).

3 அப்பன், நீறுபட இலங்கை செற்ற நேரே (7-4-7).

நீறுபட—(படைகள்) நீறாகுமாறு.

4. நிகர்ச் செம்பங்கி எரிவிழிகள் நீண்ட அசுரர் உயிரெல்லாம், தகர்த்துண் டுழலும் புட்பாகன் (8-10-6).

அசுரர்களது பயங்கரமான தோற்றம்: நிகர்—ஒளியுள்ள. செம் பங்கி—செம்மயிர். எரி விழிகள்—தழற்கற்றை போன்ற விழிகள். நீண்ட—பெரிய வடிவுடைய, இவர்களைத் தகர்த்தவன் புள் பாகன்—பகவான், கருடனை ஊர்தியாகக் கொண்டவன்.

5. மிகுந் தானவன் மரர்பகலம் இருகூறா, நகந்தாய் நரசிங்க

மிகும் தானவன்—பகைமைக்கு எல்லையில்லாத இரணியன். மார்பு அகலம்—அகன்ற மார்பை, நகந்தாய்—நகத்தாய், நகத்தையுடையவனே.

## 2. 27. மற்றைய பண்புகள்

ஸர்வேச்வரனது குணங்களுள் இரண்டு சிறப்புடையனவாக உபநிஷத்துக்கள் புகழ்கின்றன: ஸத்ய காமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம். இவனது விருப்பங்கள் யாவும் அடியார்களைப் பற்றியே; இந்த விருப்பங்கள் யாவும் எப்போதும் இடையறாமல் நிகழ்வன, இவன் ஸத்ய ஸங்கல்பன்: அடியார்களைக் காப்பதன் பொருட்டு இவன் கொள்ளும் முயற்சிகள்—அவதாரம்செய்வது போல்வன—அமோகமாக நிகழ்வன.

1. முட்டில் பல் போகத்து ஒரு தனி நாயகன் (3-10-5).

முட்டு இல்—தடங்கல் இல்லாமல். பல் போகம்—பலவகைப் பட்ட இன்ப அநுபவங்தள், அடியாருடன் அனுபவிக்கும் இன்பம்.

2. மேவிய உலகம் மூன்றவை ஆட்சி வேண்டு வேண்டுருவம் நின்னுருவம் (8-1-1).

மேவிய உலகம் மூன்று அவை ஆட்சி—தனது ஆணைக்குட்பட்ட மூன்று உலகங்களையும் ஆள்வது. வேண்டு வேண்டு உருவம்—காப்பதற்காகத் தான் ஏற்றுக்கொள்ள விரும்பும் உருவங்கள்.

அடியார்களைப் பெறுவதற்குத் தான் செய்யும் முயற்சிகள் பலித்தனவெனில், இவன் மகிழும் நிலை க்ருதி என்பது; தான் க்ருத க்ருத்யனானமையால் மகிழ்கிறான். விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டியபிறகு இராமன் தான் க்ருத க்ருத்யன் என்று கருதினான்.

3. இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் (10-8-9).

இவன் கொண்ட முயற்சிகளின் பயன் இது

அன்றியும், சிறிதளவு நலம் கண்டாலும் இதனைப் பெரிதும் பாராட்டும் பெருமனமுடையவன் ஸர்வேச்வரன்; இவன் க்ருதஜ்ஞன், செய்ந்நன்றி யறிந்தவன்.

4. நாம் பெருமானைச் சிக்கெனப் பிடித்ததாகவும், இனி நம்மை விட்டு இவன் அகலமாட்டான் என்று ஆழ்வார் சொல்லியதை பகவான் கேட்டு, நன்றியைக் காட்டிய வகை.

எங்கும் பக்க(ம்) நோக்கறியான் என் செந்தாமரைக் கண்ணனே (2-6-2).

5. கேசவன் தமர் கீழ் மேல் எமரேழ் எழுபிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா! (2-7-1)

## 3. வியூகம்

வியூகம் என்பது வகுப்பு. உயிர்களைக் காப்பாற்றுவதற்காக, ஸ்ரீமந்நாராயணன்—பரமபத வாஸுதேவன் மூன்று வகைத் திருமேனிகளோடு விளங்குகிறான்—ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று. ப்ரளய காலத்தில் மஹார்ணவத்தில் (எங்கும் பரந்த பெருங்கடலில்) துயிலும் நிலையைத்தான் ஆழ்வார் விளக்கியிருக்கிறார். இவ்வாறு துயில்வது யோக நித்திரை; உயிர்களைக் காக்கும் வகையை ஆய்ந்து கொண்டிருக்கும் நிலை. பிரமன், சிவன் போன்ற தெய்வங்கள் பரத்வ நிலையில் இவர்களைக் காண இயலாது; இவர்களுக்குக் காட்சி அளிப்பதற்கே வியூக நிலை.

1. உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை (5-4-11).
2. பையரவினணைப் பள்ளியினானுக்கு (6-6-7).

   பை அரவு—படங்களுடைய ஆதிசேஷன்.
3. படவரவினணைக் கிடந்த பரஞ்சுடர் (3-6-10).
4. வெள்ளத் தடங்கடலுள் விட நாகணை மேல் மருவி உள்ளப் பல் யோகு செய்தி (7-8-4).

   யோகு செய்தி – யோகஞ் செய்கிறாய்.
5. ஆலி னீளிலை ஏழுலகுண்டு, அன்று நீ கிடந்தாய் (6-2-4).

   ஆலின் நீள் இலை—முகிழ் விரிந்து நீளுபளவான ஆலிலை, சிறிய தளிர்.
6. ஞாலம் போனகம் பற்றி, ஓர் முற்றா உருவாகி ஆலம் பேரிலை அன்னவசஞ் செய்யுமம் மானே! (8-3-4).

   பேரிலை—சிறு தளிர்.

7. நச்சுவினைக் கவர்தலை அரவி னமளியேறி
எறிகடல் நடுவுள் அறிதுயி லமர்ந்து
சிவனய னிந்திரன் இவர்முத லனைத்தோர்
தெய்வக் குழாங்கள் கைதொ ழக் கிடந்த
தாமரை யுந்தித் தனிப்பெரு நாயக! (திருவா. 1)

நச்சுவினை—எதிரிகளை முடிக்கும் நச்சுத் தொழில், கவர்தலை – கவிந்த படங்கள், அமளி—ஆதிசேஷனாகிய படுக்கை.

8. ...இரும் பொருட்
கெல்லாம் அரும்பெறல் தனிவித்து ஒருதா
னாகித் தெய்வ நான்முகக் கொழுமுளை
யீன்று—முக் கணீசனொடு தேவுபல நுதலி
மூவுலகும் விளைத்த உந்தி
மாயக் கடவுள் மாமுத லடியே (திருவா. 8).

இரும்பொருட்கு எல்லாம்—எண்ணிறந்த ஆத்மாக்களுக்கு. அரும்பெறல்—அரிய பொருளாய் தனிவித்து—உபாதான காரண மாய், தெய்வ நான்முகக் கொழுமுளை—உலகம் மலர்வதற்குக் காரணமான முளைபோலே தெய்வத் தன்மை வாய்ந்த நான்முகனைப் படைத்து. முக்கண் ஈசனொடு தேவு பல நுதலி—ருத்ரன் முதலான தேவர்களை சங்கல்பத்தாலே பிறப்பித்து.

9. நிலம்நீர் தீகால் சுடரிரு விசும்பும்
மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க
ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதும்
அகப்படக் கரந்து—ஓராலிலைச் சேர்ந்த—எம்
பெருமா மாயனை ...(திருவா. 7).

நிலம், நீர் தீ. காய், சுடர் இரு விசும்பு—ஐந்து பூதங்கள். சுடர் இருவிசும்பு—மற்றைய பூதங்களைக் காட்டிலும் சிறிது காலம் அதிகமாக இருப்பதால் வந்த புகர். மலர் சுடர்—சந்த்ரன், சூர்யன் போன்று ஒளி விடுவன. பிறவும்—தேவர் மனிதர் விலங்குகள் போல்வன. புறப்பாடு இன்றி—வெளி வராமல். கரந்து—வயிற்றுள் வைத்து ஒளித்து

10. அரவமேறி அலைகடலமரும் துயில் கொண்ட அண்ணலை (3-6-3).

11 உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை (5-4-11).

## 4. அந்தர்யாமி நிலை

ஸர்வேச்வரன் சேதன அசேதனங்களுள்ளே உறைந்து இவற்றை இயங்கச் செய்கிறான். ஆதலால் இவன் அந்தர்யாமி. இவன் ஜீவர்களது இதயத்திலே உறைந்து, இவர்களால் தியானஞ் செய்யப் பெற்று இவர்களுக்கு எல்லா வகையிலும் நலன்கள் செய்து காப்பாற்றுகிறான் பிரமன், சிவன் முதலான தேவர்களுக்கும், மற்ற ஜீவர்களுக்கும், பஞ்ச பூதங்களுக்கும், காலத்திற்கும் இவன் அந்தர்யாமி.

### 4. 1. ஜீவர்களுக்கு

1. மயர்வற என் மனத்தே மன்னினான் றன்னை (1-7 4).
மயர்வு—அறிவின்மை, ஐயம், திரிபு அற—நீங்குமாறு.

2. மாயப்பிரான் என வல்வினை மாய்ந்தற நேயத்தினால் நெஞ்சம் நாடுகுடி கொண்டான் (8-6-4).

நேயத்தினால்—என்னிடம் கொள்ளும் பிரேமத்தாலே. நெஞ்சம் நாடு—எனது மனம் தனக்குப் பரமபதம் போலே இடமுடைத்தானபடி

3. உளரெம் மொருவர் அவர் வந்து என் உள்ளத்துள்ளே உறைகின்றார் (8-8-10).

உளர் எம் ஒருவர்—குணங்கள், செல்வம் போன்றவற்றால் பரிபூர்ணராய், உறைகின்றார்—நித்தியமாக வசிக்கிறார்,

4. எனக்கே ஆட்செய் எக்காலத்தும் என்று என் மனக்கே வந்து, இடைவீடின்றி மன்னி (2 9-4).

''எனக்கே எக்காலத்திலும் நீ ஆட்செய்வாய்'' என்று மனக்கே வந்து—மனத்துள் புகுந்து. மன்னி—அகலாமல் தோய்ந்து.

### 4. 2. தேவர்களுக்கு

1. சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனானாய் (6-9-1).
அயன்—பிரமன், சுடர்கள் இரண்டு—சூரியனும் சந்திரனும். இவர்களுக்கு ஸர்வேச்வரன் அந்தர்யாமி.

2. புணர்க்கு மயனாம் அழிக்கு மரனாம் (3-8-3).

புணர்க்கும்—படைப்பிற்குக் காரணமாகும். அயன்—பிரமன், பிரமன், சிவன் இவர்களுக்கு அந்தர்யாமியாகி ஈச்வரன் படைப்பதும் அழிப்பதும் செய்கிறான்.

3. அங்குயர் முக்கட்பிரான் பிரம பெருமானவன் நீ, வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத் தெய்வம் நீ (7-6-4).

வெம் கதிர்— வெம்மை மிக்குச் சுடர் அடர்ந்த, வச்சிரம்—வச்சிராயுதம்.

## 4. 3. காலத்திற்கு

1. வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாய் (3-1-5).

2. எத்தனையோ ருகமும் அவையாய் அவற்றுளியலும், ஒத்த ஒண்பல் பொருள்கள் உலப்பில்லனவாய் வியவாய் (7-8-3).

எத்தனை ஓர் உகமும்—க்ருதயுகம் போல்வனவற்றிற்கு நிர்வாஹகனாய். அவற்றுள் இயலும்—இந்த யுகங்களில் விளங்கு கிற. ஒத்த ஒண்பொருள்கள்—ஒரே பண்புகளுடைய ஆத்மாக்கள் உலப்பு இல்லனவாய்—அழிவில்லாதனவாய். வியவாய்—வேறு பட்டனவாய்; சரீரத்தாலே தேவர், மனிதர் என்றவாறு வேறு பட்டவையாய். ஆத்மாவால் ஒன்றுபட்டும் சரீரங்களாலே வேறு பட்டும் விளங்குவது நோக்கு.

3. இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீ இன்னே யானால் (8-1-7)

இறந்தது—இறந்த காலம் இன்னே ஆனால்—இவ்வாறான பின்பு.

## 4. 4. பூதங்களுக்கு

1. நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடு வானாய்ச், சீரார் சுடர்கள் இரண்டாய் (6 9-1).

2. திரியுங் காற்றோ டகல் விசும்பு திணிந்த மண் கிடந்த கடல், எரியுந் தீயோ டிரு சுடர் தெய்வம் (3 6-5).

திரியும்—பரவும். அகல் விசும்பு—பரந்த ஆகாசம். திணிந்த மண்—திடமான பூமி. எரியும் தீ—மேலே சுடர் எழுகின்ற தழல். இரு சுடர்—சந்திரன், சூரியன், தெய்வம்—இவற்றிற்கு அந்தர்யாமி.

3. தீயென்கோ? வாயுவென்கோ? நிகழும் ஆகாசமென்கோ? நீள் சுடர் இரண்டுமென்கோ? (3-4-1)

# 5. ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்

உபநிஷத்துக்கள் வெளியிட்டுள்ளது: "ஸோsகாமயத பஹுஸ்யாம்"—நான் பலவாகக் கடவேன் என்று பகவான் சங்கல்பித்துக் கொண்டான்—என்பது. இவன் சேதன அசேதனங்களாகி இவற்றுள் உறைந்து. இவற்றை இயங்கச் செய்கிறான். இவனன்றி ஓரணுவும் அசையாது. சேதனர்களது நிலை, முயற்சிகள் போல்வனவும், அசேதனங்களுடைய நிலை, பரிணாமங்கள் போல்வனவும் இவனையே ஆதாரமாக உள்ளன. இச்கருத்துக்கள் சில பாசுரங்களில் விளங்குகின்றன; இவற்றை ஆசாரியர்கள் தெளிவாக விளக்கியிருக்கின்றனர்.

எம்பெருமானைப் பற்றி விவரிக்கும் போது விவரிக்கும் சொல் (அல்லது சொற்கள்) வேறுபட்டு அதே வேற்றுமைச் சொல்லாக அமைந்து, எம்பெருமானோடுள்ள தொடர்பைக் காட்டும். இது ஸயாநாதிகரண்யம் எனப்பெறும். இவ்வாறு விளக்கம் பெறுவது கருத்திற்கேற்பப் பலவகைப்படும்.

## 5. 1. தேறும் விவரங்கள்

1. நாம் அவன் இவன் உவன், அவள், இவள், உவள், எவள்... ஆமனுவயாய் (1-1-4)

அவன்-தொலைவில் இருப்பவன். இவன்—அருகில் இருப்பவன். உவன்—அருகிலும் இல்லாமல், தொலைவிலும் இல்லாமல் நடுவில் இருப்பவன் அவள், இவள், உவள், எவள்—இவ்வாறு விவரிக்கப் பெறும் பெண்பாலர். இவர்கள் எம்பெருமானுக்குச் சரீரமாவர். எம்பெருமான் இவர்களுக்கு அந்தர்யாமி. உடலில் ஆத்மா அமைந்துள்ளதுபோல் எம்பெருமான் இவர்களுக்கு ஆதாரமாக விளங்குகிறான். சரீரம், ஆத்மா என்ற தொடர்புபோல் விளங்குவது குறிப்பு.

2. முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! (10-10-1).

முனியே!—அடியாரைக் காப்பதை மனனஞ் செய்து கொண்டிருக்கும் நாராயணனே! நான்முகனே!—நான்முகனுக்கு அந்தர்யாமியாகிப் படைப்புத் தொழில் செய்பவனே! முக்கண் அப்பா!—சிவனுக்குஅந்தர்யாமியாகி அழிக்குந் தொழில் கொண்டவனே! தேவர்களுக்கு அந்தர்யாமி, ஸர்வேச்வரன்

3 அவாவறச் சூழ் அரியை, அயனை, அரனை அலற்றி (10-10-11).

அவா அற சூழ் அரியை—என்னுடைய பிரேமம் பலன்பெறுமாறு என்னுடன் கலக்கும் நாராயணனை. அலற்றி—கூவியழைத்து. அயன், அரன் இவர்கள் எம்பெருமானது ஆணைக்குட்பட்டவர்கள்.

4. ஆழாத பாரு(ம்) நீ, வானு(ம்) நீ, காலு(ம்) நீ, தீயு(ம்) நீ நீரும் நீயாய்—நின்ற நீ (பெ. திரு. 11).

ஆழாத—நீரில் அழுந்தாத. கால்—காற்று. பஞ்ச பூதங்கள் இறைவனது ஆணைக் குட்பட்டவை.

5. செய்ய சூழ் சுடர் ஞானமாய் வெளிப்பட்டிவை படைத்தான் (3-6-1).

செய்ய—செவ்வியதாய். சூழ்—படைத்த பொருள்களைச் சூழ்வதாய். சுடர்—விளங்குகிற. ஞானமாய்—சங்கல்ப ரூப ஞானமாய். ஞானம் என்ற குணத்தைக் கொண்டு, இந்த குணத்தையுடையவன் ஈச்வரன் என்று விளக்குவது.

6. துயரமேதரு துன்ப இன்ப வினைகளாய் (3-6-8).

துயரமே தரு—பரிதாபமே விளைவிக்கும் துன்பம், இன்பம் இவற்றிற்குக் காரணமான. புண்ணிய பாப ரூபமான தர்மங்களுக்கு ஈச்வரன் நிர்வாஹகன் (செய்விப்பவன்). செயல், செய்விப்பவன் என்ற தொடர்பு.

7. மூவராகிய மூர்த்தியை (3-6-2).

மூவராகிய—தனக்குத் தானே காரணமாகி, தன்னோடு கூடிய மற்ற இருவர்க்கும் காரணமானவன் எம்பெருமான்.

8. அம்மானுக்கு, செந்தாமரைத் தடங்கண், செங்கனிவாய் செங்கமலம், செந்தாமரை அடிக்கள், செம்பொன் திருவுடம்பே (2-5-1).

கண் : செந்தாமரைத் தடம்: மலர்ந்த தாமரை அடர்ந்த தடாகம் போன்றது. சிவந்து கனிந்த வாய் செங்கமலம் போல. திருவடிகள் செந்தாமரை போன்றவை. திருவுடம்பு பொன்போல் புகர்வாய்ந்தது. இங்கு உபமானத்தைக் கொண்டு உபமேயம் விவரம் பெறுகின்றது.

9. தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கல் சேர்ந்த பிரானை (3-5-6)

பெருமான் அவதாரஞ் செய்தும் நாலு பேரைப் பெறாமை யாலே, தான் ஒருவனாகவே திருப்பாற்கடல் மீண்டான், மறுபடியும் அவதாரஞ் செய்வதற்காக தடங்கடல் சேர்ந்தது, அவதாரம் செய்வது இவற்றுள் ஒன்று காரணம், மற்றது காரியம்,

10: நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்
நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்
என்றுமோர் இயல்வினர் (1-1-6).

ஜீவர்கள் கொள்ளும் முயற்கிகள் நிற்றல், இருத்தல், கிடத்தல் திரிதல். நில்லாமை, இராமை. கிடவாமை, திரியாமை இவையும் இவர்களுக்குரியன. இவைகளுக்கெல்லாம் ஆதாரமாகவுள்ள ஜீவர்கள் பகவானுக்கு ப்ரகாரமாவர். செயலைக் குறிப்பிட்டு, இச் செயலை உடையவர் பகவானுக்கு அதீநம் என்பதால் ஸமாநாதிகரண்யம்.

## 5. 2. யாவும் ஸர்வேச்வரன்

உலகங்கள், இவற்றுள் காண்பன, இவ்வாறு காண்பன ஒன்றுக்கொன்று எதிர்நிலையாக அமைவது, பண்புகள், செயல்கள், இவற்றின் பயன்கள் யாவும் ஸர்வேச்வரனாலே இதனால் இவன் ''விருத்த விபூதியன்'' எனப்பெறுகிறான். விருத்த—ஒன்றுக்கொன்று மாறுபாடுள்ள. விபூதியன்—இவ்வாறானவற்றைத் தனக்குச் செல்வமாக உடையவன்.

1 மூவுலகங்களுமாய்!அல்லனாய் (6-3-6)

அல்லனாய் இங்கு நித்திய விபூதி குறிப்பு.

2 நகரமும் நாடுகளும் (6-3-3)

3. பரஞ்சுடர் உடம்பாய் அழுக்குப் பதித்த உடம்பாய்(6-3-7).

பரஞ்சுடர் உடம்பாய்—ஒப்பில்லாத புகழுடைய திவ்யமான திருமேனியுடையவனாய். அழுக்கு பதித்த உடம்பாய்—ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றிற்கு வசியமான ஜகத்தைத் திருமேனியாகவுடையவனாய். (பகவானைப் பற்றியவை).

4. வன்சரண் அரர்க்காய் அசுரர்க்கு வெங்கூற்றமுமாய் (6-3-8) பகவானைப் பற்றியது.

5. நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய் (6-3-1). நல்குரவு—வறுமை.

6. வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய் (6-3-1).

7. கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய் (6-3-2).

8 புண்ணியம் பாவம், புணர்ச்சி பிரிவென்றிவையாய் (6-3-4),

9. கைதவம் செம்மை (6-3-5). கைதவம்—கபடம்.

10. மெய் பொய், முதுமை இளமை, புதுமை பழமையுமாய் (6-3-5).

## 5. 3. விசித்திரமான விபூதி

தம்மை இவ்வுலகில் வைத்துத் துன்புற்றுக் கலங்கும்படி முடியவும் மாட்டாமல் செய்யும் ஆச்சரியம் என்னவோ என்று ஆழ்வார் பகவானைக் கேட்க, பகவான் தான் விசித்திரங்களுக்கெல்லாம் ஆகரமாயிருப்பதை வெளியிடுகிறான். இதனால் இந்த விபூதி விசித்திரமானது.

1. மாயா! வாமனனே! மதுசூதா! (7-8-1).

மாயா—தான் கொள்ளும் வியப்பிற்கெல்லாம் காரணமானவனே! வாமனனே—பிறந்தவுடனே மகாபலியிடம் நடந்து சென்றவனே! இதோர் ஆச்சரியம்.

2. தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் (7-8-1).

தாய், தந்தை இவர்கள் உபகரிப்பதில் வேறுபாடு.

3. திங்களும் ஞாயிறுமாய்ச் செழும்பல் சுடராய் இருளாய் (7-8-2).

திங்கள்: காணும் போதே இனிமை. ஞாயிறு: ஒளி, செழும் பல் சுடர்—நக்ஷத்ரங்கள். இவற்றிற்குப் பெருமான் நிர்வாஹகன் (இவற்றைச் செய்விப்பவன்).

4. பொங்கு பொழி மழையாய்ப் புகழாய்ப் பழியாய் (7-8-2).

5. காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய் (7-8-5).
காயம்—சரீரம். சீவன்—ஆத்மா. கழிவு—விநாசம்.

6. வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப் பயனாய் (7-8-6).
வியப்பு—வியக்கத்தக்கவை, வென்றி—, வினை—செயல்.

இவ்வாறு விவரித்தபடி விசித்திரமானவற்றை யுடைய ஜகத்திற்குப் பகவான் காரணம். இந்த ஜகத்து விசித்திரமான விபூதி; இந்த விபூதிமயமானவன் பகவான்; விசித்ர ஜகதாகாரன்.

## 6. விபவம்

தேவர், மனிதர் போன்ற வடிவங்களோடு ஸர்வேச்வரன் தோன்றுவது விபவம் என்ற நிலை. விபவம்: சிறப்பான தோற்றம். இவன் இவ்வாறு தோன்றுவது தனது விருப்பத்தாலே; மெய்யன்பர்களைக் காப்பதற்கும், தீயோர்களை அழிப்பதற்கும் நன்னெறியை நிலைநாட்டுவதற்கும். இவன் பிறக்கப் பிறக்க இவனது புகழ் மேன்மேலும் ஓங்கும். ஸ உச்ரேயாந் பவதி ஜாயமாந: பிறவாத இவன் பிறந்து புகழையே பெறுகிறான், பிறந்தே பெறுகிறான்.

அன்றியும் விபு—எங்கும் வியாபித்திருப்பது உயிர்களைக் காப்பதற்காக. ஆழ்வார் 'மண்மீது உழல்வாய்'' என்கிறார்.

### 6. 1. அவதாரங்கள்

1. எளிவரு மியல்பினன் நிலை வரம்பில பல பிறப்பாய், ஒளிவரு முழு நலம் (1-3-2).

நிலை: ஜன்மத்தில் மேன்மை தாழ்மை பார்ப்பது. வரம்பு—வரையறை; இவ்வாறுதான் பிறக்க வேண்டுமென்பது. எளிவரும் இயல்பினன்—எளிமையே இயல்பாக வுடையவன்; நீருக்குக் குளிர்ச்சி இயல்பு போலே.

2. துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்றவண்ணம் நிற்கவே, துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து (3-10-6).

துயரில்—துயரமில்லாமல், துயரத்திற்கு எதிர் நிலையாய். சுடர்—சோதி வடிவாய். தன்னுடை சோதி—பரஞ்சோதி என்று புகழப் பெறும் தனது திருமேனி. நின்ற வண்ணம் நிற்க—பரமபதத்தில் போலே விளங்கச் சிறிதேனும் வேறுபாடில்லாமல். துயரில் மலியும் மனிசர் பிறவியில்...வந்து—யாவரும் தமது ஊனக் கண்களாலேயே காணுமாறு அவதரித்து;

3. ஆதியஞ் சோதியுருவை அங்குவைத் திங்குப் பிறந்த (3-5-5).

ஆதி அம் சோதி உருவை — ஆதியாய், பரமபதத்தில் விளங்கும் சோதிமயமான திருமேனியை. அங்கு—பரமபதத்தில். வைத்து—விளங்கும் வகையிலே, இங்கு கொண்டு பிறந்த, அதே திருமேனிச் சோதியுடன் இங்குப் பிறந்தவன்.

4. பேருமோ ராயிரம் பிற பலவுடைய எம்பெருமான், பேருமோ ருருவமும் உளதில்லை இலதில்லை பிணக்கே (1-3-4)

பேரும்—திருநாமங்கள், பிற—இத்திரு நாமங்களால் விவரம் பெறும் திருவுருவங்கள். ஓர் பேரும் ஓர் உருவமும்...... ஒவ்வொரு பேரும் ஒவ்வோர் உருவமும். உளது இல்லை—இல்லை யென்று அறிவிலிகளும், இலது இல்லை—இல்லையென்பதில்லை, அதாவது உண்டு என்று அறிஞரும். பிணக்கு—தமக்குள்ளே கொள்ளும் பிணக்காகும்.

5. மீனாய் ஆமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் கானாரே னமுமாய்க் கற்கியாம் இன்னம் கார்வண்ணனே (5-1-10

இன்னம் கற்கியாம்—மேலும் கற்கியாகி.

மீனாய் அவதரித்தது : வேதங்களைக் கவர்ந்துஒளித்து வைத்த மதுகைடபர்களைக் கொன்று வேதங்களை மீட்பதற்காக. ஏழு வகைப் பெருங்கடல்களும் ஒரு செதிளில் அடங்குமாறு மிகப் பெரிய மீனாய்த் தோன்றினான் ஸர்வேச்வரன்.

## 6. 2. ஆமை

துர்வாஸரது சாபத்தினால் தேவர்கள் இழந்த செல்வத்தை மீட்டளிப்பதற்கும், அமுதம் அளிப்பதற்கும் திருப்பாற்கடலைக் கடைந்தான் பகவான். மந்தரகிரி மத்தாயிற்று, வாசுகி கடை நாணாயிற்று. மந்தர மலை கடலில் ஆழாமல் ஆமை வடிவத்தில் பகவான் தன் முதுகில் ஏற்றுக் கொண்டு தாங்கினான்.

1. மலை கொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாயப்பிரான் (திருவி. 51)

2. மலக்க மெய்த மாகடல் தன்னைக் கடைந்தானை (8-3-10). மலக்கம் எய்த—கலங்குமாறு.

3. கூடிநீரைக் கடைந்தவாறும் அமுதம் தேவர் உண்ண. (5-10-10).

கூடி—தேவர்கள், அசுரர்கள் இவர்களுடன் சேர்ந்து, தானும் ஒருகை பற்றி

4. அமரர்கட்கருமை யொழிய ஆரமுதூட்டிய அப்பனை (3-7-5).
அருமை ஒழிய—அசுரர்களால் விளைந்ததீமைகள் நீங்குமாறு.

## 6. 3. வராகம்

இரணியாட்சன் என்ற அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டி ஆழ்கடலில் ஆழ்த்தி ஒளித்து வைத்தான். இந்தப் பூமியை அண்ட பித்தியிலிருந்து மேலெடுத்து வருவதற்காக ஸர்வேச்வரன் கோல வராகமாக அவதரித்தான்.

1. கோலவராக மொன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்! (10-10-7).

கோடு—தந்தம், கோரப்பல்.

2. ஏனமாய் நிலங்கீண்ட என் அப்பனே! கண்ணா! (5-7-6).

3. மாதர்மா மண்மடந்தை பொருட் டேனமாய்ஆதியங் காலத்து அகலிடம் கீண்டவர் (4-2-6).

4. எரிதிரை வையம் முற்றும் ஏனத்துருவாய் இடந்த பிரான் (திருவி. 99).

எரி திரை—ஓங்குகின்ற அலைகளிலிருந்து, வையம் முற்றும் ஏனத்து உருவாய் இடந்தபிரான்.

5. ஏன மொன்றாய் மண்துகளாடி (திருவி. 55).

மண் துகள் ஆடி—பூமியின் புழுதியைத் தனது திருமேனியில் ஏற்றுக் கொண்டவன்.

6. பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம்மேல், ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம் (திரு. வி. 45).

வராகப் பெருமான் தனது தாமரை போன்ற திருக்கண்களை நம்மேல் முழுதும் சேர நோக்கி யருளினார்.

## 6. 4. நரசிங்கன்

தேவர்களிடமிருந்து பெற்ற வரத்தினால் இரணியன் எல்லா உலகங்களையும் தனக்கே யாக்கிக் கொண்டு, தேவர்களைத் துன் புறுத்தி வந்தான். சிறந்த பக்தி வாய்ந்தவனாகிய தன் மகன் பிரக

லாதனைக் கொல்லப் பலவகையாக முயன்றான், இச்சிறுவனைக் காப்பதற்காகப் பகவான் தூணில் நரசிங்கமாகத் தோன்றினான்.

1. ... என் நெஞ்சகலான்—அன்றங்கை வன்புடையால் பொன் பெயரோன் வாய்தகர்த்து மார்பிடந்தான் (பெ.திரு. 35).

புடை—அடித்தல், தாக்குதல். பொன்பெயரோன்-இரணியன்

2. அரியாகி இரணியனை ஆகங் கீண்டான் (10-6-10).

3. புக்க அரியுருவாய் அவுணனுடல் கீண்டுகந்த சக்கரச் செல்வன் (7-6-11).

4. கடுத்த போரவுணன் உடலிரு பிளவாக் கையுகி ராண்ட எங் கடலே! (8-1-3)

கடுத்த போர் அவுணன்—போர் செய்வதிலே பெரிதும் நோக்குடைய. கை உகிர் ஆண்ட—கையின் நகங்களைப் பயன்படுத்திய. கடல்—''மஹா விஷ்ணும்'' என்றவாறு அளவிடமுடியாத பெரிய வடிவம்.

5. ஆகஞ் சேர் நரசிங்க மதாகி—ஓர்
ஆகம் வள்ளுகிரால் பிளந்தான் (9-3-7).

6. அல்லல் அமரரைச் செய்யும் இரணிய னாகத்தை
மல்ல லரியுருவாய்ச் செய்த மாயம் (7-5-8).

அமரரை அல்லல் செய்யும்—தேவர்களை இடையறாமல் துன்புறுத்திய, மல்லல்—பெரிய.

7. உன்னைச் சிந்தையினா லிகழ்ந்த இரணியனாகங் கீண்ட என், முன்னைக் கோளரியே! (2-6-6).

சிந்தையினால் இகழ்ந்த—வாக்காலே இகழ்ந்ததன்றி, நெஞ்சாலும் இகழ்ந்த. கோள் — மிடுக்கு. முன்னை—பக்தனான பிரகலாதன் நெஞ்சில் முதலில் கொண்ட.

8. அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய என், சிங்கப் பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே (2-8-9).

9. கிளரொளியால் குறைவில்லா அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து கிளரொளிய இரணியன தகல்மார்பங் கிழித்துகந்த (4-8-7).

## 6. 5. வாமனன்

மகாபலி இந்திரனிடமிருந்து கவர்ந்த உலகங்களை மீட்டுக் கொடுப்பதற்காக, இறைவன் வாமனனாய் அவதரித்து, அவனிடம் மூவடி நிலம் இரந்து, பின்பு இவற்றை அளப்பதாக வானில் ஓங்கினான், திரிவிக்கிரமனாக.

1. அடியை மூன்றை இரந்தவாறும் (5 10-9).

2. மாலுக்கு வையமளந்த மணாளற்கு (6-6-1).

3. வன் மா வையமளந்த எம் வாமனா! (3-2-2).

வன் மா வையம்—கடினமே இயல்பாய்ப் பரந்துள்ள பூமியை.

4. வள்ளலேயோ! வையங் கொண்ட வாமனாவோ! என்றென்று (4-7-2).

வள்ளல்—பூமியிலுள்ளாரது சிரத்தில் திருவடி படிய வைத்ததால்.

5. புலன் கொள் மாணாய், நிலங்கொண்டானே (1-8-6).

புலன் கொள்—இந்திரியங்களைக் கவரும் (அழகாலும் மதலைச் சொல்லாலும்).

6. அறியாமைக் குறளாய் நிலம் மாவலி! மூவடி யென்று, அறியாமை வஞ்சித்தாய் (2-3-3).

அறியாமை—தன்னைப் பிறர் அறியாதவாறு. ''நிலம்—மாவலி!—மூவடி'' என்று—இசைவில்லாச் சொற்களைச் சொல்லி, அறியாமை—சுக்கிராச்சாரி கூறியும் மனத்துள் ஏற்காதவாறு, வஞ்சித்தாய்—கபடத்தினால் நிலங்கொண்டாய்.

7. ஒரு மாணிக் குறளாகி நிமிர்ந்த அக் கருமாணிக்கம் (1-10-1)

மாணி—அழகுள்ள. குறள்—திருமேனி சுருங்கி இனிமையானது குறிப்பு; பால் சுண்டி இனிப்பது போல.

8. பாமரு மூவுலகு மளந்த பற்ப பாதாவோ! (7-6-1).

பற்பபாதாவோ—பதுமம் போல் அழகிய திருவடிகளுடையவனே!

9. பாயோரடிவைத்து அதன் கீழ் பரவை நிலமெல்லாம் தாய், ஓரடியால் எல்லா உலகும் தடவந்த மாயோன் (6-9-9)

10. அடியால் படி கடந்த முத்தோ? அதன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ? (பெ. திரு. 27).

11. மீனென்னுங் கம்பில் வெறியென்னும் வெள்ளி வேய், வானென்னுங் கேடிலா வான்குடைக்குத்-தானோர் மணிக்காம்பு போல் நிமிர்ந்து மண்ணளந்தான் (பெ. திரு. 62)

மாவலியிடம் நீரேற்று இறைவன் மேலே ஓங்கும் போது, ஆகாசம் ஒரு குடைபோல் விளங்கியது. மீன்—நக்ஷத்திரங்கள்; இவை குடையின் குறுக்குக் கம்புகள் போல் விளங்கின. வெறி வெள்ளி—சந்திரன், சுக்கிரன். இவை வேய்- மூங்கிற் குழல்கள் போல் இலங்கின. இறைவன் இதன் மணிக்காம்பு (மணிமயமான காம்புபோல்) மிளிர்ந்தான் (தனது நிறத்தாலே). வான் குடை—பெரிய குடை.

12. இறைமுறையான் சேவடிமேல் மண்ணளந்த அந்நாள், மறை முறையால் வானாடர் கூடி—முறை முறையின், தாதிலகு பூத் தெளித்தால் ஒவ்வாதே! தாழ்விசும்பின், மீதிலகித் தான் கிடக்கும் மீன். (பெ. திரு. 61).

ஈச்வரன் என்ற முறையாலே பகவான் உலகளந்தபோது, வானோர் வரிசை வரிசையாக நின்று மலர்களைத் திருவடியில் தூவினர். இவ்வாறு சிதறிய மலர்கள் போல் விளங்கின ஆகாயத்தில் அடர்ந்துள்ள நஷத்திரங்கள். நக்ஷத்திர மண்டலம் வரையில் ஓங்கியது திருவடி.

13. ஞால முற்றும் வேயகமாயினும் சோரா வகை இரண்டே அடியால், தாயவன் (திரு. வி. 61).

ஞால முற்றும்—பூமிப்பரப்படங்கலும், வேய் அகமாயினும்—மூங்கிற் குத்தளவாயினும், சோரா வகை—விடாமல், தாயவன்—அளந்தவன். இரண்டே அடி என்பதால் ஞாலம் என்பது மண்ணும் விண்ணும், இந்திரனுக்குரியவை.

14 மண்ணும் விண்ணும், என் காற்கு அளவின்மை காண்மின் என்பானொத்து வான் நிமிர்ந்த தன் கால் பணிந்த என்பால் (திரு. வி. 42).

வானோங்கி மண்ணளந்ததால் தேறுவது: மண்ணும்

15. கழல்தல மொன்றே நிலமுழுதாயிற்று, ஒருகழல்போய், நிழல் தர எல்லா விசும்பும் நிறைந்தது (திரு.வி. 58)

## 6. 6. பரசுராமன்

பார்க்கவ முனிவரது மகனான பரசுராமன் ஷத்ரியர்களை இருபத்தோர் கால் வதைத்து, அதனால் தேங்கிய உதிரத்தில் தன் பிதாவுக்குத் தர்ப்பணம் செய்தான். இவன் கையில் பரசு ஏந்தியவன். தனது தகப்பனாராகிய ஜமதக்னி முனிவரைக் கார்த்தவீர்யார்ஜுனனது குமார்கள் கொன்றதால், பழி தீர்ப்ப தற்கு இவன் க்ஷத்ரிய மன்னரைக் கொன்றான்.

1. நின்றிலங்கு முடியினாய்! இருபத்தோர் கால் அரசு களைகட்ட வென்றி நீண் மழுவா! (6-2-10).

அரசு களைகட்ட-அரசர்களை நாசஞ்செய்து. நீள் மழுவா!— பெரிய மழுவை ஆயுதமாக வுடையவனே!

## 6. 7. தசரதராமன்

(1) ஏழு மாமரங்கள் துளைபடச் சிலை வளைத்தது:

1. மராமரம் எய்த மாயவன் (1-7-6).

2 கணையொன்றாலே ஏழ்மரமுமெய்த எம் கார்முகிலை (9-1-2) சிலையேந்தியபோது திருமேனி யழகு.

3. சினையேய் தழைய மராமரங்கள் ஏழு மெய்தாய் சிரீதரா! (1-5 6).

சினை ஏய் தழைய-கிளைகளோடு சேர்ந்ததழைகளையுடைய.

(2) திருக்கையில் ஏந்திய சிலை:

4. காயுங் கடுஞ்சிலை என் காகுத்தன் (5-4-3).

காயும் கடும் சிலை—பகைவரிடம் இராமன் கருணை கொண் டாலும், அவன் ஏந்தும் சிலை தானே கணைகளைப் பெய்யும். காகுத்தன் கருணையுடையவன்; சிலை கொடியது.

5. கொம்பு போல் சீதை பொருட் டிலங்கை நகர் அம்பெரியுய்த் தவர் (4-2-9).

6. மதிளிலங்கைக் கோவை வீயச் சிலை குனித்தாய் (4-3-1).

7. கிளர் வாழ்வை வேவ இலங்கை செற்றீர் (2-4-10)

8. ஏர்கொ ளிலங்கையை, நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி! (2-9-10).

9. தண்ணிலங்கைக் கிறையைச் செற்ற நஞ்சனே! (3-8-2).

10. தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லியை (3-6-2).

11. ...கரந்துருவின், அம்மானை அந்நான்று பின்தொடர்ந்த— ஆழியங்கை, அம்மானை (பெ. திரு. 82).

கரந்து உருவின்—இயல்பான உருவத்தை மறைத்து, அம் மானை—மானாக வந்த மாரீசனை. ஆழி அம் கை—மோதிரம் அணிந்த அழகிய திருக்கை. கைகேயியின் வரத்தில் அகப்படாதது இந்த ஆழி. அம்மான்—ஸ்வாமி.

12. கடலாறு மடுத் துதிரப் புனலா—அப்பன், நீறுபட இலங்கை செற்ற நேரே. (7-4-7).

ஆறு மடுத்து உதிரம் புனலா—உதிர வெள்ளம் ஆறுகளாகப் பெருகிக் கடலிற் பாயக் கடல் நீர் எதிர்த்து வருமாறு.

(3) ராமராஜ்யம்:

13. புற்பா முதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே, நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும், நற்பாலுக் குய்த்தனன் (7-5-1).

பா புல்—பரவும் புல். முதலா—முதலாக. எறும்பு ஆதி—அற்ப மான எறும்பு முதல். நல் பால் அயோத்தியில்—நல்ல தேசமாகிய அயோத்தியிலே: அயோத்தியில் பிறப்பதாலேயே நன்மை. சராசரம் முற்றவும் நல்பாலுக்கு உய்த்தனன்—நல்ல நிலையிலிருக் குமாறு செய்தான் இராமன்; இது ஆட்சித் திறன். "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:" என்பது குறிப்பு.

14. நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை அளித்து உய்யச் செய்து (5-5-2).

இது தான் ராமாயண சாரம். நாடி—இருந்த இடத்திற்குச் சென்று. தடிந்திட்டு—அழித்து. நாட்டை அளித்து—உயிர்களைக் காப்பாற்றி. உய்யச் செய்து—நல்லவர்களாகச் செய்து. ஆட்சித் திறன்.

## 6. 8. கண்ணபிரான்

நம்மாழ்வார் ''க்ருஷ்ண - த்ருஷ்ணா - தத்வம்'' என்பர்— கண்ணபிரானிடம் இவர் கொண்ட பிரேமத்தால் நேரே கண்டனுபவிக்க வேண்டு மென்ற வேட்கையே வடிவெடுத்து வந்தது போல்வார் இவ்வாழ்வார் கண்ணபிரானது எளிமையை நினைத்து இவர் ''எத்திறம்!'' என்று மோகித்தார். பிறந்த போது இருளில் பிறந்ததையும், மறைந்துவாழ்ந்ததையும், பாரதப் போரில் பட்ட பாடுகளையும் நினைத்து மனமுருகினார். ''உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ண''னென்று கருதினார் இவர். பரத்வ நிலையோடு கண்ண பிரானது லீலைகளை இணைத்து இவர் அனுபவித்தார். ''கண்ணன் வைகுந்தனோடு என் நெஞ்சினாரைக் கண்டால்,'' ''கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை யமுதை'', ''ஏனமாய் நிலங்கீண்ட என்னப்பனே! கண்ணா!'', ''ஆயன் அமரர்க் கரியேறு எனதம்மான்'' என்றிவர் அனுபவிக்கிறார். இவர் கண்ணபிரானை அனுபவித்த வகை ஸ்ரீபாகவத சாரமாகும் என்னலாம்.

(1) மதுரையில் அவதாரம்: ''ஏஷ நாரயண: ஸ்ரீமாந்...ஹ்யா கதோ மதுராம் புரீம்.''

1. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான் (9-1-10).

2. வேண்டித் தேவர் இரக்க வந்து பிறந்தும் (6-4-5).

3. மல்லை மூதூர் வடமதுரைப் பிறந்தவன் (9-1-6).

4. மாதுகிலின் கொடிக் கொள் மாட வடமதுரைப் பிறந்த (9-1-9).

5. ...மாயவ னடிபரவிப், போழ்து போக உள்ளகிற்கும் புன்மை யிலாதவர்க்கு, வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் (9-1-8).

மாயவன் அடி பரவி போழ்து போக—பகவானது திருவடி களை வணங்கிப் போது போக்க நினைப்பவர்களாய், புன்மை இலாதவர்க்கு, வேறு பயனைக் கருதும் தாழ்மை இல்லாதவர்க்கு. வாழ்துணையா—நல்வாழ்வுக்கு உபாயமாக ''பரித்ராணாய ஸாதூநாம்'' என்றான் கண்ணபிரான்.

(2) பிறந்தவுடன் திருவாய்ப்பாடி சேர்ந்தான்:

6. வீங்கிருள்வாய் பூண்டு—அன்று, அன்னை புலம்பப் போய், அங்கோ ராய்க்குலம் புக்கதும் (6-4-5)

அன்னை—தேவகி, பூண்டு—கம்ஸ பயத்தாலே குழந்தையை அணைத்துக் கொண்டு புலம்ப—கூப்பிட. வீங்கு இருள்வாய்—அடர்ந்த இருளிலே போய். ஓர் ஆய்க்குலம்: குழந்தை மறைந்து வாழ்வதற்கு ஓர் இடம் நேர்வதே!

7. எடுத்த பேராளன் நந்தகோபன் றன் இன்னுயிர்ச் சிறுவனே! அசோதைக்கு, அடுத்த பேரின்பக் குலவிளங் களிறே!(8-1-3).

எடுத்த—பெருநிதி 'எடுத்ததுபோலே, உன்னை ஏற்றுப் பெரிதும் மகிழ்ந்த. பேராளன்—பெருமை வாய்ந்தவன். யசோதைக்கு அடுத்த—கிட்டிய. குல—ஆயர் குலத்திற்கு: இளங்களிறே—ஆனைக் கன்று போல் அப்போதப்போது பேரின்பம் அளித்து மகிழ்விப்பவனே. இவன் "தொல்லையின்பத்து இறுதி" கண்டான், இவனை மகனாகப் பெற்று.

8. மனை சேர் ஆயர் குலமுதலே! (1-5-6).

ஆயர் மனைகளிலே வந்து சேர்ந்து, அவர்களது குலத்திற்கு முதலானவனே!

(3) அடர்ந்த பகைவர்களை மாய்த்தவன்:

9. பேயைப் பிணம்படப் பாலுண் பிரானுக்கு (6-6-8).

10. மாயச் சகட முதைத்த மணாளற்கு (6-6-8).

11. போனாய் மாமருதின் நடுவே என் பொல்லா மணியே! (5-1-2).

12. பேய்முலை உண்டு சகடம் பாய்ந்து மருதிடை போய் முதல் சாய்த்துப் புள்வாய் பிளந்து களிறட்ட (5-3-8).

13. தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரர் உடல் வேறாப் பிளந்து வீயத் திருக்கா லாண்ட பெருமானே! (6-9-4).

சகட அசுரர்—சகடத்தில் ஆவேசித்த அசுரர். இவர்களது உடல் தளர்ந்து—கோப்புக் குலைந்து முறிந்து—நடுவே இற்றுப் போய். வீய—உருமாயும் படியாக. திருக்கால் ஆண்ட—திருவடிகளால் காரியங் கொண்ட. கண்ணன் அழித்தான் எனில்

கண்ணெச்சில் (த்ருஷ்டி)படுமென்று திருவடிகளை குலைத்தன என்கிறார், ஆழ்வார்

(4) வெண்ணெய் களவி லுண்டான்:

14. களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! (1-5-1).

களவு ஏழ் வெண்ணெய்—வெண்ணெயைக் களவிலே உண்ண விருப்பமுடையவனாய்; அன்றி, இவன் களவை யாவரும் வெளியிடுமாறு உண்டான். கள்வா!—பரிவுமிக்க யசோதைப் பிராட்டி சொல்லும் வார்த்தை. களவு ஏழ்—களவு எழ, அதாவது களவால், ''களவு'' என்ற கூச்சல் எழ.

15. சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வனை (திரு வி.91).

16. வைகலும் வெண்ணெய், கைகலந் துண்டான். (1-8-5).

17. உண்டாய் வெண்ணெய் சிறுமனிசர் உவலை யாக்கை நிலையெய்தி (1-5-8).

சிறு மனிசர் உவலை யாக்கை நிலை எய்தி—அற்பரான மனிதரின் அழிவான சரீரத்தின் நிலையைப் பெற்று, வெண்ணெய் உண்டாய்.

18. நோவ ஆய்ச்சி உரலோ டார்க்க இரங்கிற்றும் (6-4-4).

ஆய்ச்சி இவனை உரலோடு ஆர்க்க (பிணைத்துக் கட்ட). இரங்கிற்றும்—அதற்கீடுபட்டிருந்ததுவும்.

19. ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் என் மாயப் பிரானை (1-7-3).

ஆயர் கொழுந்தாய்—ஆயர்களுள் சிறந்தவனாய்; அவர்களுக்கு உயிராய் அவரால்—தாயாலின்றிப் பிறராலும். புடையுண்ணும்-வெண்ணெய் களவுசெய்து உண்டதன் விளைவாக அடிக்கப்பட்டதும். மாயப்பிரான்: எத்திறம் இந்த எளிமை!

(5) இளங்கன்னியரோடு குழைந்து மகிழ்ந்தான்:

20. வல்லிசேர் நுண்ணிடையாய்ச்சியர் தம்மொடும்கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர் (4-2-2)

வல்லி சேர் நுண் இடை—வஞ்சிக் கொடி போல் நுண்ணிய இடையுடைய. கொல்லைமை செய்து—வரம்பழிந்த செயல்கள் செய்து

21. குரவை ஆய்ச்சியரோடு கோத்ததும் (6-4-1).

22. கேயத் தீங்குழ லூதிற்றும் நிரை மேய்த்ததும் (6-4-2)

கேயம்: பாட்டுக்கள்; தனது தாழ்ச்சி விளங்குமாறு அமைத்து. இவ்வாறான சொற்கள் அமைத்து தீம் குழல் ஊதியதும் குழல் வழியே பெண்கள் வருவர்; இதே போல பசுக்களும் மீளும். பெண்களின் பேரை சங்கேதங்களாக அமைத்து ஊதுவான் கண்ணன். "நாம ஸமேதம் க்ருத ஸங்கேதம்".

(6) நப்பின்னைப் பிராட்டியை மணந்து கொண்டான் :

23. கோவை வாயாள் பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய் (4-3-1).

கோவை வாயாள்—நப்பின்னைப் பிராட்டி. இவளது முறுவலால் இவளை எவ்வகையாயினும் பெற வேண்டுமென்று விரும்பினான். ஏற்றின்—ரிஷபங்களின். எருத்தம்—பிடர், இறுத்தாய்—குலைத்தாய்.

24. வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் (5-10-2).

வதுவை—நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்வது வார்த்தையுள்—இந்த வார்த்தை கேட்டதும். ஏறு பாய்ந்ததும்—இவளை மணந்து கொண்டு களிப்பதற்கு ஏழு ரிஷபங்களோடு போர்செய்ததும்.

25. ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்து—இமில்லேற்று வன்கூன், கோட்டிடை ஆடினை கூத்து (திரு. வி. 21)

ஸ்ரீவைகுண்டத்தில் இவன் திருமஞ்சனம் கண்டருளும்போது, வெண்ணெய் விரும்பி இங்குப் போந்து நப்பின்னையை மணந்து கொள்ள ரிஷபங்களிடையே கூத்தாடினான், பகவான். பரத்வமும் விபவமும் ஆணைந்த நிகழ்ச்சி. இமில் ஏற்று—வலிய முசுப்புடைய ரிஷபங்களுடைய. வன் கூன் கோடு—வலிமை மிக்கு வளைந்த கொம்புகள். ஒரு கொம்பைப் பெறுவதற்கு ஏழு ரிஷபங்களின் கொம்புகளிடையே கூத்தாடினான். இவ்வாறு இவன் ரிஷபங்களோடு சண்டைசெய்தது, கூத்தாடுவது போல இவனுக்கு ஆயாசம் சிறிதுமின்றி மகிழ்ச்சியை விளைவித்தது.

(8) ருக்குமணிப் பிராட்டியை மணந்து கொண்டான்.

26. அன்றங் கமர்வென்று உருப்பிணி நங்கை அணிநெடுந்தோள் புணர்ந்தான் (7-10-6).

அன்று அங்கு—குண்டினபுரத்தில் சுயம்வரம் நடந்தவன்று. அமர்—போர்; சிசுபாலன் முதலோருடன். அமர்வென்று—அமரில் வென்று.

(9) குன்றமேந்தி ஆயர்களையும் பசுக்களையும் காப்பாற்றினான்:

27. குன்ற மேந்திக் குளிர்மழை காத்தவன் (3-3-8).

28. குன்ற மொன்றால் மழைகாத்த பிரானை (4-5-7).

29. குன்று குடையா ஆகாத்த கோவலனார் (பெ. திரு. 74).

30. மாண் குன்ற மேந்தி தண்மாமலை வேங்கடத்தும்பர் நம்பும் சேண் குன்றம சென்று (திரு. வி. 8).

மாண் குன்றம்—கோவர்த்தனம்; கண்ணபிரான் திருக்கையோடு கொண்ட தொடர்பால் இதை ஏந்தியவன் உறையும் திவ்யதேசம் திருவேங்கடம். சேண்குன்றம் — சிறப்புடைய திருமலை. விபவமும் அர்ச்சையும் இணைந்துள்ளன.

(10) வீரச் செயல்கள்:

31. சாயக் குருந்த மொசித்த தமியற்கு (6-6-8).

குருந்தம்—அசுரன் ஆவேசித்திருந்த குருந்த மரம். சாய—வேர்ப்பற்றில்லாமல் சாய்ந்து விழுமாறு. தமியற்கு—வேறு உதவியில்லாமல் தனியாகத் தகைந்த வீரனுக்கு.

32. கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள் பணிந்தோம் (பெ. திரு. 54).

காய்—விளங்காய். கன்று—கன்று வடிவில் வந்த அசுரனை.

33. தாம்பா லாப்புண் டாலும் அத்தழும்பு தாளினகப், பாம்பா லாப்புண்டு பாடுற்றாலும்—சோம்பாது (இப்),பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா! (பெ. திரு. 18)

தாம்பால் ஆப்புண்டாலும்—யசோதைப் பிராட்டியால் தாம்

பாம்பால் ஆப்புண்டாலும் — காளியனால் கட்டப்பட்டு வருத்த மடைந்தாலும். சோம்பாது — பின்வாங்காமல். பல் உருவை எல்லாம் படர்வித்து—தேவர், மனிதர் போன்ற ஜீவர்களைப் படைத்த. ஸம்ஸாரிகள் இப்படி அனாதரம் செய்தபோதும் இவர்களைப் படைத்த.

34. கவளக் கடாக் களிறட்ட பிரான் (4-6-5).

கவளம் கடாம் களிறு—மதம் பெருக்குவனவற்றைக் கவளமாகக் கொண்டு, அதனால் மதம் பெருகியால் மதித்த யானை குவலயாபீடம்.

35 நிகரில் மலரைச் செற்றதும் (6-4-3)

36. வேழ மருப்பை யொசித்தான் (1-9-2).

வேழம்: குவலயாபீடம், மருப்பு—தந்தம், ஒசித்தான்—முறித்தான்.

37 விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர் (2-4-8).

38 நலியும் நரகனை வீட்டிற்றும்வாணன் திண்டோள் துணித்த, வலியும் பெருமையும் யான் சொல்லும் நீர்த்தல்ல. (திரு. வி. 78).

வீட்டிற்றும்—அழித்ததும்.

(11) பாரதப் போரில் செய்தவை :

39. பிறந்த மாயா! பாரதம் பொருத மாயா! (8-5-10).

பாரதம் பொருத—பாரதப் போரில் அர்ச்சுனனுக்குத் துணையாக நின்று உதவி செய்த.

40. சித்திரத் தேர்வலவா! திருச்சக்கரத்தாய்! (7-8-3)

வியக்குமாறு தேரை நடத்தக் கூடியவன். பீஷ்மன் எறிந்த கணை அர்ச்சுனன் மேலே படாதவாறு தேரை நடத்தியது குறிப்பு.

41. கொல்லா மாக்கோல் கொலை செய்து—பாரதப் போர், எல்லாச் சேனையும் இருநிலத் தவித்த எந்தாய்! (3-2-3).

கொல்லா மா கோல்—கொல்லுவதற்கில்லாமல் குதிரைகளை ஓட்டுவதற்கான முட்கோல். கருவியாக. அவித்த—பீஷ்மர் போல்வார் காட்டுத்தீபோல் படர்ந்து வரத், தீயை அணைப்பது போல் யாவரையும் அழித்த.

42. நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்கருள் செய்து நின்று, பார் மல்கு சேனை அவித்த பரஞ் சுடரை (3-5-7).

43. தாயம் செறுமொரு நூற்றுவர் மங்க ஓரைவர்க்காய்த், தேச மறிய ஓர் சாரதியாய்ச் சென்று சேனையை நாசஞ் செய்திட்டு (7-5-9).

தாயம் செறும்—தாயமுறைப்படி பெறற அரசைச் செலுத்திக் கைக்கொண்ட,

44. அடலவரும் படை மங்க ஐவர்கட்காகி வெஞ்சமத்து—அன்று தேர். கடவிய பெருமான் (3-6-10).

அடலவரும்—தன் பாலே தீங்கு நினைத்து வருகின்ற. அட—அடுவதற்காக, மங்க—அழியுமாறு.

45. மண்மிசைப் பெரும் பாரம் நீங்க ஓர் பாரதமா பெரும்போர், பண்ணி மாயங்கள் செய்து சேனையைப் பாழ்பட நூற்றிட்டுப் போய் (6-4-10).

நூற்றிட்டு-சூழ்ந்து முடித்து.

46. ஊணுடை மல்லர் ததர்ந்த ஒலி—மன்னர்
ஆணுடைச் சேனை நடுங்கு மொலி—விண்ணுள்
ஏணுடைத் தேவர் வெளிப் பட்ட ஒலி—அப்பன்
காணுடைப் பாரதம் கையறை போழ்தே (7-4-5)

பாரதப் போர் நடத்தும்போது நேர்ந்த ஒலி பலவகை. ஊண் உடை மல்லர்—வலிமை தரும் உணவு உண்டு வளர்ந்த ததர்ந்த—நெரிந்து விழுந்த. ஆண் உடை சேனை—வீரபுருஷர்கள் நிறைந்த சேனைகள். விண்ணுள்—வானில். ஏண் உடை தேவர்—சிறந்தவர்களாகக் கொண்டாடப் பட்ட தேவர்கள் வெளிப்பட்ட—தோன்றிக் கொண்டாடிய. காணுடை பாரதம்—கண்டு வியக்குமாறு நிகழ்ந்த போர்.

47. நேர்சரிந்தான் கொடிக் கோழிகொண்டான்—பின்னும்
நேர்சரிந்தான் எரியு மனலோன்—பின்னும்
நேர்சரிந்தான் முக்கண் மூர்த்தி கண்டீர்—அப்பன்
நேர்சரி வாணன் திண்டோள் கொண்டன்றே (7-4-8).

கண்ணபிரான் வாணனோடு செய்த போரில்: நேர்சரிந்தான்—முதுகிட்டுப் போனான். கொடி கோழி கொண்டான்—மயிலைக்

கொடியாகக் கொண்ட முருகன், எரியும் அனலோன்—சுடர்கள் வாய்ந்த அக்நி பகவான்.

## 6. 9. யானைக்குமுன் தோன்றியது

1. தொழுங் காதற் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே (3-1-9).

தொழும் காதல்—கையில் மலரேந்தித் திருவடிகளில் சேர்த்துத் தொழ விரும்பிய.

2 மொய்மாம் பூம்பொழிற் பொய்கை முதலைச் சிறைப் பட்டு நின்ற, கைம்மாவுக் கருள்செய்த கார்முகில் வண்ணன் (3-5-1).

மொய்—அடர்ந்து. மா—உயர்ந்து. பூ—பூத்த. பொழில்—சோலையை யுடைய. பொய்கை—பொய்கையிலே. முதலைச் சிறைப் பட்டு—முதலையாலே சிறைப் பட்டு, கௌவப் பட்டு. கைம்மா—யானை; கஜேந்த்ரன்.

3. பூந்தண் புனற் பொய்கை யானை இடர் கடிந்த, பூந் தண்டுழாய் என் தனிநாயகன் (2-8-2).

## 7. அர்ச்சாவதாரம்

அர்ச்சை நிலையைப் பற்றி ஆழ்வார் அருளியுள்ளது; நெஞ்சினால் நினைப்பான் யவன், அவனாகும் நீள்கடல் வண்ணனே (3-6-9) மனத்திலே திருமேனியாக நினைத்துயாதொன்று ஏறியருளுவிக்கப்பட்டதோ, அத்தையே அவன் திருமேனியாக உடையவன்; இவன் பரந்த கடல் போலே இயல்புள்ள ஸர்வேச்வரன். "பக்தா நாம்" என்றவாறு இவன் பக்தர்களைக் காப்பதற்காகவே இந்நிலையில் விளங்குகிறான். இந்நிலை "பூர்ணம்" எனப்பெறுகின்றது: பரத்வம் முதலிய நிலைகளில் உள்ள கல்யாண குணங்கள் யாவும் சிறிதேனும குறைவின்றி அர்ச்சை நிலையில் விளங்குவன. இவனைப் பற்றுவதற்கு அனுகூலமான குணங்களும், பற்றிய பின்பு அனுபவித்து உய்வதற்கான குணங்களும் அர்ச்சை நிலையில் அபரிமிதமாக மிளிர்கின்றன.

ஆழ்வார் மங்களாசாஸநம் செய்துள்ள திருப்பதிகளில், ஒவ்வொன்றிலும் அனுபவித்த சிறந்த குணங்கள் இப்பகுதியில் விவரம் பெறுவன.

## 7. 1. திருவரங்கம்

வ்யூஹ நிலையில் ஜகத் ரக்ஷண சிந்தனை செய்வதுபோல் ஸர்வேச்வரன் இங்கு சயனத் திருக்கோலத்தில் விளங்குகிறான். இங்கு விளங்கும் குணம் வ்யூஹ ஸௌலப்யம், ஸௌஹார்தம்—நன் மனப்பான்மை,

1. கால சக்கரத்தாய் கடலிடங் கொண்ட கடல் வண்ணா! (7-2-7).

கால சக்கரத்தை நிர்வகிப்பவனாய், திருப்பாற்கடலிலே ஒரு கடல்சாய்ந்தாப்போல் கண்வளர்ந்தருள்பவனே!

2. "என் திருமகள் சேர் மார்வனே!" என்னும் என்னுடைய ஆவியே! (7-2-9).

பிராட்டியோடே இணைந்து அருள் செய்யும் இவன், எனக்கு உயிரானவான்.

3. வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில்லேந்தும் விண்ணோர் முதல்! (7-2-6).

உயிர்களைக் காப்பதற்காகத் திருக்கைகளில் திவ்யாயுதங்கள் ஏந்தியவன்: ஸர்வ - ப்ரஹரண - ஆயுத:- அன்றியும் இவன் நித்திய சூரிகளின் தலைவன்.

## 7. 2. திருவேங்கடம்

"கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றவாறு, இங்குறையும் பெருமானது திருவருள் வானரங்கள், வேடுவர் இவர்களிடமும் சார்கின்றது.

1. கண்ணாவானென்றும், மண்ணோர் விண்ணோர்க்கு.
தண்ணார் வேங்கட, விண்ணோர் வெற்பனே (1-8-3).

இவன் மண்ணோர்க்கும் நித்திய சூரிகளுக்கும் கண்ணாவான், நாயகனாவான். இரட்டைப் பிள்ளையைத் தாய் அணைத்துக் காப்பதுபோல் இந்த நிலை.

2. என் கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதி (3-3-4).

என் கண்—(இழிஞனான) என்னிடமும். பாசம்—பேரன்பு. இந்தப் பாசம் கொள்வதால், இவன் பரஞ்சுடர்ச் சோதி, அளவு கடந்த சோதி வாய்த்தவனாகிறான்.

3. ஓயு மூப்புப் பிறப்பிறப்புப் பிணி. வீயுமாறு செய்வான் திரு வேங்கடத் தாயன் (3-3-9)

ஆயன்—கண்ணபிரான்.

## 7. 3. திருக்குருகூர்

ப்ரணவத்தின் கருத்து இரண்டு: பகவானைப் பற்றி: ஞானமய மான ஆத்மாவுக்கு ஈச்வரன். ஆத்மாவைப் பற்றி: ஈச்வரனுக்கு இவன் உரியவனாவான். இவ்விரண்டு கருத்துக்களும் வெளியாகு மாறு நம்மாழ்வார் ஆதிப்பிரானுடன் உறையும் திவ்ய தேசம், திருக்குருகூர்.

1 திருக்குருகூரதனுட் பொலிந்து நின்ற பிரான் (4-10-5).

அர்ச்சை நிலையில் ஸௌசீல்யம், ஸௌலப்யம் வாய்ந்து' எல்லா குணங்களாலும் பூர்ணனாக விளங்குவோன்.

2, பேசநின்ற சிவனுக்கும் பிரமன் றனக்கும் பிறர்க்கும், நாயக னவனே (4-10-4).

யாவர்க்கும் காரணமும் காப்பு மாவான்.

3 ...திருக்குருகூரதனுள், ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே (4-10-7).

இதுவே உய்யும் வகை: பகவானை அனுபவிப்பதால் களித்து ஆடுகின்ற கருட பகவானைக் கொடியில் கொண்ட ஸர்வேச்வர னுக்கு அடிமை செய்வதுதான் ஆத்மாவின் ஸ்வரூபம்

## 7. 4. திருக்குறுங்குடி

நம்பியின் திருமேனி எழில், இவனிடம் நமக்கு பிரேமத்தை விளைவிப்பது.

1. நம்பியைத் தென்குறுங்குடி நின்ற—அச்
செம்பொனே திகழுந் திருமூர்த்தியை (1-10-9).

நம்பி—பரமபதத்தில் குணங்களால் பூர்ணனாக இருப்பவன், இங்கு யாவரும் அனுபவிக்குமாறு எழுந்தருளியிருப்பவன். செம் பொன் திகழும் திருமூர்த்தி—மனம், வாக்கு இவற்றிற்கு எட்டாத ஊாறு சோதிமயமாய் விளங்குவோன்

2. சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும், செங்கனிவா யொன்றினோடும் செல்கின்ற தென் நெஞ்சமே (5-5-1).

கட்டழகு; திவ்யாயுதங்கள் ஆபரணங்கள் போல் விளங்கிக் கட்டழகைப் பெருக்குகின்றன.

3. கன்னல் பாலமுதாகி வந்தென் நெஞ்சம் கழியானே (5-5-9).

''ஸர்வரஸ:''—எல்லா வகையாலும் இன்பம் தருவோன்.

## 7. 5. வான மாமலை

சிரீவர மங்கல நகர். எம்பெருமானைப் பெறுவதற்கு அவனது திருவடிகளே உபாயமாகக் கருதுகிறார், ஆழ்வார்.

1. சேற்றுத் தாமரை செந்நெலூடு மலர் சிரீவர மங்கல நகர், வீற்றிருந்த எந்தாய்! (5-7-1).

எந்தாய்!—எனக்கு அருள் புரிவதற்காக இங்கு உறைவோனே!

2 ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் (5-7-10).

எனக்கு, ஆறு—உன்னைப் பெறும் வழி. சரணாக—உபாயமாக. நின் பாதமே தந்தாய்: ' உன் திருவடிகளே சரணம்'' என்று துணிந்திருக்குமாறு அருள் செய்தாய்.

3. வந்தருளி யென் நெஞ்சிடங் கொண்ட வானவர் கொழுந்தே! (5-7-7).

வானவர் கொழுந்து—நித்திய சூரிகளுக்குத் தலைவன். எனக்கு அருள் செய்வதற்காகவே இங்கு வந்தவன். இதோர் அருளே!

## 7. 6. திருக்குடந்தை

பெருமானின் திருநாமம் ஆராவமுது. ஆதலால் இவனிடம் அனுபவிப்பது மாதுர்யம்—இனிமை.

1. ஆராவமுதே! அடியே னுடலம் நின்பால் அன்பாயே நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே! (5-8-1)

ஆராவமுதே!—எவ்வளவு அனுபவித்தாலும் மேன்மேலும் விரும்புமாறு இன்பம் விளைவிக்கும் பெருமானே! நின்பால்

அன்பாயே—உன்னிடம் அன்பே வளருமாறு. அடியேன் உடலம் நீராய் அலைந்து கரைய—என் சரீரம் நீர்ப்பண்டமாய்க் கட்டுக் குலையுமாறு கரையச் செய்யும்.

2. யாழினிசையே! அமுதே! அறிவின் பயனே! அரியேறே! (5-8-6).

யாழின் இசை: செவிக்கு இன்பம்; அமுதம்: நாவுக்கு. அறிவின் பயன்—ஞானத்திற்கு இன்பம் தருவது. அரி ஏறு—சிறந்த ஆண் சிங்கம்: கண்ணுக்கு இனிமை.

3. களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன் (5-8-8).

என் துன்பத்தைப் போக்கினாலும், போக்காவிடினும், களைகண் (புகல்). மற்று புகல் இலேன்; நீயே புகல்.

## 7. 7. திருவல்லவாழ்

அடியார்க்கு அருள்செய்வதே இயல்பாக வுள்ளவன், எம் பெருமான்.

1. நல்லருள் ஆயிரவர் நலனேந்துந் திருவல்லவாழ் நல்லருள் நம் பெருமான் நாராயணன் (5-9-10).

நல் அருள் ஆயிரவர்—பெருமானிலும் விஞ்சிய அருளுடைய ஆயிரம் அடியார்கள். நலன் ஏந்தும்—இவனைப் பற்றிய ஞானம் வாய்ந்து இவனைக் கொண்டாடும் மேன்மை வாய்ந்தோர்.

2. நாமங்களாயிரமுடைய நம்பெருமான் (5-9-11).
நாராயணன் ஆதலால் நாமங்கள் ஆயிரமுடையவன்.

3. தேனார் சோலைகள் சூழ் திருவல்லவாழ் உறையுங் கோனார் (5-9-1).

கோன், கோனார்—தலைவன்.

## 7. 8. திருவண்வண்டூர்

வியக்கத்தக்க பராக்ரமம் வாய்ந்து, யாவரையும் காக்கும் இயல்புடையவன், எம்பெருமான்.

1. மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த, ஏறு சேவக னார்க்கு (6-1-10).

மாறு இல் போர் அரக்கன்—போர் செய்வதில் தனக்கு எவரும் ஒப்பில்லாத இராவணன். ஏறு சேவகனார்—அடர்ந்த ஆண் பிள்ளைத்தனமுடைய இராமன்.

2. கறங்கு சக்கரக்கைக் கனிவாய்ப் பெருமானைக் கண்டு (6-1-3)

கறங்கு—சுழல்கின்ற கனிவாய்—அடியார்களைப் பெற்றதால் முறுவல். பெருமான் இதனால் முதன்மை தோன்ற விளங்குகிறான்.

3. பெருந்தண் தாமரைக்கண் பெருநீண்முடி நால்தடந்தோள் கருந்திண் மாமுகில் போல் திருமேனி யடிகளையே (6-1-8).

யாவர்க்கும் ஸ்வாமி என்பது தோன்ற விளங்கும் பெருமான்.

## 7. 9. திருவிண்ணகர்

இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான், யாவர்க்கும் பந்துவாகித் தன்னைப் பெறுவதற்குத் தானே உபாயமாய் விளங்குவோன்.

1. நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானை (6-3-1).

நல்குரவு—வறுமை. எதிர்நிலைப் பண்புகள் வாய்ந்த நிலை, குணம் போன்றவற்றிற்கு உரியனாக இருப்பவன், இப்பெருமான்.

2. தென்சரண் திசைக்குத் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் (6-3-8).

தென் திசைக்கு சரண்—இங்குள்ளோர்க்குப் புகல்.

3. பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்த், தன்னொப்பார் இல்லப்பன் (6-3-9).

பொன் அப்பன்,...—இனிமை குறிப்பு, என் அப்பன்—எளிமை குறிப்பு. பொன், மணி, முத்து—இவற்றைக் கையிற் கொள்வதால் மேன்மை பெறுவது நோக்கு.

## 7. 10. தொலைவில்லி மங்கலம்

இது இரட்டைத் திருப்பதி எனப்பெறும். எம்பெருமான் களின் திருநாமம் தேவபிரான், அரவிந்த லோசனன்.

1. அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே (6-5-10).

இவ்வூர் திருநாமத்தின் இனிமை, பிறர் சொல்லச் செவியாரக் கேட்டு இன்புறுவது.

2. துவளில் மாமணி மாட மோங்கு தொலைவில்லி மங்கலம் (6-5-1).

துவள் இல் மா மணி மாடம்—குற்றமே யில்லாத சிறந்த மணி பதித்த மாடங்கள். ஸ்ரீவைகுண்டம் போல் சிறப்புடையது இந்த திவ்யதேசம்.

3. நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு செந்நெ லோங்கு செந் தாமரை, வாய்க்குந் தண் பொருநல் வடகரை வண் தொலைவில்லி மங்கலம். (6-5-6)

நீர் வளம், நிலவளம்.

## 7. 11. திருக்கோளூர்

இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான் வைத்த மாநிதி; ஆபத் துக் காலத்தில் உதவும் தனம் போன்றவன் ஆபத் ஸகத்வம் இவனது குணம்.

1. செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே (6-7-7).

அளவற்ற செல்வம் கரைபுரளுமாறு இவன் கிடக்கும் திருக் கோளூர். தன் மேன்மை பாராதே அடியார்களைக் காப்பதற்கே இங்குறைகின்றான் பெருமான்.

2. அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனை (6-7-9)

திருக்கண்களின் அழகால் இவன் ஸர்வேச்வரன் என்பது தோற்றும்.

3. உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன் எம்பெருமான் (6-7-1).

இப்பெருமான் சோறு போல் போஷகமாயும், நீர்போல் தாரகமாயும், வெற்றிலை போல் போக்ய மாகவும்—எல்லா வகை யாலும், நமது இன்ப அனுபவத்திற்குரியவன்.

## 7. 12. திருப்பேரை

பேரெழிலாலும் அரிய குணங்களாலும் அடியாரை இன்புறச் செய்யும் மேன்மை வாய்ந்தவன், இங்கு உறையும் எம்பெருமான்

1. (என் நெஞ்சம்) வானப் பிரான் மணிவண்ணன் கண்ணன் செங்கனி வாயின் திறத்ததுவே 7-3-2).

என் நெஞ்சம் இவனது அழகிலே படிந்தது.

2. வேத வொலியும் விழா வொலியும், பிள்ளைக் குழா விளையாட்டொலியும் அறாத் திருப்பேரை (7 3-1).

அறா—குறையாமல் என்றும் நிகழ்கின்ற; எப்போதும் விழா, பிள்ளைக் குழாங்களின் விளையாட்டொலி. விளையாட்டொலி, சிறு பிள்ளைகளும் பகவானது மேன்மையே சொல்லிக் கொண்டு விளையாடும் கோஷம் ''திங்களும் நாளும் விழாவறாத.''

3. மகர நெடுங் குழைக்காதன் மாயன், நூற்றுவரை அன்று மங்க நூற்ற, நிகரில் முகில் வண்ணன் நேமியான் (7-3-10).

முகில் வண்ணன் : திருமேனி யழகு; குழை: ஒப்பனை யழகு. நேமியான்—திவ்யாயுதங்களால் அழகு. நூற்றுவரை அன்று மங்க நூற்ற : அடியார்களது துன்பங்களைக் களைவோன்.

## 7. 13. திருவாறன்விளை

இன்பப் பொலிவு இவ்வூர்ப் பெருமானின் குணம்.

1. இன்பம் பயக்க எழில் மலர் மாதருந் தானும் இவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1).

பிராட்டியுடன் எம்பெருமான் எழுந்தருளி இன்புறும் இந்த திவ்ய தேசத்தில் ஆழ்வார் தாம் பாடிய திருவாய்மொழியை விண்ணப்பஞ் செய்வதாகிய கைங்கர்யத்தை விரும்புகிறார்.

2. வாணனை ஆயிரந் தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே (7-10-7).

3. மாகந்த நீர் கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழக் கூடுங் கொலோ? (7-10-2).

மாகந்த நீர்—பரிமளம் மிக்க தண்ணீர். இராமன் மீண்டு எழுந்தருளும் போது, பரதன் நந்திக் ராமம் முதல் பரத்வத்வா ஜாச்ரமம் வரையில் பனிநீரைப் பரப்பியது போல், நீர் தூவி.

## 7. 14. திருக்குளந்தை

வியக்கத்தக்க செயல்கள் வல்லவன் இவ்வூர்ப் பெருமான்.

1. மாடக்கொடிமதிள் தென் குளந்தை வண்குடபால் நின்ற மாயக் கூத்தன் (8-2-4).

வண்குட பால்—அழகியதான மேலைப் பாகத்தில். மாயக் கூத்தன்—வியக்குமாறு செயல்கள்வல்லவன். வண்குடபால்: பரத்வ நிலைபோல் அழகு.

## 7. 15. திருவண்பரிசாரம்

இங்கு உறையும் பெருமான் சுகுமாரமான திருமேனி வாய்ந்த வான்; இவன் விஷயமாக ஆழ்வார் பெரிதுங் கவலை கொண்டு தமது பரிவை வெளியிடுகிறார்.

1. ஆளும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம் (8-3-3).

மலையைச் சுமப்பது போல் திருக்கரங்களில் இப்பெருமான் சங்கும் சக்கரமும் ஏந்துகிறான். இவற்றை இவன் கையிலிருந்து வாங்கிக் கொண்டு, தாம் ஏற்றுக் கூடச் செல்ல ஒருவரும் இல்லையே.

2. உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடும் ஒருபாடு உழல்வான் ஓரடியானும் உளன் (என்று சொல்லுபவர் எவரு மிலர்.) (8-3-7).

திருவண் பரிசாரம் போவார் பலர் உளர். "இளைய பெருமாளைப் போலே சங்கு சக்கரங்களை இவரிடமிருந்து வாங்கக் கையில் ஏந்தி உடன் செல்லஅடியேன் ஒருவன் உளன், இதை இப் பெருமானிடம் விண்ணப்பஞ் செய்வோர் இல்லையே"—என்று கலங்குகிறார், ஆழ்வார்.

## 7. 16. திருச்சிற்றாறு

அபாரமான சக்தி வாய்ந்தவன் இப்பெருமான். விபீஷணாழ் வான் விஷயமாக சுக்ரீவன் சங்கிக்க, இராமன் தனது மிடுக்கை விளக்கி இந்தச் சங்கையைப் போக்கினான், "பகைவர் பிசாசராயி

னும் தானவராயினும் யக்ஷராயினும் என் விரல் நுனியாலே அவர்களை மாய்க்க வல்லேன்'' என்று. இவ்வாறான பிடுக்கு இங்குக் குறிப்பு.

1. வார்கடா வருவி யானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி, ஊர்கொள் திண்பாகன் உயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று, ...கஞ்சனைத் தகர்த்த, சீர்கொள் சிற்றாயன் (8-4-1)

யானை மாமலை— குவலயாபீடம் என்ற யானையாகிய மலை. வார் கடா அருவி—பாய்கின்ற மதம், இந்த மலையில் அருவி, இணை மருப்பு குவடு—தந்தங்கள் இரண்டும் இந்த மலைச் சிகரங்கள். ஊர் கொள் திண் பாகன்—யானையின் பலம் குலைந்த போதும் அதை நடத்தவல்ல பேராற்றல் உடையபாகன். மல்லர்—சாணூரன், முஷ்டிகன். சிற்றாயன்—சிறு பிள்ளையாகிய கண்ணன். சார்வு—புகல்.

2. எனக்கு நல்லரணை என தாருயிரை இமையவர் தந்தை தாய் தன்னை. (8-4-6).

3 திகழ என் சிந்தையு ளிருந்தானை... புகழுமா றறியேன். (8-4-8).

## 7. 17. திருக்கடித்தானம்

ஆழ்வாரது வீடாய் தீரக் கலந்தவன், இந்த திவ்ய தேசத்து எம்பெருமான்.

1. எல்லியுங் காலையும் தன்னை நினைந்தெழ
நல்ல அருள்கள் நமக்கே தந்தருள் செய்வான்
அல்லியந் தண்ணந் துழாய்முடி யப்பனூர்
செல்வர்கள் வாழுந் திருக்கடித் தானமே (8-6-1).

நல்ல...செய்வான்—குற்றம் பாராதே அருளே செய்வான். செல்வர்கள்; இளைய பெருமாள் போலே கைங்கர்யத்தில் ஊன்றியிருப்பவர்கள்.

2. திருக்கடித் தானமும் என்னுடைச் சிந்தையும் ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் (8-6-2).

ஒருக்கடுத்து—ஒக்க விரும்பி.

3. வானிந நிலம கடல் முற்று மெம் மாயற்கே ஆனவிடத்தும் என் நெஞ்சும் திருக்கடித்தான நகரும் தன தாயப் பதியே (8-6-9).

எம் மாயற்கு வான், இந்நிலம், கடல் முற்றும் ஆன இடத்தும்—யாவும் இவனுக்கேயாக இருந்தும் என்நெஞ்சும் திருக்கடித்தான நகரும் தாயப்பதி—தந்தை வழியாகப் பெற்ற செல்வம் போலே, என் நெஞ்சையும் இந்த திவ்ய தேசத்தையும் ஒக்க விரும்புகிறான்' பெருமான்.

## 7. 18. திருப்புலியூர்

நாயக லக்ஷணங்கள் யாவும் வாய்ந்தவன் இங்குறையும் பெருமான்.

1. கருமாணிக்க மலைமேல்...செய்யபிரான் (8-9-1).

2. மின்னு நீள்முடியாரம் பல்கலன் தானுடை எம்பெருமான் (8-9-2).

ஆபரண சோபை: மின்னும் நீள்முடி. ஆரம், பல் கலன் (பல ஆபரணங்கள்). எம்பிரான்: இச் செவ்வியால் என்னைத் தனக் காக்கிக் கொண்டவன்.

3. சீர்வளம் கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான் (8-9-4).

சீர்வளம் கிளர்—அடியார்களைக் காப்பதற்கான குணங்கள் அடர்ந்த. தேவபிரான்—தேவர்களுக்கும் நாயகன்.

## 7. 19. திருப்புளிங்குடி

அனுபவிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டும் திருமேனி யழகுடன் கல்யாண குணங்கள் யாவும் வாய்ந்தவன், இத்தலத்துப் பெருமான்.

1. பவளம் போற் கனிவாய் சிவப்ப நீ காண வந்து நின் பல்நிலா முத்தம், தவழ்கதிர் முறுவல் செய்து நின் திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய் (9-2-5).

பல் நிலா முத்தம்—பற்களின் ஒளி முத்துநிரை போல் விளங்க, தவழ் கதிர் முறுவல் செய்து—ஒளி தவழும்படி முறுவல் செய்து, திருக்கண் தாமரை—திருக்கண்களாகிய தாமரை, தயங்க—ஒளி செய்யுமாறு. அடியார்களைக் காண்பதால் முறுவல்.

2. நீயொருநாள் படிக்கு அளவாக நிமிர்த்த—நின் பாத பங்கயமே தலைக்கணியாய் (9-2-2).

படிக்கு—பூமிக்கு. அளவாக நிமிர்த்த—பரப்பிற்கு ஏற்றவாறு ஆக்கிக்கொண்ட. அணியாய்—ஆபரணமாகுமாறு செய்தருள வேணும் என் தலைக்கு உன் திருவடி ஆபரணமாக வேண்டும்.

3 தடங்கொள் தாமரைக்கண் விழித்து, நீ எழுந்து உன் தாமரை மங்கையும் நீயும் இடங்கொள் மூவுலகும் தொழ இருந்தருளாய் (9-2-3).

பிராட்டியோடு இணைந்த உன்னை இம்மூவுலகத்தோரும் தொழுவதை நான் காண வேண்டும்.

4 வீற்றிடங் கொண்டு வியன்கொள்மா ஞாலத்திதனுளும் இருந்திடாய்—அடியோம், போற்றி ஓவாதே கண்ணிணை குளிரப் புதுமல ராகத்தைப் பருக (9-2-9).

நாங்கள் கண்டு களிக்கும்படி நீ வீற்றிருக்க வேண்டும். அடியோங்கள் உன்னை ஓவாதே போற்ற வேண்டும். எங்களது கண் கண்டு குளிருமாறு. புதுமலர் ஆகத்தைப்பருக—மலர் போலே சுகுமாரமான உன் திருவடிவை, விடாய்த்தவன் தண்ணீர் பருகுவது போல் அனுபவிக்குமாறு.

## 7. 20. வரகுணமங்கை

வீற்றிருக்கும் பேரழகு.

1. வரகுணமங்கை இருந்து (9-2-4). ''பிரான் இருந்தமை காட்டினீர்'' என்பது போல் அழகு.

## 7. 21. திருவைகுந்தம்

நின்றருளும் அழகு.

1. வைகுந்தத்துள் நின்று (9-2-4)

''நிலையார நின்றான்'' என்றவாறு.

## 7. 22. திருக்காட்கரை

அடியார்களது நெஞ்சில் உறைந்து, இவர்களை அனுபவிப்பிக்கும் திவ்ய குணம், இப்பெருமானது.

1. நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்து புகுந்து—என்னை ஈர்மை செய்து என்னுயிராய் என்னுயிர் உண்டான் (9-6-3).

நீர்மையால்... புகுந்து—தான் ஸ்வாமி, நான் தாஸன் என்ற முறையிலே பரிமாறலாகும் என்று என் நெஞ்சிற் புகுந்தான். இந்த குணத்தால் என்னை வசீகரித்து, என்னை நீர்ப்பண்டமாக்கி, அனுபவித்தான்; எனக்குத் தன்னாலல்லது செல்லாதபடி பண்ணி என்னைக் கலங்கச் செய்தான்.

2. ஆட்கொள்வானொத்து என் உயிருண்ட மாயனால் (9-6-7).

என்னை அடிமை கொள்வது போல்நெஞ்சில் புகுந்து, என்னை நன்றாக அனுபவித்து வெறுந்தறையனாக்கினான்

3. வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம், பாரித்துத்தான் என்னை முற்றப் பருகினான் காரொக்கும் காட்கரை யப்பன் கடியனே (9-6-10).

நான் பாரித்தது. பசியன் சோற்றை வாரி விழுங்குவதுபோலப் பேராவலுடன் இப்பெருமானை அனுபவிப்பது. எனக்கும் முன்னதாக இவன் செய்தது: விடாய்த்தவன் தண்ணீர் பருகுவது போல, என்னைத் தன் பிரேமத்தால் நீர்ப்பண்ட மாக்கி நன்கு அனுபவித்தான். பசியைப் பொறுக்கலாம், தாபத்தைப் பொறுக்க இயலாது.

## 7. 23. திருமூழிக்களம்

பக்தரோடு உறைந்து, இவர்களைப் பிரிய இயலாமை இந்த திவ்யதேசத்துப் பெருமானின் பண்பு.

1. தமரோடங் குறைவார்க்கு (9-7-2),

தமரோடு—தன் பரிஜனங்களுடன். அங்கு உறைவார்க்கு—நித்திய வாஸஞ் செய்பவர்க்கு

2. செக்கமலத் தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத் திலைபோலும் திருமேனி அடிகளுக்கே (9-7-3).

கண், கை, கால், செங்கனிவாய் இவை செக்கமலத்தலர் போலும். செம் கமலத்து இலைபோலும், அவர் திருமேனி—கமலத்து இலை பெருமானின் பேரழகு. அலர்—புஷ்பம்.

3. தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும், துளிவார்கட் குழலார்க்கு (9-7-5).

தெளி விசும்பு திருநாடா—நிர்மலமான ஆகாசத்தைத் தான் நித்தியமாக உறையும் ஸ்தானமாகக் கொண்டு, தீவினையேன் மனத்துறையும்—இத்தையே பரமபதமென்று கருதி எளியேனது மனத்துள் உறைபவன். தீவினையேன்—இவனைப் பிரிந்து தரிக்க இயலாத என். துளி வார்கள் குழலார்க்கு—துளித்து ஒழுகுகிற மதுவுடைய குழல்கற்றையால் விளங்கும் தலைவர்க்கு.

## 7. 24. திருநாவாய்

உலகமாகிய பெருங் கடலைக் கடப்பதற்கான தோணி போன்றவன் இப்பெருமான். ''விஷ்ணு போதோ நராணாம்'', ''வைகுந்தன் என்பதோர் தோணி''.

1. அந்தோ! அணுகப் பெறுநாள் என்று எப்போதும் சிந்தை கலங்கித் திருமால்! என்றழைப்பன் (9-8-10).

அணுகப்பெறு(ம்)நாள்—உலகமாகிய பெருங்கடலைக் கடந்து அணுக வாய்க்கும் நாள்.

2 நாளே லறியேன் எனக்குள்ளன நானும் மீளா அடிமைப் பணி செய்யப் புகுந்தேன் (9-8-4).

எனக்கு உள்ளன நாள் (ஏல்) அறியேன்—உன்னை விட்டுப் பிரிந்திருக்க வேண்டிய காலம் எவ்வளவோ, அறிய மாட்டேன். நானும் மீளா அடிமை...புகுந்தேன்—நித்திய சூரிகளைப் போலே தொடர்ந்து அடிமை செய்யும் ஆர்வமுடையேன்.

3. தேவன் விரும்பி யுறையுந் திருநாவாய்
யாவ ரணுகப் பெறுவார்— இனியந்தோ? (9-8-9).

யாவர் அணுகப் பெறுவார்?—இவனை அணுகிக் கைங்கர்யம் செய்வது எனக்கு நேருமோ?

## 7. 25. திருக்கண்ணபுரம்

பக்தர்களுக்குப் புகலாக இம்மை நலனும் மோக்ஷமும் அளிப்பவன் இங்குறையும் எம்பெருமான். இந்த குணம் சரண்ய முகுந்தத்வம் எனப்பெறும். சரண்யன்—நமக்கு புகல். முகுந்தன்—இம்மை நலனும் மோக்ஷமும் தருவோன்.

1. அன்பனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம் (9-10-6).

2. சரணமாகும் தனதா ளடைந்தார்க் கெல்லாம், மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் (9-10-5).

வைகுந்தம் சேருவதற்கு முன் புண்ணிய பாவங்கள் தொலைய வேண்டும். இது பிறவிகள் பிறந்தே நேரும். ஆனால் அண்டிய அன்பர் இப்போதுள்ள சரீரம் விட்டபின்பு, இவனது அருளாலே மோக்ஷம் பெறுவர்.

3. திருக்கண்ணபுரம் சொல்ல, நாளும் துயர் பாடு சாராவே (9-10-10).

பக்தியாலும் ப்ரபத்தியாலும் இறைவனை அடையக்கூடும். அன்றேல் இவனது திருவடிகளில் பணிந்து உய்யக்கூடும். இதற்கும் சக்தி யில்லாதவர்கள் இவனுறையும் ஸ்தலமான திருக்கண்ணபுரம் என்ற திருநாமத்தைச் சொல்லி முக்தி பெறலாம்.

## 7. 26. திருமோகூர்

மோக்ஷம் பெற்றோர் அர்ச்சிராதி கதியில் செல்லும்போது வழித்துணையாவான், இந்த திவ்ய தேசத்து எம்பெருமான்.

1. தோளும் நான்குடைச் சுரிகுழல் கமலக்கட் கனிவாய், காள மேகத்தை யன்றி மற்றொன்றிலம் கதியே (10-1-1).

பரமபதத்திற்கு அழைத்துச் செல்லும் பகவான்காளமேகம் வழியில் போகும் போது முன்னே ஒரு காளமேகம் பெய்து கொண்டு போவதுபோல் நமது களைப்பை இவன் ஆற்றுவது நோக்கு. இவன் அழைத்துச் செல்வதால் நடந்துசெல்லும் களைப்பெல்லாம் நீங்கும்; அன்றியும் திருமேனி அழகும் மனத்தைக் கவரும்

2. திருமோகூர், சுற்றி நாம் வலஞ் செய்ய நம் துயர் கெடும் கடிதே (10-1-7).

3. காமருபங் கொண்டு எழுந்தளிப்பான் திருமோகூர் நாமமே நவின்றெண்ணுமின் ஏத்துமின் நமர்காள்! (10-1-10).

காமருபம்... அளிப்பான்—அடியார்களைக் காப்பதற் கேற்ற திருமேனியைக் கொண்டு காப்பவன்.

## 7. 27. திருவனந்தபுரம்

நித்திய சூரிகளோடு இங்குள்ளோர் வணங்கித் தொழும் பெருமை வாய்ந்தவன் இப்பெருமான்.

அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதிசேர் அனந்தபுரத்து
அமரர்கோன் அர்ச்சிக்கின்று அகப்பணி செய்வர்விண்ணோர்
நமர்களோ! சொல்லக் கேண்மின் நாமும் போய் நணுக
வேண்டும் (10-2-6).

அமரராய் திரிகின்றார் — தேவர்கள். ஆதி — இவர்களைப் பிறப்பித்தவன். அமரர்கோன் அர்ச்சிக்கின்று — சேனாபதியாழ்வான் அர்ச்சிக்கும்போது. விண்ணோர் — நித்திய சூரிகள், அகப்பணி செய்வர் — அந்தரங்கமான கைங்கர்யங்கள் செய்வர். நமர்களோ! — தம்முடையோரானவர்களே!

2. மன்றலர் பொழில் அனந்தபுர நகர் மாயன் நாமம், ஒன்றுமோர் ஆயிரமாம் உள்ளுவார்க்கும்பரூரே (10-2-2).

நாமம் — குணத்தைப் பற்றிய திருநாமம். ஒன்றும் — ஏதேனுமொன்றாகிலும், ஓர் ஆயிரமாம் — ஆயிரம் வகையாக. ஒரு திருநாமமே, பல வகையாலும், ரக்ஷகமாகும்; இவ்வாறே ஆயிரங்களும் ரக்ஷகமாவன உள்ளுவார்க்கு — கருதவல்லவர்களுக்கு (இது) உம்பர் ஊரே — ஸ்ரீவைகுண்டம் போன்றதாகும்.

3 மடைத்தலை வாளை பாயும் வயலணி அனந்தபுரம், கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே (10-2-7).

கைங்கர்யத்தின் பயன் குறிப்பு.

## 7. 28. திருவாட்டாறு

அடியார்களது விருப்பத்திற்கிணங்க நடந்து கொள்பவன். இங்குள்ள ஸர்வேச்வரன். இந்த குணம் ஆச்ரித பாரதந்த்ர்யம்.

1. அருள்பெறுவார் அடியார்தம் அடியனேற்கு ஆழியான்
அருள் தருவான் அமைகின்றான் (10-6-1).

ஸர்வேச்வரனுடைய அருளைப் பெற்ற அடியார்களுக்கு அடியேனான எனக்கு, ஈச்வரன் அருள்புரிய நினைக்கின்றான். இது விதி வகை — பாக்யம் என்கிறார் ஆழ்வார், தப்ப முடியாத பாக்யம்

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-3)

3. பிரியா தாட்செய்யென்று பிறப்பறுத்து ஆளறக் கொண்டான் (10-6-10).

ஆட்செய்—(எனக்கு) அடிமை செய்வாய். பிறப்பு அறுத்து—பிறவிகளை அறவே ஒழித்து ஆள் கொண்டான்—நித்தியமான கைங்கர்யத்தையும் கொண்டான்.

## 7. 29. திருமாலிருஞ்சோலை

மெய்யன்பரது மேனியில் மோகங்கொள்பவன் இங்குறைபவன் ஆழ்வாரது திருமேனியில் மோகங் கொண்டு, இந்தத் திருமேனியோடே இவரை ஸ்ரீவைகுண்டத்திற்கு அழைத்துச் செல்ல விரும்பினான், திருமாலிருஞ்சோலைப் பெருமான். இந்த விருப்பத்தைத் தவிர்க்குமாறு ஆழ்வார் இறைஞ்சினார்.

1. என்னை முற்று முயிருண்டு என் மாயவாக்கை யிதனுள் புக்கு, என்னை முற்றுந் தானேயாய் நின்ற மாயவம்மான் (10-7-3).

என்னை முற்றும் உயிர் உண்டு—எல்லா வகையாலும் என் ஆத்மாவோடு கலந்து அனுபவித்து. என் மாய ஆக்கை இதனுள் புக்கு—இழிவான சரீரத்திலும் பிரேமம் கொண்டு. என்னை முற்றும் தானேயாய் — ஆத்மா, சரீரம் இவற்றிற்குத் தானே அபிமானியாகி, "நான், என்னுடைய" என்ற கருத்துக் கொள்ளா வகையில் பரிமாறினான்.

2. பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித், தென்னா வென்னும் என்னம்மான் (10-7-5).

பண்ணும் இசையும் சிறந்த பாடல்கள் தன்னைப் பற்றியவை —என்னைக் கொண்டு பாடுவித்து, தென்னா என்னும்—பாட்டின் இனிமையால் "தென்னாதெனா" (என்ன இனிமை! என்ன இனிமை! என்று இவன் முழங்குகிறான்.

3. அருமா மாயத்தென துயிரே மனமே வாக்கே கருமமே ஒருமா நொடியும் பிரியான் என்னூழி முதல்வ னொருவனே (10-6-8).

அரு மா மாயத்து எனது உயிரே—இழிவாய் வியக்கத்தக்க ப்ரக்ருதியோடு தொடர்பு கொண்டுள்ள ஆத்மாவையும், மனம், வாக்கு, கருமம்—இவற்றையும். ஒரு மா நொடியும் பிரியான்—இறைப்போதும் பிரிய விரும்புவதில்லை.

## 7. 30. திருப்பேர் நகர்

இங்குறையும் பெருமானது குணம், அடியார்களை ஏற்றுக் கொள்ள அவகாசம் பார்த்திருப்பது.

1. திருமாலிருஞ் சோலை மலை யென்றேன்—என்னத் திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-1).

ஏதேனுமொரு மலையின் பேரைச் சொல்லுவது போலே ஆழ்வார் 'திருமாலிருஞ் சோலை'' என்றார். தன்னையே சொல்லியதாகக் கருதிப் பெருமான் இவரது திருவுள்ளத்தில் புகுந்தான்.

2. பேரே யுறைகின்ற பிரான் இன்று வந்து பேரே னென்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-2).

பேரேன் என்று—''இனி ஒருநாளும் போக மாட்டேன்'' என்று சொல்லி, பெரிய பிராட்டியார் தன்னிடம் சொல்லு மத்தையே (அகலகில்லேன் இறையும்) என்பதையே சொல்லுகின்றான்.

3. உண்டு களித்தேற்கு உம்பர் என் குறை? மேலைத்
தொண்டு களித்து அந்திதொழும் சொல்லுப் பெற்றேன்
வண்டு களிக்கும் பொழில் சூழ் திருப்பேரான்
கண்டு களிப்பக் கண்ணுள்நின் றகலானே (10-8-7).

உண்டு களித்தேற்கு—இவனோடு கலந்து அநுபவித்துக் களித்த எனக்கு. உம்பர் என் குறை—மேலே சென்று அநுபவிக்க வில்லை என்ற குறைதான் உண்டோ? மேலை தொண்டு உகளித்து —அபரிதமான தாஸ்ய ரஸத்தை அநுபவித்து அந்தி தொழும் சொல்—பிரேமம் மிக்கு நம: என்று சொல்லவும் பெற்றேன். நான் கண்டு களிக்குமாறு, அவன் என் கண்ணுள் நின்று அகலான்.

## 8. த்வயப் பொருள்

த்வயம் என்பது இரண்டு வாக்கியங்களாலான மந்த்ரம்—மந்த்ர ரத்னம் என்று பாராட்டப்பெறுவது. இவ்வாக்கியங்கள்: ஸ்ரீமந்-நாராயண-சரணௌ சரணம் ப்ரபத்யே; ஸ்ரீமதே நாராயணாய நம: என்பன. இவற்றின் கருத்து: பெரிய பிராட்டியாரோடு எப்போதும் இணைந்துள்ள நாராயணனது திருவடிகளைச் சரணமாகப் பற்றுகிறேன்; பெரிய பிராட்டியாரோடே இணைந்துள்ள நாராயணனுக்கு எல்லாவகைக் கைங்கர்யங்களையும் செய்வேன். இக்கருத்துக்கள் திருவாய்மொழியில் முதல் பத்து முதல் பத்தாம் பத்து வரையில் அடங்கியுள்ளன. ''த்வயார்த்

நம் தீர்க்க சரணாகதி''; ஆதலால் ஸ்ரீராமாயணத்தைப்போல் திருவாய்மொழியும் சரணாகதி-க்ரந்தமாகும்.

## 8. 1. ஸ்ரீமத்

ஸ்ரீ:— பெரிய பிராட்டியார். ஸ்ரீமத்—பெரியபிராட்டியாரோடே என்றும் பிரியாமலிருக்கும் இக்கருத்து மூதற் பத்தில் வந்துள்ளது.

1. மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள் (1-3-1).
   அடிகள்—ஸ்வாமி.
2. திருமகளார் தனிக் கேள்வன் (1-6-9).
3. திருவின் மணாளன் (1-9-1).
4. செல்வ நாரணன் (1-10-8).
   பெரிய பிராட்டியார் தனக்குச் செல்வமாக உடையவன்.

## 8. 2. நாராயணன்

உலகங்களைக் காப்பவன் என்பது குறிப்பு இது இரண்டாம் பத்தில் விளங்கும்.

1. ...விண்ணோர் நாயகன்
   எம்பிரான் எம்மான் நாராயண னாலே (2-7-1).

   விண்ணோர் நாயகன் எம்பிரான்—நித்திய சூரிகளை அனுபவிக்கச் செய்பவன். அமமான்—அவர்களைப் போலே என்னைத் தனக்காக்கிக் கொண்டவன்; உதாரன்.

2. தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு (2-1-7).
3. நாரணன் முழுவே முலகுக்கும் நாதன் வேத மயன் (2-7-2).

வேதமயன் : ' நாராயணை பரம் ப்ரஹ்ம'' என்று வேதத்தால் போற்றப்படுகிறவன். இவனே உலகங்களுக்குக் காரணம்.

## 8. 3. சரணை

சரணை—திருவடிகள் இரண்டையும் பெரிய பிராட்டியாரோடு ஒன்றியிருக்கும் இவனது திருவடிகள் இரண்டையும், இது மூன்றாம் பத்தில் விவரம் பெற்றுள்ளது.

1. கொம்பு போல் சீதை பொருட்டு இலங்கை நகர் அம்பெரியுய்த்தவர் தாளிணை... (4-2-8).

அம்பு எரி உய்த்தவர்—சிலையில் பொருந்தும் போது அம்பு, வெளிவரும் போது நெருப்பு அம்பாலே எரி உய்த்தவர்.

2. ...நான்முகனும் சடைமுடி யண்ணலும், செம்மையால் அவன் பாத பங்கயம் சிந்தித் தேத்தித் திரிவரே (3-6-4).

3. மூவுலகுந் தொழுதேத்தும் சீரடியானே! (3-8-1).

4. ...அன்று தேர் கடவிய பெருமான் கனை கழல் காண்பது என்று கொலோ? (3-6-10).

இவனது திருவடிகளை வணங்குவதே யாவர்க்கும் இன்பம்.

## 8. 4. சரணம்

சரணம்—புகல், உபாயம், ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளே புகல் என்பது நாலாம் பத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

1. திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ (4-1-1).

2. மேவிநின்று தொழுவார் வினை போக மேவும் பிரான் (4-5-4).

மேவி நின்று—வேறெதுவும் பயனாகக் கருதாமல், நிலையாக நின்று. தொழுவார்—தொழும் அடியார்களது. வினை போக—. மேவும் பிரான்—கலந்து பரிமாறும் பெருமான். சரணமாகப் பற்றுவதன் பயன்.

3. கூட்டரிய திருவடிக்கள் எஞ்ஞான்று கூட்டுதியே? (4-9-8).

கூடு அரிய—பெறுதற்கரிதான கூட்டுதி—திருவடிகளில் சேர்த்துக் கொள்வாய் எஞ்ஞான்று—எக்காலம்.

## 8. 5. ப்ரபத்யே

பற்றுகிறேன் என்ற கருத்து ஐந்தாம் பத்தில்.

1. சங்கு சக்கரத்தாய்! தமியேனுக்கு அருளாயே (5-7-2).

அருள் பெறுவதற்கு, சங்கு சக்கரம் ஏந்திய உன்னையே பற்றுகிறேன்

2. உன்னா லல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன் (5-8-3).

உன்னை நான் பெறுவது, உன்னுடைய அருளாலேயே; என் முயற்சியா லன்று, பிறரைக் கொண்டும் உன் அருள்பெறுவதன்று.

உன்னைத் தவிர வேறு எவரையும் எதையும் எனக்குப் புகலாகக் கருதமாட்டேன்.

3. நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு (5-10-11)

"சரணௌ சரணம்" என்ற கருத்து.

இதுவரையில் வந்துள்ளது முதல் வாக்கியத்தின் பொருள்: பெரிய பிராட்டியாரோடு பிரிவில்லாமல் என்றும் உறைகின்ற நாராயணனது திருவடிகளைப் புகலாகப் பற்றுகிறேன்—என்பது.

## 8. 6. ஸ்ரீமதே

இரண்டாம் வாக்கியத்தின் கருத்து: பெரிய பிராட்டியாரோடு எப்போதும் உறைகின்ற நாராயணனுக்கு எல்லா அடிமையும் செய்வேன். இந்தச் சேர்த்தியிலே நாராயணனது குணங்கள் : வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி.

1. ...திருமா மகளிருந் தாம்—மலிந்திருந்து வாழ்பொருநல் வடகரை வண் தொலைவில்லி மங்கலம் (6-5-11).

தலைவி நிலையில் ஆழ்வார் இச்சேர்த்தியில் வணங்குகிறார். "அரவிந்த லோசனனே!" என்று வணங்கி அழைக்கிறார்.

2. அடிமை செய்வார் திருமாலுக்கே (6-5-8).

3. கோலத் திருமாமகளோ டுன்னைக் கூடாதே
சாலப் பலநாள் அடியே னின்னம் தளர்வேனோ? (6-9-5).

தாயும் தகப்பனுமாகிய சேர்த்தி நேராதே, சிறு குழந்தை நாக் கொட்டித் தவிப்பது போல் ஆழ்வார் தவிக்கிறார். இந்தச் சேர்த்தியாலேதான் எல்லா நலனும்.

## 8. 7. பெறும் இன்பம்

இச்சேர்த்தியில் வணங்கிப் பெறும் இன்பம் ஏழாம் பத்தில் வந்துள்ளது.

1. கன்னலே! அமுதே! கார்முகில் வண்ணனே! (7-1-2).

"அகலகில்லேன்" என்ற பாசுரத்தில் குறிப்பிட்ட சேர்த்தியில் அனுபவிப்பதன் பயன்.

கன்னல்—கருப்புக்கட்டி. அமுது—சாவாமல் காக்கும் மருந்து. கார்முகில் வண்ணன்—திருமேனி யழகு

2. என் திருமாலே நின்னை ..., விசும்பாளியைக் காணேனோ? (7-6-7).

விசும்பாளி—பரமபத நாதன்.

3. இன்பம் பயக்க எழில் மலர் மாதருந் தானும் இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1).

பிராட்டியோடு பெருமான் சேர்ந்திருப்பதால் ஏழுலகத்தவர் இன்பம் அனுபவிக்கின்றனர்.

## 8. 8. நாராயணன்

இவன் யாவர்க்கும் இறைவன் என்ற கருத்து எட்டாம் பத்தில்.

1. தேவிமா ராவார் திருமகள் பூமி ஏவ, மற்றமரர் ஆட்செய்வார் (8-1-1).

பெரிய பிராட்டியாருக்கும் பூமிப் பிராட்டிக்கும் நாயகன்; அமரர் இவனுக் குரியவர்.

2. காண்டகு தாமரைக் கண்ணன் கள்வன் விண்ணவர் கோன் நங்கள் கோனைக் கண்டால் (8-2-2).

காண் தகு—காணத்தக்க. கள்வன்—தன் நோக்காலேயே என்னை மயக்கி, என் ஆத்மாவையும் மனத்தையும் கவர்ந்தவன். நித்ய சூரிகளுக்கும் மற்றைய ஜீவாகளுக்கும் இவன் நாதன்.

3 நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன் (8-9-11)

## 8. 9. கைங்கர்யம்

நாராயணாய என்ற சொல்லில் ஆய என்ற உருபு குறிப்பது, கைங்கர்யம் செய்ய வேண்டு மென்பது. இது ஒன்பதாம் பத்தில் விளக்கம் பெறுகின்றது

1. பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும், கொண்டு நின் கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடி வழி வந்தாட்செய்யுந் தொண்டரோர்க் கருளி (9-2-1).

பல் படிகால்—கணக்கில்லாத காலம், உன் கடாக்ஷம் பெற்ற நாள் முதற்கொண்டு குடிகுடி—குடும்பத்தோடு. வழி வந்து—சாஸ்த்ரங்கள் விதிக்கும் முறைப்படி.

2. தொடர்ந்து குற்றேவல் செய்து (9-2-3).

3. ... நாளும் மீளா அடிமைப் பணிசெய்யப் புகுந்தேன் (9-8-4).

4. கள்ளவிழும் மலரிட்டு நீர்இறைஞ்சுமின் (9-10-2).

5 பற்றறவேண்டுவீர்! ... பணிமின் அவன் நாள்களே (9-10-11).

## 8. 10 கைங்கர்யத்தின் பயன்

பெருமானும் பிராட்டியும் இணைந்துள்ள சேர்த்தியில் கைங்கர்யம் செய்து இன்புறுவது பத்தாம் பத்தில் விளக்கம் பெறும்.

1. கொண்ட கோயிலை வலஞ்செய்திங் காடுதுங் கூத்தே (10-1-6)

வலஞ்செய்து களிப்பது.

2 இன்று போய்ப் புகுதிராகில் எழுமையும் ஏதம் சாரா (10-2-2).

திருவனந்தபுரம் போய்க் கைங்கர்யம் செய்யும் பயன். திவ்ய தேச யாத்ரை.

3. பிணி யொன்றுஞ் சாரா, பிறவி கெடுத்தாளுந் (10-4-7).

4. அமரத் தொழுவார்கட்கு, அமரா வினைகளே (10-5-9).

5. காட்டித் தன் கனைகழல்கள், கடுநகரம் புகலொழித்த, வாட்டாற்றெம் பெருமானை (10-6-11).

6. தொண்டு உகளித்து அந்திதொழுஞ் சொல்லுப் பெற்றேன் (10-8-7).

7. அவாவற்று வீடு பெற்ற (10-10-11).

## 8. 11. ஒரு கருத்து

திருவாய்மொழியில் முதல் மூன்று பத்து உத்தர வாக்கியத்தையும் (த்வயத்தின் இரண்டாவது வாக்கியத்தையும்), பின் மூன்று பத்து முதல் வாக்கியத்தையும் விவரித்து, மற்றைய பத்துக்கள் நான்கும் இவற்றின் தொடர்பாக அமைந்துள்ளன.

(1) உத்தர வாக்கியத்தைக் காட்டுவன:

1. வண்புகழ் நாரணன் (1-2-10).

2. செல்வ நாரணன் (1-10-8)

3. தொழுதெழு, சொற்பணி செய், அயர்ப்பிலன் என்பன பகவத் கைங்கர்யம் புருஷார்த்தம் என்று காட்டுகின்றன.

4. களிப்பும் கவர்வு மற்று, ஒளிக்கொண்ட சோதியமாய் (2-3-10). நலமந்தமில்லதோர் நாடு புகுவீர் (2-8-4)—பெற்ற நன்மை.

5. ஒழிவில் காலமெல்லாம்...வழுவிலா அடிமை செய்ய வேண்டும் (3-3-1). நம: என்பதன் கருத்து

6. புகழு நல்லொரு வனென்கோ (3-4-1) —வாசிக கைங்கர்யம்.

7. நான் ஓர் குறைவிலனே (3-10-1), ஒன்றும் துயரிலனே (3-10-6), என்றும் கேடிலனே (3-10-10)—கைங்கர்யத்தின் பலன்.

(2) பூர்வ வாக்கியத்தைக்காட்டுவன :

8. திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித் துய்மினோ (4-1-1).

9. கழல்களவையே சரணாகக் கொண்ட (5-8-11): சரணௌ என்ற கருத்து.

10. நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு (5-10-11) சரணம் என்ற கருத்து.

11. அலர்மேல் மங்கை யுறை மார்பா! ...உன் அடிக்கீழமர்ந்து புகுந்தேனே. (6-10-10).

ப்ரபத்யே என்ற கருத்து.

## 9. ஆழ்வார் பெற்ற அருள்

உலகினரை உய்விப்பதற்காகத் தான் கொண்ட பிறவிகள் பயனற்றமை கண்டு, ஸர்வேச்வரன், ஸம்ஸாரிகளுள் ஒருவரைக் கொண்டு உலகினரைத் திருத்தத் திருவுள்ளங் கொண்டான். இவனது அருள் நோக்கு தென் திசையில் சார்ந்தது; இதனால் இவ்வாழ்வார் மெய்ஞ்ஞானம் வாய்ந்து, பகவானது மேன்மையை விரித்து உலகினரைத் திருத்த முற்பட்டார் உலகமாகிய தாமரை அலர்வதற்காகக் கண்ணனாகிய சூரியன் தேவகியின் கர்ப்பமாகிய கிழக்குத் திசையில் தோன்றியது போல், ஆழ்வாராகிய பாஸ்கரன் தென்திசையில் உதித்ததால் அறிவின்மையாகிய இருள் நீங்கிற்று. தாம் அனுபவித்த தெய்வத்தாலே பெற்ற நன்மைகளை ஆழ்வார் உலகினருக்கு வெளியிட்டு இவர்கள் வேதநெறியில்

திற்குமாறு உபதேசஞ் செய்கிறார்; குறிப்பாகத் தம்மைப் பெறுவ தற்கு எம்பெருமான் கொண்ட முயற்சிகளையும், உலக வாழ்க்கை யின் இழிவை அறிவுறுத்தித் தன்பாலே மனங்கொள்ளச் செய்து, ஸ்ரீவைகுண்டத்தை அளித்ததையும் திருவாய்மொழியில் விவரிக் கிறார். திருமாலின் அருளால் ஓர் உயிர் வீடு பெற்றுய்ந்த வரலாறு, இந்தப் பிரபந்தமாகும்.

## 9. 1. பெற்ற நலம்

1. உலக வாழ்க்கையில் வெறுப்பு:

பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை இனியா முறாமை (திரு. வி. 1).

பொய் நின்ற ஞானம்—அகங்காரம் மமகாரம் இவற்றை விளைவிக்கும் ஞானம் இதனால் விளையும் ஒழுக்கம், இந்த ஒழுக் கத்தின் பயனாய் அழுக்குடம்பு: உலகத்தில் பல பிறவிகள்.

2. ஆசை கரைபுரண்டமை: பகவான் தனது திருமேனியின் பேரெழிலைக் காட்ட, இப்பெருமானைக் காண வேண்டும் என்ற ஆசை திருவாசிரியத்தில் காணலாம்.

செக்கர்மா முகிலுடுத்து மிக்க செஞ்சுடர்ப் பரிதி சூடி... திருவா. 1).

3. ஆசைதீர வாழ்த்தியது: திருவந்தாதியில்:

எப்போதும் ஈதே சொல் என் நெஞ்சே!...மொய் குழலே ஏத்த முயல் (பெ. திரு. 87).

4. இவர் பெற்றது:

மயர்வற மதிநலம் (1-1-1).

மயர்வு—அறிவின்மை, அறிவு தோன்றாமை, ஐயம், திரிபு. அற—இது நீங்குமாறு. மதிநலம்—பக்தி. பக்தியால் பெற்ற ஞானம், பரபக்தி, பரஞானம், பரம பக்தி.

இத்தகைய பக்தியின் விளைவு: ஸர்வேச்வரனுடைய மேன்மையை நினைப்பது, கீர்த்தனஞ் செய்தல், பாசத்துடன் திருவடிகளை வணங்குவது போல்வன.

## 9. 2. கீர்த்தனம்

ஆழ்வார் கீர்த்தனஞ் செய்வது பகவானின் திருநாமங்கள்

1. பாடுமென் நா அவன் பாடல் (1-6-3).

2. அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடி அலற்றுவன் (5-8-5).

3. புன்னையம் பொழில்சூழ் திருப்புலியூர் புகழு மிவளே (8-9-8), தலைவி நிலையில் இவர் செய்வது.

## 9. 3. சிந்தனை

இவர் பகவானது அரிய குணங்களைச் சிந்தனை செய்து வந்தார் இந்த அரிய குணங்களுள் ஒன்று.

(1) பரந்த மனப்பான்மை: மனத்தில் அன்பில்லாமல் பொய்யாகக் கூறினாலும், ஸர்வேச்வரன் இது மெய்யென்று அருள் சுரக்கும் பண்பினன்.

1 கையார் சக்கரத்தென் கருமாணிக்கமே என்றென்று, பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே ஆடி, மெய்யே பெற்றொழிந்தேன் (5-1-1).

''கை ஆர் சக்கரத்து என் கரு மாணிக்கமே!'' என்று மனமார வாழ்த்துவது போல், அன்பே சிறிதுமில்லாமல் பொய்யாகக் கூறினேன். கைம்மை—கபடம். இவ்வாறு பொய்யாகக் கூறினாலும் பெருமானைப் பெறக் கூடும்.

2. தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும், ஆவா என்றருள் செய்து அடியேனொடு மானானே (5-1-9).

தே ஆர் கோலம்—பேரெழில் வாய்ந்த திருமேனி ஆஆ என்று—''என்னே! இவரது பக்தி''என்று. அடியேனொடும் ஆனான்—எனக்கு அபிமானியானான்.

(2) எளிமை: வெண்ணெயைக் களவில் உண்பதில் விருப்பங் கொண்டு, தாயால் கட்டுண்டேங்கியது.

3. எத்திறம்! உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே! (1-3-1)

இந்த எளிமையை நினைத்து ஆழ்வார் ஆறு மாத காலம் மோகித்துக் கிடந்தார்.

அவதரித்து மனிசர்க்கா படாதன பட்டான் ஸர்வேச்வரன்.

4. பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கைசெய்து (5-10-1)

பிறந்தவாறும்: திருட்டுப்பிள்ளை பிறக்க வேண்டும்? ஒரு வெடி விளக்கு இல்லாமலா பிறக்க வேண்டும்? சோபனம் சொல்லுவார் இல்லாமலா பிறக்க வேண்டும்? "பூண்டு அன்னை புலம்பவா" பிறக்க வேண்டும்?

வளர்ந்தவாறும்: உலக நாயகன் மறைந்தா வளரவேண்டும்?

இவ்வாறெல்லாம் சிந்தனை செய்து ஆழ்வார் பின்னும் ஆறு மாதம் மோக முற்றுக் கிடந்தார்.

(3) திருமேனியின் கட்டழகை ஆழ்வார் எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தார்.

5. கண்கள் சிவந்து பெரியவாய், வாயும் சிவந்து கனிந்து-உள்ளே வெண்பல் இலகு சுடரிலகு, விலகு மகர குண்டலத்தன் (8-8-1).

பெரியவாய் கண்கள் சிவந்து: பெரிய தாமரை மலர்போல் சிவந்து. கனிந்து—அடர்ந்து உள்ளே—வாய்க்குள்ளே. வெண் பல் இலகு சுடர்—வெண்பல்லின் புகர். விலகு மகர குண்டலத்தன்—அலைந்து வருகின்ற மகர குண்டலங்கள் பூண்டவன். இவ்வாறான செவ்வியை நினைத்துப் பின்னுமோர் ஆறு மாத காலம் இவ்வாழ்வார் மோகித்துக் கிடந்தார்.

## 9, 4. அகல நினைத்தார்

இத்தகைய மேன்மை வாய்ந்தவனைத் தமது வாயால் புகழ்வது, இவனது மேன்மைக்கு இழுக்காகு மென்று ஆழ்வார் கருதினார்.

1. வளவேழுலகின் முதலாய வானோ ரிறையை அருவினையேன் களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! என்பன் பின்னையும், தளவேழ் முறுவல் பின்னைக்காய் வல்லானாயர் தலைவனாய், இளவேறேழுந் தழுவிய எந்தாய்! என்பன் நினைந்து நைந்தே (1-5-1).

பரிவால் சிறந்த யசோதைப் பிராட்டி. "களவேழ் வெண்ணெய் உண்ட கள்வா!" என்பாள்; இதையே எளியேனாகிய நானும் சொல்லுவதா? நப்பின்னைப் பிராட்டி, "இளவேறு ஏழும் தழுவிய எந்தாய்!" என்பாள்—இதையே நான் என் எச்சில் வாயால் சொல்லுவதோ?

2. அடியேன் சிறிய ஞானத்தன், ...செடியார் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை, அடியேன் காண்பான் அலற்றுவன், இதனில் மிக்கோர் அயர்வுண்டே? (1-5-7)

அடியாரை, செடி ஆர் ஆக்கை (பாவங்களுக்கு ஆதாரமான ரீரத்தை), தீர்க்கும் திருமாலை. அடியேன்—நான் அவனுக்கு அடியேன் எனக் கருதி. காண்பான்—பாவியான என் கண்களால் காண விரும்பி. அயர்வு— அறிவுகேடு; என்னே என் அறிவுகேடு!

## 9. 5. பாசம், பரிவு

ஸர்வேச்வரனுடைய திருமேனியின் கட்டழகு, கல்யாண குணங்கள் யாவற்றையும் நன்கறிந்ததால், ஆழ்வார் இவனிடம் பாசமும் பரிவுங் கொண்டார். இவன் சிறு பிள்ளையாய் ஆலந் தளிரில் துயில்வதை நினைத்து, இவன் இடம் வலம் புரண்டால் என்ன நேருமோ என்று கவலை கொள்கிறார்.

1. ஆலம் பேரிலை அன்னவசஞ் செய்யும் அம்மானே! காலம் பேர்வதோர் காரிருள் ஊழி ஒத்துளதால்! உன், கோலங் காரெழில் காணலுற்றாழுங் கொடியேற்கே (8-3-4).

ஆலம் பேரிலை—சிறு ஆலந்தளிர். அன்ன வசஞ் செய்யும் உலகங்களை உண்டு வயிற்றுள் கொள்வதை நினைத்து. உன் கோலம் காணல் உற்று ஆழும் கொடியேற்கு—உனது அழகிய திரு மேனியைக் காண ஆசைப்பட்டுப் பெறாது வருந்தும் எனக்கு. காலப் பேர்வது—ஒவ்வொரு நொடிப் போதும். ஓர் கார் இருள் ஊழி ஒத்துளது—உனக்கு என்ன நேருமோ என்று கலங்கும் எனக்குப் பெரிதுங் கனத்து இருளடர்ந்த நீண்ட ஊழிபோல் தோன்றுகின்றது.

2. ஆளுபாளர் ஆழியும் சங்கும் சுமப்பார்தாம், வாளும் வில்லுங் கொண்டு பின் செல்வார் மற்றில்லை (8-3-3).

சங்கு சக்கரம் ஏந்தி நிற்கும் பகவானைக் குறித்து ஆழ்வார் இரங்குவது: பெரிய மலைகளைச் சுமப்பது போல் இவற்றைக் கைகளில் சுமந்து நடக்க வேண்டுமோ? இவரது கரங்கள்நோவாவோ? வாளும் வில்லும் ஏந்தி இளையபெருமாள்பின்தொடர்ந்ததுபோல் இந்தச் சங்கு சக்கரங்களை ஏந்திப் பின் செல்வார் இல்லையே! நம்மை ஏவினால், ஏந்திச் செல்லலாம் என்பது ஆழ்வாரது திருவுள்ளம் போலும்!

3 ஊழி தோறூழி ஓவாது வாழிய என்று யான் தொழ இசையுங் கொல்! (திருவா-4)

இப்பெருமான் பல ஊழிகள் வாழ்க என்று வாழ்த்த எனக்கு வாய்க்குமோ? என்கிறார் ஆழ்வார். பெரும் பரிவால் பெரியாழ்

வார் என்ற திருநாமம் படைத்தவர், "பல்லாண்டுகள் வாழ்க" என்றிசைந்தார்; இவரோ "வாழி பல்லூழிகள்" என்கிறார்.

இவ்வுலகிற் பரிவதற்கு ஒருவரும் இல்லையே என்று கலங்கி, ஒரு பக்கத்தில் தாம் இருப்பதாகக் கருதுகிறார், ஆழ்வார்:

4. உம்மோடு, ஒரு பாடுழல்வான் ஓர் அடியானும் உளன் (8-3-7).

திருவண்பரிசாரத்துப் பெருமானே! ஒரு பக்கம் இளைய பெருமாள் உடன் சென்றது போல, அடியேனும் உடன் செல்ல உளன் (இருக்கிறேன்)

4. கொடியார் மாடக் கோளூ ரகத்தும் புளிங்குடியும்
மடியாதின்னே நீ துயில்மேவி மகிழ்ந்தது தான்,
அடியா ரல்லல் தவிர்த்த அசைவோ? அன்றேல் இப்
படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே, (8-3-5).

திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் எம்பெருமான் களைப்பாலே சயனித்துக் கொண்டிருக்கிறான் என்பது ஆழ்வார் கருத்து. கொடியார் மாட—கவலையில்லாமல் தூங்குபவன் இவ்வாறு யாவரும் காணுமாறு கொடி கட்டின மாடங்கள் அடர்ந்த இடத்திலேயோ தூங்குவது? எவராலும் நீங்கு நேரு மென்று அச்சம். மடியாது—களைப்பாலே இடம் வலம் கொள்ளாமல். அடியார் அல்லல் தவிர்த்த—இந்திரன் முதலிய தேவர்களது துன்பத்தைத் தவிர்க்க இராமபிரானாய்ப் பாடு பட்டது. படி—பூமி. உரையாயே—அருளிச் செய்ய வேணும்; தாள்கள் நொந்தனவெனில், அவற்றைப் பிடிப்பேன்; தோள்கள் நொந்தனவெனில், அவற்றைப் பிடிப்பேன்; தோள்கள் நோவது: வில்லேந்திக் கணைகள் எய்ததால்.

## 9. 6. போலி கண்டு அலமாப்பு

ஆழ்வார் பகவானைப் பிரிந்து ஆற்றாமையாலே தலைவி நிலையில், இவனது தொடர்பு வாய்ந்தவற்றைக் கண்டு, அல்லது போலிகளைக் கண்டு கலங்குகிறார்.

1. மண்ணையிருந்து துழாவி வாமனன் மண்ணிது வென்னும் (4-4-1).

2. கோமளவான் கன்றை புல்கிக் கோவிந்தன் மேய்த்தன என்னும் (4-4-5).

3. நீறு செவ்வே இடக்காணில் நெடுமால் அடியார் என்று ஓடும் (4-4-7).

நீறு—ஏதேனும் ஒரு பஸ்மம் (பொடி), செவ்வே—நெற்றியில் கீழ் மேலாக (குறுக்காக அல்லாமல்), இவர்களைக் கண்டால் தலைவி, இவர்கள் திருமாலின் அடியார்கள் என்று அணுகுவாள்.

4. செய்ய தோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி ஈதென்னும் (4-4-2).

செய்ய—சிவந்த ஒளியுடைய ஞாயிறு—சூரியன். மூர்த்தி—வடிவு: "ஸவித்ரமண்டல-மத்ய-வர்த்தி நாராயண" என்பது போல், சூரியன் நாராயணனது திருவடிவே என்பாள்.

5. திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் (4-4-8).

காக்கும் இயல்புடைய ராகையால் மன்னர் திருமாலின் அம்சம் என்ப.

## 9. 7. இவர் விரும்பாதன

ஆத்மாக்கள் யாவும் எம்பெருமானுக்கே உரியன, இவனுக்கே தொண்டு செய்வது பிறவியால் இயல்பாக வாய்ந்தது. ஆதலால் தமது ஆத்மாவும் இதனோடு தொடர்புள்ளனவும் ஸர்வேச்வரனுக்குப் பயன்படாவிடில், இவை தமக்கு வேண்டா என்கிறார் ஆழ்வார், ஒரு தலைவி நிலையை ஏற்று.

1. ...குலங்குலமா அசுரர்களை நீறாகும் படியாக நிருமித்துப் படைதொட்ட, மாறாளன் கவராத மணிமாமை குறைவிலமே (4-8-1).

மாறாளன்—பகைவர் நடுங்குமாறு மிடுக்குடையவன் கவராத—விரும்பாத. மணிமாமை—ஒளியுடைய (தனது) மேனி நிறம் குறைவிலம்— இந்த நிறத்தால் பயன் ஏதுமில்லை.

2. மணிமாயன் கவராத மடநெஞ்சால் குறைவிலமே (4-8-2).

3. நெடுமாயன் கவாராத நிறையினால் குறைவிலமே (4-8-3) நிறை—பூர்ணமான பெண்மை நிலை.

போற்றி என்றே—பல்லாண்டு பாடி. சொல் மாலைகள்—வாடாத மாலைகள் ஏற்ற நோற்றேற்கு—சிறந்ததாகப் பாராட்டுமாறு பாக்கியம் செய்த எனக்கு

10. புகழுநல் லொருவனென்கோ? பங்கயக் கண்ணனென்கோ? (3-4-1, 2). வாழ்த்தும் வகை வாக்கால் செய்யும் கைங்கர்யம்

## 9. 10. பரவசம்

ஸர்வேச்வரனிடம் பக்தி கொண்ட ஆழ்வார் பரவசராகி, இவ்வாறு பரவசரான அடியார் செய்வனவற்றை விவரிக்கிறார்.

1. எம்மானைச் சொல்லிப் பாடி எழுந்தும் பரந்துந் துள்ளாதார், தம்மால் கருமமென்? (3-5-1).

தம்மால் கருமம் என்?—இவர்கள் பிறந்து என்ன பயன்?

2 பண்கள் தலைக் கொள்ளப் பாடிப் பறந்துங் குனித்தும் துள்ளாதார், மண்கொள் ஞாலத்துப் பிறப்பார் வல்வினை மோத மலைந்தே (3-5-2).

வல்வினை மோத மலைந்து—பாவங்கள் மேலிட்டுத் தரையில் எற்றுமாறு, மண்கொள் உலகில் பிறப்பார்.

3. தலையினோ டாதனம் தட்டத் தடுகுட்டமாய்ப் பறவாதார் (3-5-3)

ஆதனத்தோடு—தரையோடு. தலை தட்ட—தலை தட்டுமாறு. தடுகுட்டமாய்—கீழது மேலாய்.

4. குப்பிடு நட்டமிட்டாடிக் கோகு கட்டுண்டுழலாதார் (3-5 4).

குப்பிடு நட்டமிட்டாடி—தலைகீழாக கூடத் தாடி. கோகு—அடைவு கெட்டு. உகட்டு உண்டு—ஆரவாரஞ் செய்து.

5. வார்புனல் அந்தண்ணருவி வட திருவேங்கடத் தெந்தை.
பேர் பல சொல்லிப் பிதற்றிப் பித்த ரென்றே பிறர் கூற
ஊர் பல புக்கும் புகாதும் உலகோர் சிரிக்க நின்றாடி
ஆர்வம் பெருகிக் குனிப்பார் அமரர் தொழப் படுவாரே
(3-5-8).

பரவசத்தின் எல்லை: பேர் பல சொல்லி—திருநாமங்கள் பலவற்றையும். பிதற்றி—அடைவுகெட வாய்விட்டுச் சொல்லி. ஊர்

பல புக்கும், மனிதர் நடமாட்டமில்லாத இடத்திலும், உலகோர் சிரிக்க நின்று ஆடி—யாவரும் சிரிக்க அதுவே தாளமாக நின்று ஆடி. குனிப்பார்—நடனமாடுவார்.

## 9. 11. காணத் துடித்தல்

ஆழ்வாருக்குப் பிரேமம் அதிகரித்து, எம்பெருமானை நேரில் கண்டு எல்லாக் கரணங்களாலும் அனுபவிக்கத் துடிக்கிறார். கேட்பாரது நெஞ்சு நீராகக் கரையுமாறும், பகவானுக்கும் பரம பதத்தில் இருப்பது அரிதாகுமாறும், இவர் ஓலமிட்டுக் கூப்பிடு கிறார்.

1. கூராராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால், வாராய் ஒருநாள் மண்ணும் விண்ணும் மகிழவே (6-9-1).

மண்ணிலுள்ளோரும் விண்ணிலுள்ளோரும் மகிழுமாறு ஒரு நாளாவது வருவாய். விடாய்த்தவன் ஒரு கால் நாக்கு நனைக்கத் துளி தண்ணீர் விரும்புவதுபோல் இவரது ஆவல்.

2. கோலத் திருமாமகளோ டுன்னைக் கூடாதே, சாலப் பலநாள் அடியேன் இன்னம் தளர்வேனோ? (6-9-3).

3. உன்னைக் காண்பான் வருந்தி எனை நாளும், தீயோடுடன் சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ? (6-9-6).

காண்பான்—காண்பதற்காக தீயோடு உடன் சேர் மெழுகாய்—நெருப்பினருகில் மெழுகு போல: தொலைவிலிருந்து அழியாமையும், நெருப்பிற் சேர்ந்து நசிப்பதும் குறிப்பு.

4. தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே, கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ! (6-9-9).

5. தாமரைக் கண்ணாவோ! தனியேன் தனி ஆளாவோ! தாமரைக் கையாவோ! உன்னை என்றுகொல் சேர்வதுவே? (7-6-1).

## 9. 12. வேண்டுகோள்

உலகில் அனுபவிக்கும் துன்பங்களை நினைத்து ஆழ்வார் தம்மைத் திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுமாறு வேண்டுகிறார்.

## 9. 15. ஆற்றாமையின் எல்லை

**(1)** கண்ணபிரானை நொடிப்பொழுதும் பிரிந்திருக்க இயலாத ஆழ்வார், ஆற்றாமையால் திருவாய்ப்பாடியிலுள்ள ஆய்ச்சியர்களது நிலையில் தம் நிலையை விளக்குகிறார். மாலைப் போது; கண்ணன் கன்றுகளுடன் மீண்டு வருகிறான். கன்றுகளுடன் முற்கொழுந்தில் இவனைக் காணாமல், பின்னால் வரும நொடிப் போதும் தரியாதவர்களாகி இவர்கள் பூசலிடுகின்றனர்; இது மாலைப் பூசல்.

1. *இகலிடத் தசுரர்கள் கூற்றம் வாரான் இனியிருந் தென்னுயிர் காக்கு மாறென்? (9-9-2).*

இகல் இடத்து அசுரர் கூற்றம்—போர்க்களத்தில் எதிரிடும் அசுரர்களுக்கு யமனான என் தலைவன்.

2. *தனியிளஞ் சிங்கம் என் மாயன் வாரான் (9-9-3).*

3. *யாமுடை ஆயன்றன் மனம் கல்லாலோ அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ! (9-9-5).*

**(2)** காலைப் போதில் கண்ணபிரான் கன்றுகளை மேய்க்கப் போவானோ என்று அஞ்சி, ஆய்ச்சியர், "கன்று மேய்க்கப் போக வேண்டா" என்று இறைஞ்சும பாசுரங்கள் ஆழ்வார் வெளியிடுவன, மனத்தைக் கவர வல்லன. ஆய்ச்சியர் இவ்வாறு பூசலிடுவது காலைப் பூசல்

4. *ஆமருவி நிரை மேய்க்க நீ போக்கு ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ! (10-3-1)*

நீ பசுக்களை ஓட்டிச் சென்றால் மீளுமளவும் ஒரு பகல் நேரம் ஆயிரம் ஊழிகள் போல் நீளும், எங்களால் ஆற்றலரிது.

5. *வீவ(ன்) நின் பசு நிரை மேய்க்கப் போக்கு, வெவ்வுயிர் கொண் டெனதாவி வேமால், யாவரும் துணையில்லை யான் இருந்துன் அஞ்சன மேனியை ஆட்டங் காணேன் (10-3-3).*

நின் பசுநிரை மேய்க்க போக்கு, வீவன் நீ பசுக்களை மேய்க்கப் போனால், ஆற்றாமையால் நான் இறப்பேன்: இறப்பதே சிறந்தது ஏன்? வெவ்வுயிர் கொண்டு எனது ஆவி வேம்—உன் போக்கை நினைத்துப்பெருமூச்செறிந்து இதயம் உலர்ந்து, விரகத் தீயால் வேகின்றது.

6. சுகவெள்ளம் விசும்பிறந்து, அறிவை மூழ்கச் சூழ்ந்து அது கனவென நீங்கி யாங்கே அகவுயி ரகமகந்தொறும் உள்புக்கு ஆவியின் பரமல்ல வேட்கை அந்தோ!(10-3-2).

சுக வெள்ளம்—கலவியால் அளவில்லாத இன்ப வெள்ளம். விசும்பு இறந்து—அளவில்லாத ஆகாசத்தையும் கடந்து. அறிவை மூழ்க—அறிவையும் மூழ்த்தும்படி பெருக, அது கனவு என நீங்கி—கனவில் காண்பது போல் வற்றிப்போய். அகம் அகந்தொறும் உள் புக்கு- இருதயத்தில் எங்கும் புகுந்து வேட்கை ஆவியின் பரம் அல்ல—ஆதமாவால் வேட்கை பொறுக்க இயலாது.

7. பழுத்த நல்லமுதினின் சாற்று வெள்ளம் பாவியேன் மனமகந் தொறும் உள்புக்கழுந்த, நின் செங்கனி வாயின் கள்வப் பணி மொழி நினைதொறும ஆவி வேமால் (10-3-6).

பழுத்த நல் அமுதின் இன் சாற்று வெள்ளம்—சிறந்த அமுதச் சாற்று வெள்ளம் போலே – பரவி, என் மனம உள் அகந்தொறும் புக்கு அழுந்த—இருதயத்துள் எங்கும் புக்கடர்ந்து இன்பம் அளிக்க. கள்வப் பணிமொழி—இந்த வெள்ளத்திற்கு ஊற்றுவாய்; என் முன் தாழ்ந்து நின்று சொன்ன சொற்கள்; "பிரியேன், பிரியில் தரியேன்", "அடியேன்" என்பன போல்வன.

8. வெடிப்பு நின் பசுநிரை மேய்க்கப் போக்கு (10-3-6).

நீ பசுநிரை மேய்க்கப் போவது வெடிப்பு ஆகுக; அதாவது நிகழாதொழிக.

(3) ஆற்றாமை அறவீஞ்சி இருந்தவிளைவாகத் தாம் மடிந்த தாக ஆழ்வார் கூறுகிறார்.

9. இழை நல்ல ஆக்கையும் பையவே புயக்கற்றது, தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே (9-5-10)

எனது சிறந்த சரீரம் பசையற்றுச் சிறிது சிறிதாகக் குலைகின்றது. என்னைப் போல் உலகினர் துன்புற வேண்டா; எங்கும் இன்பம் பெருகுக.

## 9. 16. மடலூரத் துணிதல்

தமது வாயால் பகவானைப் புகழ்வதும் இவனது மேன்மைக்குக் குறைவு என்று ஆழ்வார் அகல நினைத்தார்.

அன்றியும் இவனுக்கு விநியோகமாகாத ஆத்ம ஆத்மீயங்கள் தமக்கு வேண்டா என்றார். இத்தகைய மனப்பான்மை வாய்ந் திருந்தும் இவர் ஆற்றாமையின் மிகுதியால் தலைவி நிலையில் மடலூர்வதாக அச்சுறுத்துகிறார்.

1. உலகுதோறு அலர் தூற்றி ஆம், கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே (5-3-9).

ஆம் கோணைகள் செய்து—என்னலான மிறுக்குகள் யாவும் செய்து. குதிரியாய்—பனைமடலாலான குதிரையோடு; அன்றி எதற்கும் அடங்காதவளாய். உலகு தோறு அலர் தூற்றி—உலகினர் யாவரும என் நிலையை அறிந்து இவனைப் பழிகூறுமாறு.

2. யாம் மடலூர்தும்...யாம் மடமின்றித் தெருவுதோறு அயல் தையலார், நா மடங்காப் பழி தூற்றி நாடும் இரைக்கவே (5-3-10).

யாம் மடம் இன்றி - பெண்மை பாராட்டாமல்; பெண்கள் மடலூர மாட்டார்கள் என்பதையும் புறக்கணித்து. தெருவுதோறும்—ஒன்றும் விடாமல்ஊர்ந்து. அயல் தையலார—என்னைக் காணும் பெண்கள் (அயலார்) பழிதூற்றி—இவன்மேல் பழியைக் கூறி நாடும் இரைக்க—நாட்டிலுள்ளார்களும் பழி கூறுமாறு. நாமடங்கா—பழி கூற நீட்டிய நா மடங்காமல், அல்லது நாவடர.

## 9. 17. ஊடல்

குறித்த காலத்திற் கண்ணபிரான் வராமல் 'தாழ்ந்ததால்', இவனொடும் ஊடும் தலைவி நிலையில் ஆழ்வார் அருளிய பாசுரங்கள் சுவையடர்ந்தன.

1. கழகமேறேல் நம்பீ! (6-2-0).

இப்பெண்கள் கூட்டத்தில் நீ புக வேண்டாம்.

2. போகு நம்பீ! உன் தாமரை புரை கண்ணிணையும், செவ்வாய் முறுவலும் ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோமே யாம் (6-2-2.

3. கன்மமன்று எங்கள் கையில் பாவை பறிப்பது நின்மலா! நெடியாய்! உனக்கேலும் பிழை பிழையே (6-2-7).

4. நின்றன்னால் நலிவே படுவோம் என்றும் ஆய்ச்சியோமே (6-2-10).

## 9. 18. சரணாகதி

பகவானைப் புகலாகப் பற்றுவோர், தமது முயற்சி எதுவு மின்றி இவனையே உபாயமாகக் கொள்வர்.

1 திங்கள்சேர் மணிமாட நீடு சிரீவர மங்கல நகருறை, சங்கு சக்கரத்தாய்! தமியேனுக் கருளாயே (5-7-2)

2 ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்—உனக் கோர் கைம்மாறு நானொன்றிலேன் என தாவியும் உனதே (5-7-10)

ஆறு—உபாயம். கைம்மாறு இல்லை, ஏன் எனில் "எனதாவி யும் உனதே". ஆவி-ஆத்மா.

3 களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றி லேன் வளைவாய் நேமிப் படையாய்! குடந்தைக் கிடந்த மா மாயா! (5-8-8).

களைகண்—புகல். களைவாய்—போக்குவாய். என் துன்பத்தை நீ போக்கினாலும் போக்கா விட்டாலும் நீயே எனக்குப் புகல்.

4. உழலை யென்பின் பேய்ச்சி முலையூடு அவளை உயிருண் டான், கழல்களவையே சரணாகக் கொண்ட குருகூர்ச்சடகோபன் (5-8-11).

உழலை என்பின்—கணைமரங்கள் கோத்தாப்போல் வலியன வான எலும்புகள் உள்ள.

5. நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கென்று— நாடொறும், ஏக சிந்தையனாய்க் குருகூர்ச் சடகோபன் (5-10-11).

சரண்—திருவடிகள். சரண் என்று—புகலென்று, ஏக சிந்தை யனாய் இதுவே மனோரதமாகவுடைய.

6. நாமங்களாயிர முடைய நம்பெருமானடி மேல், சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் (5-9-11).

அடிமேல் சேமம் கொள்—புறம்புள்ள காற்கட்டுக்களை அகற்றித் திருவடிகளே ரக்ஷகமாகக் கொள்ளும்.

## 9. 19. பரம பக்தி

முதற் பத்தில் "கமலக் கண்ணன் என் கண்ணினுள்ளான்" என்றுதொடங்கிப், பத்தாம்பத்தில் "என் கண்ணுள் நின்றகலான்" என்பது வரையில் ஆழ்வாரது பரபக்தி விளங்குகிறது. இதன் விளைவு பரஞானம்; இது "அடிய ரோடிருந்தமை" என்ற சொல்லால் விளங்கும். பகவானை அனுபவிக்க இயலாமையாலே விடாய்த்துக், கூப்பிட்டு தரிக்கமாட்டாமல் ஆணையிட்டுப் பெற விரும்புவது பரம பக்தியாலே.

1. தனியேனாருயிரே! என் தலை மிசையாய் வந்திட்டு, இனி நான் போகலொட்டேன் ஒன்றும் மாயஞ் செய்யேல் என்னையே (10-10-1).

என் தலை மிசையாய் வந்திட்டு—என் தலையிலே திருவடிகள் சேறுமாறு நீட்டி வைத்து. மாயம் செய்யேல்—நான் உன்னைப் பெற்றேனாகச் செய்; வஞ்சனை செய்ய வேண்டா.

2. உன் திருமார்வத்து மாலை நங்கை, வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை கண்டாய் (10-10-2).

என்னை நீ ஏற்றுக் கொள்ள வேண்டு மென்பது, உன் திருமார்பில் வீற்றிருக்கும் பிராட்டியின் ஆணை;— நின் ஆணை. அடியவராகிய ஆழ்வார் இவ்வாறு ஆணையிடக் கூடுமோ என்னில், ஆற்றாமை மிகுதியாலே, பரம பகதியாலே—பரம பக்தி—பெற்றா லின்றி தரிக்க மாட்டாத நிலை.

3. போரவிட்டிட்டென்னை நீ புறம் போக்கலுற்றால் பின்னை யான்; யாரைக் கொண்டு எத்தை யந்தோ எனதென்பதென்? யானென்பதென்? (10-10-5).

யாரைக் கொண்டு...—எவனாலே எந்தப் புருஷார்த்தத்தை நான் பெறக்கூடும்? யாரை கொண்டு—எவன் புகலாக. எத்தை—எந்த உபாயத்தைக் கொண்டு. எனது என்பது என்?—எனக்கேயான கரணங்கள் எனக்கு இல யான் என்பது என்?—நான் என்பதற்கு நான் சுதந்தரனோ?

4. கோல மலர்ப் பார்வைக்கு அன்பாகிய என் அன்பேயோ!...நீலக் கடல் கடைந்தாய்! உன்னைப் பெற்றினிப் போக்குவனோ? (10-10-7).

பிராட்டியிடம் உனக்கு பிரேமம் மிகும்: இவளது அருளை நான் பெற்றவன், ஆதலால் இவளுக் குரியேன். ஆதலால் நீ என்னை விடலாகாது. நான் உன்னைப் போகவொட்டேன்.

## 10. பகவானது நிலை

நம்மாழ்வாரைக் கொண்டு உலகினரைத் திருத்த எம்பெருமான் கொண்ட முயற்சிகள் பல. இவருக்கு மதிநலத்தையருளி இவரைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தான் ஈச்வரன், சிறந்த ஞானியைத் தனக்கு ஆத்மாவாகக் கருதும் ஈச்வரன், இவரிடம் கொண்ட பிரேமம் வரை கடந்தது.

### 10. 1. அருள் நோக்கு

1. எதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய, விதிசூழ்ந்ததால் எனக்கே லம்மான் திரிவிக்கிரமனையே (2-7-6).

எனைத்தோர் பிறப்பும்—நான் பிறந்த பிறவிகள் தோறும். எதிர் சூழல் புக்கு—என்னைத் தனக்காக்கிக் கொள்ளத் தான் பிறந்து. எனக்கு அம்மான் திரிவிக்கிரமனை விதி சூழ்ந்தது—அவனை இருக்க வொட்டாமல் கிருபை பூமியில் பிறக்குமாறு செய்தது. விதி—அவனும் தப்பவொண்ணாது, பிறந்தே தீர வேண்டும். நல்ல ஆத்மா ஒருவனைப் பெறப் பெருமான் படும் பாடு.

2. மயர்வற மதிநல மருளினன் (1-1-1).

3. மறப்பற என்னுள்ளே மன்னினான் (1-9-10).

நான் பெற்ற ஞானத்தை மறவாதவாறு என்னுள் மன்னினான்; நான் என்னை மறப்பனோ என்று மன்னினான்.

### 10. 2. அச்சம் தவிர்த்தான்

''வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:''—எல்லாம் வாஸுதேவன் என்று கருதும் மஹாத்மா ஒருவனைப் பெறுவது மிக அரிது—என்றான் கண்ணன். தன்னால் மதிநலம் பெற்ற ஆழ்வார் தன்னை விட்டுப் பிரியாமல் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் எனக் கருதிய பகவான், இவரது அச்சத்தைத் தவிர்க்க வேண்டியிருந்தது. தாம் பகவானைப் புகழ்

வது இவனது மேன்மைக்குக் குறைவாகும் என்று கருதிய ஆழ்வார் அகல நினைத்தார், "வளவேழுலகு" என்ற திருவாய்மொழியில். இதைத் தவிர்த்தான் பகவான்,

1. மாயோம்,— அம்மா மூர்த்தியைச் சார்ந்தே (1-5-9).

பகவானை விட்டகல்வது ஆத்ம ஸ்வரூபத்திற்கு விநாசகரம்; ஆதலால் இனி அகலுவதற்கு நினைக்க மாட்டேன் என்கிறார் ஆழ்வார்; அம் மா மூர்த்தியைச் சேர்ந்து நலம் பெறுவோம்; மாய மாட்டோம் என்கிறார். இவ்வாறு இவர் தேறியது பகவான் இவருக்கு அறிவித்த நலனாலே; அதாவது தனது விருப்பத்திற்கு மாறாகச் செய்யத் தகாது என்று.

2. தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி வீடு திருத்துவான் (2-5-10).

தீர்ந்து—அகல்வேன் என்று சொல்லாமல் திருத்தி, என்னைத் தன் பால் மனம் வைக்குமபடி செய்து. வீடு திருத்துவான்—என்னை வரவேற்பதற்காகப் பரம பதத்தைப் புதுமை பொலியச் செய்கிறான்.

3. தானொட்டி வந்தென் தனிநெஞ்சை வஞ்சித்து,
ஊனொட்டி நின்று என் உயிரில் கலந்து (1-7-7).

தான் ஒட்டி வந்து—இவனது ஆத்மாவில் நான் புகுந்தே தீருவேன் என்று தானே சங்கல்பித்து வந்து. ஊன ஒட்டி நின்று—ஊன் மயமான சரீரத்தைப் பற்றிய ஆத்மாவோடு கலந்து. உயிர்—ஆத்மா.

## 10. 3. கலந்த வகை

ஆழ்வாரது கலக்கத்தைத் தீர்த்து, இவர் இன்புறுமாறு அவயவங்கள் தோறும் கலந்து அணைந்து இறைவன மகிழ்கிறான். இன்பம் பொறுக்கப் பொறுக்க அனுபவிக்கச் செய்ய ஒவ்வோர் இந்திரியமாக பகவான் அணைகிறான். இதை ஆழ்வார் வெளியிடுவது வருமாறு:

1. சுவையன் திருவின் மணாளன் என்னுடைச் சூழலுளானே (1-9-1).

சுவையன்—என்னோடு கலந்து இன்புறுவானாய். சூழல் உளான்—முதலில் பக்கத்தில் அமர்கிறான்.

2. அருகலிலான் (1-9-2). பின்பு அருகிலே அமர்கிறான்.

3. ஒழிவிலன் என்னோடுடனே (1-9-3)

4. என் ஒக்கலையான் (1-9-4). ஒக்கலை—இடுப்பு.

5. என் நெஞ்சிலுளான் (1-9-5)

6. என்னுடைத் தோளிணையான் (1-9-6).

7. என் நாவிலுளான் (1-9-7).

8. என் கண்ணிலுளான் (1-9-8).

9. என் நெற்றியுளான் (1-9-9).

10. ஒற்றைப் பிறையணிந்தானும் நான்முகனும் இந்திரனும், மற்றை யமரரு மெல்லாம் வந்துஎனதுச்சியுளானே (1-9-10).

உச்சி—தலை. ஒற்றை பிறை அணிந்தான்—சிவன். சிவன், பிரமன், இந்திரன், தேவர்கள் யாவரையும் அநாதரித்து, என்னை யொழியச் செல்லாதவனாய் என் உச்சியில் அமர்ந்தான்.

## 10. 4. ஆழ்வாரிடம் அன்பு

பகவான் ஆழ்வாரோடு இயல்பில் கலந்து பெரிதும் மகிழ்ந்தான்.

1 எனதாவி யார்? யான் ஆர்? தந்த நீ கொண்டு ஆக்கினையே (2-3-4).

பகவான் இவ்வாறு கலப்பதால் எனது ஆத்மா அவனதாயிற்று. இவ்வாறு தான் கொடுத்த ஆத்மா யாருக்குரியது? கொடுத்த நான் யாருக்குரியவன்? தந்த நீ கொண்டு ஆக்கினை—முதலில் இத்தை உண்டாக்கிய நீயே கொண்டாயானாய். ஆழ்வாரோடு பகவான் கலந்ததன் விளைவு இது; கலந்தது அன்பாலே. ஏற்றுக் கொண்டதும் அன்பாலே.

2. கன்னலே! அமுதே! கார்முகிலே! என் கண்ணா!
நின்னலாலிலேன் காண் என்னை நீ குறிக் கொள்ளே (2-3-7).

கலந்ததன் விளைவு.

3. படிவான மிறந்த பரமன் பவித்திரன் சீர்,....அடியேன் வாய்

படி வானம் இறந்த—தன் இயல்புக்கு வானிலுள்ளோர் மூப் பில்லாதவாறு. சீர் வாய் மடுத்துப் பருகி—பெருவிடாயோடே அனுபவித்து.

4. என் முடிவு காணாதே என்னுள் கலந்தானை (2-5-8).
என் முடிவு—என்னுடைய தாழ்நத நிலையின் எல்லை.

5. ஆராவமுதமாய் அல்லாவியுள் கலந்த (2-5-5).
அல் ஆவி—அசித்தைக் காட்டிலும் நான் இழிவாகக் கருதும் ஆத்மா.

6. எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழி யூழி தொறும் அப்பொழுதைக் கப்பொழுது என ஆராவமுதமே (2-5-4).

## 10. 5. அன்பின் எல்லை

பகவான் தன்னிடம் கொள்ளும் அன்பு, தமது பரம்பரை யாரிடம் வெள்ளமிடும் வகையை ஆழ்வார் விவரிக்கிறார்.

1. கேசவன் தமர் கீழ்மேல் எமரேழ் எழுபிறப்பும், மாசதிரிது பெற்று நமமுடை வாழ்வு வாய்க்கின்றவா (2-7-1).

கேசவன் தமர்—பகவானது வடிவழகில் ஈடுபட்டுள்ள அடியார். எமர்—என்னைச் சேர்ந்தவர்கள். கீழ் மேல்... எழு பிறப்பும்—கீழ் ஏழு பரம்பரையும மேல் ஏழு பரம்பரையும, எனனுடைய தொடர்பாலே. மாசதிர் இது பெறறு—இந்த அரிய பேறு பெற்று. வாழ்வு—ஸ்ரீவைஷ்ணவனாக வாழ்வது. வாய்க் கின்றவா—ஊற்று மாறாமல் மேன்மேலே பெருகி வருகின்றது

2. ......என்னைக் கொண்டு என்பாவந் தன்னையும் பாறக் கைத்து எமரேழ் எழுபிறப்பும, மேவுந் தன்மய மாக்கினான் வல்லன எம்பிரான் விட்டுமே (2-7-4).

என்னைக் கொண்டு—சேற்றிலே விழுந்த மாணிக்கத்தைக் கழுவி எடுத்துக் கொள்வது போலே எளியவனான என்னை ஏற்றுக் கொண்டு. கைத்து—போக்கி. எமர் ஏழ் எழு பிறப்பும—என் னோடு தொடர்புடைய ஏழு பிறவிகளிலுள்ளார்களையும், மேவும் தன் மயம ஆக்கினான்—தன்னைக் கிட்டி உய்யுமபடி செய்தான்.

3 எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே (2-6-2).

இவன் என்னுடனே கலந்து இன்புறுகிறான்; பிராட்டி தன்னை அணைத்தாலும் அங்கு நோக்குவதில்லை

## 10. 6. அச்சம் தீர்தல்

''வளவேழுலகு'' என்ற திருவாய்மொழி'யில் ஆழ்வார் பகவானை விட்டு அகலக் கருதினார்; பகவான் இவரைத் தேற்றி வைத்து இவரோடு கலந்தான். மீண்டும் ஆழ்வார் அகல நினைப்பாரோ என்று இவன் அஞ்ச, இவனை ஆழ்வார் அச்சங் கெடத் தேற்றுகிறார்.

1. உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே (2-6-1).

உன் திருவடிகளை திடமாகப் பற்றினேன்; நீ விட்டாலும் நான் விடமாட்டேன்.

2. வானேறே! இனி எங்குப் போகின்றதே! (2-6-9).

நித்திய சூரிகள் விட்டாலும் நான் உன்னை விடமாட்டேன். போகிலும் கூடப் போகும் படியன்றோ கலந்தது!

## 10. 7. பிரேமம்

ஈச்வரனைக் காண ஆவல் கொண்ட ஆழ்வார், இவனது அவதாரங்கள் தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்ததை நினைத்துச் சிறுபிள்ளைகள் போலப் புலம்ப, இவன் தனது மேனியைக் காட்டினான். ஈச்வரன் தம்மிடம் கொண்ட பிரேமத்தில் ஈடுபட்டு இதை ஆழ்வார் பாராட்டுகிறார்

1. பூசுஞ் சாந்து என் நெஞ்சமே புனையும் கண்ணி எனதுயிரே,
வாசகம் செய்மாலையே வான்பட்டாடையும் அஃதே,
தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே,
ஈசன் ஞால முண்டுமிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே (4-3-2).

ஈசன் ஞாலம் முற்றும் உண்டும் உமிழ்ந்தும் கொண்ட ஆயாசந்தீர நான் உடனிருந்து ஒன்றுஞ் செய்யப் பெற்றிலேன். இப்போது நான் செய்யும் உபசாரம்: நெஞ்சு, வாசகம், கைகள் இவற்றை இவனுக்கு போக உபகரணங்களாகச செய்வதே. என் நெஞ்சு கலவைச் சாந்து ஆகும்; வாசகம் இவனுக்குச் சூட்டும் மாலை; சிறந்த பட்டாடையும் இதுவே; ஒளி மிக்க திவ்யாபரணங்கள் நான் செய்யும் அஞ்சலியாகும்.

2 (பேயுயிர் மாய்த்தவனே!) பூத்தண் மாலை கொண்டு உன்னைப் போதால் வணங்கேனேலும் நின்— பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனதுயிரே (4-3-4).

நீ பேயை மாய்த்த காலத்தில் நான் உதவப் பெற்றிலேன். இந்தக் குறை தீரத் தண் பூ மாலை சூட்ட வேண்டிய உன் முடிக்கு என் உயிர் மாலை போலாகும்.

3 குரைகழல்கள் நீட்டி மண்கொண்ட கோல வாமனா! —விரை கொள் பூவும நீருங் கொண்டு ஏத்த மாட்டேனேலும், உன் உரை கொள் சோதித் திருவுருவம் என்ன தாவி மேலதே (4 3-7).

நீ பூமியை அளந்து கொண்டபோது உனது ஆயாசம் தீரத் திருவடிகளில் பரிமளமுள்ள மலர்கள் தூவி, நீரைப் பெய்து உன்னை ஏத்த இயலவில்லை. இப்போது உன்னுடைய சோதி வடிவம் என் ஆத்மாவுக்கு தாரகமாயிற்று. விரை—பரிமளம்.

4. உன்ன தென்ன தாவியும் என்ன துன்ன தாவியும்,
இன்ன வண்ணமே நின்றாய் என்றுரைக்க வல்லனே (4-3-8)

என் ஆவியும் உன் ஆவியும் இரண்டறக் கலந்தன. இவ்வாறு எனக்கு உதவி செய்யும் உன்னை என்ன பாசுரம் சொல்லி வாழ்த்துவேன்?

## 10. 8. கருணை

எம்பெருமானைக் காணத் துடித்த ஆழ்வார், இவனுக்குப் போலியானவற்றைக் கண்டு மயங்கினார், தலைவி நிலையில். இவரிடம் கருணை கொண்டு, இறைவன் தன்னையும் தன் செல்வத்தையும் காட்டிக் கொடுத்தான். ஆழ்வார் மகிழ்ந்து இவனது மேன்மையைச் சுவை யடர்ந்த பாடல்களாகப் பாடி மேலும் மகிழ்கிறார்.

1. வீற்றிருந் தேழுலகும் தனிக்கோல் செல்ல வீவில் சீர்—ஆற்றல் மிக்காளு மம்மானை, ...போற்றி யென்றே கைகளாரத் தொழுது சொல் மாலைகள், ஏற்ற நோற்றேற்கு இனி என்ன குறை எழுமையுமே? (4-5-1).

மாற்ற மாலை—சொல் மாலை, பாக்களாகிய மாலை கையில் தாளத்தைக் கொடுத்துப் பாடச் செய்கிறான், பகவான்.

2. மொய்ய சொல்லால் இசைமாலைகள் ஏத்தி உள்ளப் பெற் பெற்றேன் (5-1-2).

மொய்ய சொல்—அடர்ந்த சொற்களாலே. உள்ளப் பெற்றேன்—அனுபவிக்கப் பெற்றேன்.

3. மாற்ற மாலை புனைந்தேத்தி நாளும் மகிழ்வெய்தினேன்,
காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள் கரியவே (4-5-5).

காற்றின் முன்னம் கரிய—காற்றுக்கு முன் வெந்து போகுமாறு; பிறகு காற்றில் பறந்துபோம்.

4. சொல் மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு இனி யாவர் நிகர் அகல் வானத்தே? (4-5-8).

ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பவர்களும் எனக்கு ஒப்பாக மாட்டார்கள்.

## 10. 9. பரிவு

எம்பெருமானது வடிவழகை நேரில் காண மாட்டாமல் ஆழ்வார் விடாய் விஞ்சி அழுது அலற்றினார், "ஒரு நாள் வந்து தோன்றாயே", "உன்னை எங்கே காண்கேனோ?" என்று. எம்பெருமான் இரங்கி, இவரிடம் பரிவு கொண்டு, இவருக்கு முன் தோன்றி இவரது விருப்பப்படியே இவருடன் கலந்தான்.

1. அற்புதன் நாராயணன் அரி வாமனன்
நிற்பது மேலி இருப்பது என் நெஞ்சகம் (8-6-10)

திருக்கடித்தானத்துப் பெருமான் விரும்பி இருப்பது என் நெஞ்சுள்ளே.

2. பொருத்தமுடை வாமனன் தான் புகுந்து என்றன்
கருத்தையுற வீற்றிருந்தான் கண்டு கொண்டே (8-7-1).

கருத்தை— நெஞ்சில். உற—திடமாக. கண்டு கொண்டு— நோக்கி அருள் செய்து கொண்டு, வீற்றிருந்தான். "அறியேன் மற்றருள்" என்று மகிழ்கிறார், ஆழ்வார்.

3. தூய சுடர்ச் சோதி தனது என்னுள் வைத்தான் (8-7-4).

தனது தூய சுடர் சோதி—சோதி மயமான தனது வடிவத்தை.

4. என்னுள், திகழும் மணிக்குன்ற மொன்றே ஒத்து நின்றான் (8-7-5).

5. சிறியேனுடையச் சிந்தையுள் மூவுலகும்தன்,
நெறியா வயிற் கொண்டு நின்றொழிந்தாரே (8-7-8)

சிந்தையுள்—நெஞ்சிலே, நெறியா—காப்பாற்றுவதில் தப்பாத வாறு, மூ உலகும் தம் வயிற்றிற் கொண்டு— தம் வயிற்றில் கொண்ட மூவுலகங்களோடும் பொருந்தினார்.

ஆழ்வாரிடம் கொண்ட பேரன்பின் விளைவாக எம்பெருமான் இவரது நெஞ்சுள் புகுந்து களித்தான்.

1. திருவருள் செய்பவன் போல என்னுள் புகுந்து,
உருவமும் ஆருயிரும் உடனே உண்டான் (9-6-5).

திருக்காட்கரை யப்பன் செய்தது: அருள் செய்வதற்குப் போல மனத்துள் புகுந்தான்; ஆர்வத்தால் என்னையும் என் ஆத்மாவை யும் தன்னுடையனவாகக் கொண்டான்.

2. நாளுநாள் வந்து என்னை முற்றவும் தானுண்டான் (9-6-8)

நாள்தோறும் என்னோடு கலந்து நன்கு அனுபவித்துக் களித் தான்.

3. தான் என்னை முற்றப் பருகினான் (9-6-10).

தன்னுடைய குணத்தாலும் செயலாலும் என்னை நீர்ப்பண்ட மாக்கி, இயல்பில் கலந்து பரிமாறினான்; என்னைத் தன்வச மாக்கிக் கொண்டான்.

4. ஆருயிர் பட்டது எனதுயிர் பட்டது? (9-6-9).

இவ்வாறு இவனது குணத்தை அனுபவித்து நான் பட்டபாடு யார்தான் பட்டார்? நித்திய சூரிகளும் படவில்லை.

## 10. 11. ஆவல்

ஆழ்வாரைத் தன்பால் ஏற்றுக் கொள்வதற்கு இறைவன் பெரிதும் ஆவல் கொண்டான்.

1. திருமாலிருஞ்சோலை மலை என்றேன்...என்னத்
திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-1).

2. பேரேன் என்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-2)

3. வானே தருவான் எனக்காய் என்னோ டொட்டி
ஊனேய் குரம்பை இதனுள் புகுந்து—இன்று
தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான் (10-8-5).

தடுமாற்ற வினைகள்—தன் பக்கலிலிருந்து என்னைப் பிரித்துத் தடுமாறும்படி செய்யும் தீவினைகளை. தவிர்த்தான்—போக்கினான்.

4. என்னை முற்று முயிருண்டு என் மாய வாக்கை யிதனுள் புக்கு என்னை முற்றும் தானேயாய் நின்ற அம்மான் (10-7-3).

மாய ஆக்கை இதனுள்—அல்பமான ஆத்மாவில் என்னை முற்றும் தானானான்—என்னுள் புகுந்துச் சிறிதும் இடமில்லாமல் தானே முழுதுங் கொண்டான்.

5. என் நெஞ்சு முயிரும் அவையுண்டு தானே யாகி நிறைந்தானே (10-7-1).

இவை யின்றியும் திவ்ய தேசங்களில் கொள்ளும் பிரேமத்தைத் தம் அவயவங்களிலே பண்ணுகிறான் என்கிறார் ஆழ்வார்.

## 10. 12. ஆவலின் எல்லை

ஆழ்வாரிடம் கொண்ட பிரேமத்தால், இறைவன் இவரைத் தன்னிடம் சேர்த்துக் கொள்ளும் ஆவலில் இவரது திருமேனியிலும் விருப்பங் கொண்டான். இவ்வுடம்பு இழிவானது, இதில் பிரேமம் வேண்டா என்று ஆழ்வார் இவனிடம் வேண்டிக் கொண்டார்.

1. இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் (10-8-9).

இழிஞனான என்னை ஒரு பொருளாகக் கருதி இவன் என்னுள் புகுந்தான்; வேறு எவர்க்கும் புகுவதற்கு அவகாசமில்லாதவாறு என்னை முற்றூட்டாக அனுபவித்தான்.

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-1).

3. மங்கவொட்டு உன் மாமாயை (10-7-10).

ஆழ்வாரிடம் கொண்ட பிரேமத்தால் எம்பெருமான் இவரைத் திருமேனியோடே தன்னிடம் கொண்டு போக விரும்பினான். "இது ப்ரக்ருதி மயமானது, இழிவானது; இதனைப் போக்கி என்னை ஏற்றுக் கொள்" என்றார் ஆழ்வார். மாமாயை—உன் மாயையாலே ஒருவராலும் நப்பவொண்ணாதவாறு நீ பிணைத்த சரீரம்.

ஆழ்வார் கொண்ட விருப்பத்தால், இவரது வீடாயெல்லாந் திருமாறு எம்பெருமான் இவரைத் தன்னோடு சேர்த்துக் கொண்டு பெரிதும் மகிழ்ந்தான், தான் இதுவரையிற் கொண்ட அரு முயற்சிகள் பயனுற்றனவென்று.

## 10. 13. திருநாமங்கள்

இணையில்லாத பக்தியாலே ஆழ்வார் தாம் அனுபவித்ததற் கேற்ப வெளியிட்ட திருநாமங்கள் சில வருவன:

1. *அக்காரக் கனியே (2-9-8).*

*அக்காரம்—கரும்பு, சர்க்கரை. அக்காரக்கனி—அக்காரம் மரமாகி அதில் பழுத்த பழம் : மாங்கனிபோல.*

2. *அல்லலின்பம் அளவிறந்தெங்கும் அழகமர் சூழொளியன் (3-10-8)*

*அல்லல் இல் இன்பம்—துன்பம் என்பதே கலவாத இன்பம். அளவு இறந்து—அளவு கடந்து. அமர் அழகு சூழ் ஒளியன்—கட்டழகும் சோதியும் வாய்ந்தவன்.*

3. *ஆராவமுதே! (5-8-1).*

4. *எரியேய் பவளக் குன்றே! (5-8-7)*

*எரி ஏய் பவளக் குன்றே—பகைவர் அஞ்சுமாறும் அன்பர் உகக்குமாறும் சோதி அடர்ந்து அழகிய குன்றம் போன்றவன்.*

5. *எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-10).*

6 *என்னுள் கலந்தவன் (2-5-3).*

7. *கடல் படா அமுதே! (2-3-5).*

*தேவர்கள் பெற்ற அமுதம்போல் அற்பமில்லாமல், யசோதைப் பிராட்டி அனுபவித்தது போல் பரமானந்தம் தரும் அமுதம். தேவர்கள் பெற்றது உப்புச் சாறு; அதை ஒரு முறைதான் இவர்கள் உண்டனர். ஆனால் ஆழ்வார் இவ்வமுதை எப்போதும் அனுபவித்தார்.*

8. *கனிவார் வீட்டின்பம் (2-3-5).*

*கனிவார்—உன்னிடம் அன்புள்ளவர்களுக்கு. வீட்டின்பம்—மோக்ஷம் போன்ற இன்பம் அளிப்பவன்.*

9. *கோதுவமில் என் கன்னற் கட்டி (2-7-3)*

கோது: வேறு பொருள் கலந்திருப்பதால். அவம்—யாகம் தப்புவதால் குற்றம். வேறு பொருள் கலவாது உரிய பாகத்தில் பெற்ற கட்டி.

10. தீர்த்தன் (2-8-6).

தன் திருவடியின் தொடர்பாலே யாவரையும் தூயோராக்கும் புனிதன்.

11. பரிவதிலீசன் (1-6-1).

பரிவு—துக்கம், பக்ஷபாதம். நாம் சமர்ப்பிப்பதை இவன் ஏற்றுக் கொள்வானோ என்பதால் துக்கம் நம்மிடம் இல்லாத வாறு, எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வான், எம்பெருமான். பரிவு இல்—அன்பரிடத்துப் பரிவு தனக்கு இல்லாகவுடைய, அதாவது இயல்பாக வுடையவன்; அதாவது பரிவு மிக்கவன்.

12. மாசறு சோதி என் செய்யவாய் மணிக்குன்றத்தை (5-3-1).

பகவானது அழகு: சிவந்த வாய், மணி போன்ற திருமேனி. இதற்கு மாசு; இதை எவ்வகையாலும் அனுபவித்தே தீருவோம் என்னும்படி இது அமையாமை. மடலூர்ந்தாயினும் பெறுவேன் என்கிறார், ஆழ்வார் தலைவி நிலையில்.

13. விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னற் கனியினை (3-6-7).

## 11. உபதேசம்

பகவான் அருளிய பக்தியாலே கனிந்த ஞானம் வாய்ந்த ஆழ்வார் பகவான் விஷயமாகவும் அவனைப் பெறும் வகையை யும் உலகினர்க்கு அவ்வப்போது உபதேசம் செய்கிறார். திருவாய் மொழியில் ஒவ்வொரு பத்திலும் இவ்வாறான உபதேசம் அமைந்துள்ளது

குருபரம்பரைக்கு இவர் தலைவர் இவரது உபதேசம் பெற்று நாதமுனிகள் இதைப் பரப்பினார். இதனையே ராமாநுஜர் வளர்த்தார்.

### 11. 1. உலக வாழ்க்கை

உலக வாழ்க்கை துன்பமே அடர்ந்தது. உற்றார் உறவினர் நம்மிடம் பொருளுண்டானால் அதைக் கவர விரும்புவர், துன் பமே செய்வர். செல்வம், போகம் போன்றவை நிலையற்றவை.

1. நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந் தேங்க,
எண்ணாராத் துயர் விளைக்கும் இவை யென்ன உலகி
யற்கை! (4-9-1).

தாம் அனுபவிக்கும் துயரால், நண்ணாதார் (பகைவர்) முறுவலிப்பர்—முறுவல் கொள்வர், களிப்பாலே. நல் உற்றார் கரைந்து ஏங்க—நல்ல மனம் வாய்ந்தவர் அனுதபிப்பர்.

2. கொண்டாட்டும் குலம்புனைவும் தமருற்றார் விழுநிதியும்
வண்டார்பூங் குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல்
(4-9-3).

கொண்டாட்டு—செல்வம் காரணமாக யாவராலும், பாராட்டப் பெறுவது. குலம்புனைவு—குலத்தின் மேன்மையைப் பாராட்டுதல். தமர்—சுற்றத்தார். உற்றார்—சம்பந்திகள் விழுநிதி—அடர்ந்த செல்வம். வண்டு ஆர் பூ குழலாள் மனைவி மனை—போகம் நுகருவதற்கான இடம் (வீடு). இவை ஒழிய—இவை குறியழியாமலிருக்கும் போது. மாய்தல்—இறத்தல்.

3. கொண்ட பெண்டிர் மக்க ளுற்றார் சுற்றத்தவர் பிறரும்
கண்டதோடு பட்ட தல்லால் காதல் மற்று யாதுமில்லை
(9-1-1).

கண்டதோடு பட்டதல்லால்—கையில் பொருள் இருந்தால் அன்பு கொள்வார்களே யின்றி. காதல் மற்று யாதும இல்லை—வேறு வகையால் காதல் இல்லை.

4. அணைய வந்த ஆக்க முண்டேல் அட்டைகள் போல்
சுவைப்பர் (9-1-2).

சுற்றத்தவரும் பிறரும் செய்வது: அணைய—கைக்கு எட்டி ஆக்கம்—செல்வம்

5. பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றியென்
றேற்றெழுவர், இருள்கொள் துன்பத் தின்மை காணில் என்னே!
என்பாரு மில்லை (9-1-3).

இருள் கொள் துன்பத்து—அறிவின்மை, துக்கம இவற்றை விளைவிக்கும் துன்பம் நேர்ந்தால், என்னே! என்பாரு மில்லை—வாயால் ஐயோ என்று சொல்பவர் இலர். வாயால் இரங்கிச் சொல்வதும் இல்லை.

6. ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்...இம்மையிலே பிச்சை தாம் கொள்வர் (4-1-1).

உலகு தன் உடன் செல்ல—உலகிலுள்ளோர் தன் ஆணைப்படி நடக்குமாறு. ஒரு நாயகமாய்—உலகத்தை ஒரே குடைக்கீழ்க் கொண்டு ஆள்பவர், இம்மையிலே—இப்பிறவியிலேயே. (பதவி நிலையற்றது).

7. ஆமின் சுவையவைஆறோ டடிசி லுண்டார்ந்தபின், தூமென் மொழிமடவார் இரக்கப்பின்னும் துற்றுவார், ஈமின் எமக்கொரு துற்றென்று இடறுவர் (4-1-7).

ஆறு இன் சுவை, ஆம் அடிசில் உண்டு—ஆறு வகைச் சுவையுடைய உணவு உண்டு. உண்டு ஆர்ந்த பின்—பூர்ணமாக உண்ட பின்னும், தூமென்...துற்றுவர்—இவர்களது விருப்பத்திற்காக மேலும் உண்பவர். ஒரு துற்று ஈமின்—ஒரு பிடியாவது சோறு அளிப்பீர் என்று. இடறுவர்—தட்டித் திரிவர். இன்பம் நிலையற்றது.

8. (உலகாள்பவர்) இம்மையே, தம்மின் சுவை மடவாரைப் பிறர் கொள்ளத் தாம் விட்டு, வெம்மினொளி வெயில் கானகம் போய்க் குமைதின்பர்கள் (4-1-2).

வெம்மின் ஒளி வெயில்கானகம்—கொடிய வெய்யில் அடர்ந்த கானகம். குமைதின்பர்கள்—மறைந்து துன்புறுவர்.

9. வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பதில்லை — நிற்குறில், ஆழ்ந்தார் கடற்பள்ளி அண்ணல் அடியவ ராமினோ (4-1-6).

10. மின்னின் நிலையில, மன்னுயி ராக்கைகள் (1-2-2).

## 11. 2. மானிடம் பாட வேண்டா

பகவான் தன் அடியார்க்கு எளியவன்; இவர்கள் விரும்புவன எல்லாங் கொடுப்பவன், தன்னையுங் கொடுப்பான். கவி பாட வேண்டில் இவனையே பாடவேண்டும்; மானிடத்தைப் பாடிப் பெறுவது ஒன்றுமில்லை, பெற்றாலும் நிலை நிற்காது.

1. என்னாவது? எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்! மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும் பொருள்? (3-9-4).

பெரும் பொருள்—பெறுவது அற்பமாயினும் அதிகம் பெறும் விருப்பத்துடன் செல்வது நோக்கு.

2. கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை,
வள்ளல் புகழ்ந்து நும்வாய்மை இழக்கும் புலவீர்காள்! (3-9-5).

குப்பை கிளர்த்து அன்ன செல்வத்தை—குப்பையைக் கிளறினாற்போல் இழிவே செல்வமாக உடைய அற்பரை. வள்ளல் புகழ்ந்து—''வள்ளலே!'' என்று புகழ்ந்து வாய்மை—புகழும் வாக்குடைமை,

3. மாரி யனையகை மால்வரை ஒக்கும் திண்டோளென்று,
பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும் பொய்கள் பேசவே! (3-9-7).

பற்றையை—தூறு போலே பயனில்லாத ஒருவனை (புகழ்ந்து). பச்சை பசும் பொய்கள்—மெய்யே கலவாது கற்பித்த பொய்கள். பேச—பேசி வாழ்த்த. இப்பொய்கள்: மாரி அனையகை—மேகம் போல் பொழியும் கைகள். மால்வரை—பெரிய மலை.

4. (பகவானைப் பாடினால்) சாய் கொண்ட இம்மையும்
சாதித்து வானவர் நாட்டையும், நீ கண்டு கொளென்று வீடும்
தரும் நின்று நின்றே (3-9-9).

சாய்—ஒளி. சாய்கொண்ட இம்மையும் சாதித்து—ஒளியுடைய இம்மை இன்பத்தையும் தந்து. வீடு—கைங்கர்யத்திற்கான மோக்ஷம் நின்று நின்று—கிரமப்படி அருள்செய்வதில் நின்று.

## 11. 3. பகவானே புகல்

பகவான் தனது அன்பர்க்கு மிகவும் எளியவன். இவனை ஆராதனம் செய்வது மிகமிக எளிது.

1. பத்துடை அடியவர்க் கெளியவன் (1-3-1)

பத்து—பக்தி.

2. பிரிவகை யின்றி நன்னீர் தூய்
புரிவதும் புகை பூவே (1-6-1).

பிரிவகை இன்றி—நாம் எளிதில் ஆராதனஞ் செய்யக்கூடுமோ என்று கலங்கிப் பிரியாமல். நல்நீர்—பக்தியால் அளிக்கும் நீர் புரிவது—கொடுப்பது; அவன் இதை அருட் கொடை போல் கருதுவான். புகை பூவே—ஏதேனும் ஒரு புகை, ஏதேனும் ஒரு பூ.

3. விள்கை விள்ளாமை விரும்பி
உள்கலந்தார்க் கோரமுதே (1-9-5).

விள்கை—வேறு பயனைக் கருதி இவனை விடுவது. விள்ளாமை—வேறு பயன் கோராமை உள்கலந்தார்க்கு—இவனையே புகலாகக் கருதி ஒருநீராகக் கலந்தவர்க்கு. ஓர் அமுது—ஒப்பற்ற அமுதமாவான்; ஆராவமுது.

4 தொழுது மாமலர் நீர்சுடர் தூபம் கொண்டு
எழுது மென்னும் இதுமிகை யாதலில் (9-3-9).

சிறந்த மலர், அர்க்ய தீர்த்தம், பாத்ய தீர்த்தம், தூபம், தீபம் கொண்டு உய்வோம் என்றிருப்பது, மிகை என்னும்படி உன் சீலம் இருப்பது

5 ...பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே (3-3-8).

6 உம்முயிர், வீடுடையானிடை, வீடு செய்ம்மினே (1-2-1).

உமது ஆத்மாவும் சரீரமும் உள்பட பகவானிடம். வீடு இசைமினே—(இவற்றை) ஒப்படைக்கக் இசைவீர்.

## 11. 4. பரதத்வம்

ஸ்ரீமந் நாராயணனே தேவர்களுக்கெல்லாம் ஆதியும் காப்புமாவான். தேவர்களுடைய நிலையும் அவர்களது பெருமையும் இவனாலேயே, பக்தர்கள் விரும்பும் பலன்களைத் தேவர்கள் வழங்குவது, ஸ்ரீமந்நாராயணன் இவர்களுக்கு அந்தராத்மாவாக இருப்பதாலே. ஆனால் இந்த தேவதைகள் அளிக்கும் பலன் அல்பமானது, அஸ்திரமானது. இந்தக் கருத்தைக் கண்ணபிரான் வெளியிடுகிறான். இதே கருத்தை ஆழ்வாரும் வெளியிட்டிருக்கிறார். இவர் வேத இதிஹாஸ புராணங்களிலுள்ள கருத்துக்களையே கூறியிருக்கிறார். இவற்றிற்குப் புறம்பாகத் தமது மனப்போக்கின்படி இவர் எதுவும் தாமாகவே படைத்துக் கூறவில்லை. இவர் பிற தெய்வங்களை இழிவாகச் சொல்லியதுமில்லை, ஸர்வேச்வரன் இவர்களை அப்போதப்போது காப்பாற்றி அருளும் செய்கிறான். சிவபிரானுக்குப் பிரமனால் வந்த சாபத்தை இவன் தவிர்த்தான்; தனது மார்பில் ஓரிடமும் கொடுத்தான் என்கிறார், ஆழ்வார். இவர் வேதக் கருத்துக்களையே வெளியிட்டிருப்பதால், "வேதம் தமிழ் செய்த மாறன்" என்று பாராட்டப் பெறுகிறார்.

1. நாடி நீர் வணங்குந் தெய்வமும் உம்மையும் முன் படைத்தான் 4-10-2).

2. பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும நாயகன் அவனே (4-10-3).

3. உறுவதாவது...குறிய மாணுருவாகிய நீள் குடக் கூத்தனுக்கு ஆட்செய்வதே (4-10-10).

## 11. 5. திவ்ய தேச வாசம்

1. கிளரொளி இளமை கெடுவதன் முன்னம், வளரொளி மாயோன் மருவிய கோயில், வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை, தளர்விலராகில் சார்வது சதிரே. (2-10-1).

சதிர்—தக்கது. தகாதது (இளிம்பு) இதர விஷயங்களைப் பற்றுவது.

2. எய்த்திளைப்பதன் முன்னம்(திருவேங்கடம்) அடைமினோ (3-3-10).

எய்த்து—உடல் வலிமை இழந்து.

3. மதி தவழ் குடுமி மாலிருஞ்சோலைப் பதியது ஏத்தி எழுவது பயனே (2-10-2).

மதி—சந்திரன். குடுமி—சிகரம்.

4. ...திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே (3-3-8).

5. மாதுறு மயில்சேர் மாலிருஞ் சோலை
போதவிழ் மலையே புகுவது பொருளே (2-10-10).

## 11. 6. கைங்கர்யம்

1. ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் (3-3-1).

எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் பிரியாமலிருந்து குறையாதவாறு கைங்கர்யம் செய்யவேண்டும்.

2. படமுடை யரவில் பள்ளி பயின்றவன் பாதங் காண,
நடமினோ நமர்களுக்குள்ளீர் (10-2-8).

நாராயணனை வணங்க, திவ்யதேச யாத்ரை.

3. பேருமோர் ஆயிரத்துள் ஒன்று நீர் பேசுமினே (10-2-3).
திருநாமங்களைப் பாடி வணங்குவது

4. சுற்றிநாம் வலஞ் செய்ய நம ஆயர் கெடும் கடிதே (10-1-7).
திருக்கோயிலை வலஞ்செய்வது.

5. கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே (10-2-5).

திருக்கோயிலில் அலகிட்டுத் தூயதாக்குவது.

6. தூப நல்விரை மலர்கள் துவளற ஆய்ந்து கொண்டு, வாமனனடிக் கென்றேத்த மாய்ந்தறும் வினைகள் தாமே (10-2-9).

நல்தூபம், மணமுள்ள மலர்கள் இவை பகவானது மேன்மைக் கேற்ப ஆய்ந்து, எடுத்துக் கொண்டு, இதுவே பயனாக வணங்க வேண்டும்.

7. சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை மலர்கள் நல்ல
ஆய்ந்து கொண்டேத்த வல்லார் அந்தமில் புகழினாரே.
(10-2-10).

## 11. 7. திருமந்த்ரம்

எம்பெருமானை அடைந்து உய்வதற்கு ஓத வேண்டிய மந்த்ரம் ஸ்ரீமந் நாராயணனைப் பற்றியது: ஓம் நமோ நாராயணாய என்பது. இதை ப்ரணவம் இல்லாமல் ஓதினாலும் பயன் பெறக்கூடும்.

1. (ஈறில) வண்புகழ் நாரணன், திண் கழல் சேரே (1-2-10).

ஈறு இல—எல்லையில்லாத. வண் புகழ்—சிறந்த கல்யாண குணங்களால் மேன்மையுற்ற. திண் கழல்—அன்பரை ஒரு நாளும் கைவிடாது அருள்புரியும் திருவடி.

2. கண்ணன் கழலிணை, நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம், திண்ணம் நாரணமே (10-5-1).

நாமம் நாரணம்; இது திண்ணம்: "ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம்" என்றவாறு.

3. (இதன் பொருள்): நாரணன் எம்மான், பாரணங் காளன், வாரணந் தொலைத்த, காரணன் தானே (10-5-2).

எம்மான்—என் ஸ்வாமி, என்னை யுடையவன். பார் அணங்கு ஆளன்—பூமிக்கு அபிமானியான பூமிப் பிராட்டியின் நாயகன்.

காரணம் தொலைத்த : இதற்கு அருள் செய்யத் தோன்றியவன். காரணன்—நமது நலனுக்கு ஆதாரமாக இருப்பவன். அகாரத்தின் பொருள்: உலகுக்குக் காரணம், காப்பு.

4. தானே உலகெல்லாம், தானே படைத்திடந்து, தானே உண்டுமிழ்ந்து, தானே ஆள்வானே (10-5-3).

5. நாராயணாய என்பதில் ஆய என்ற உருபின் கருத்து:

நாடீர் நாடோறும், வாடா மலர்கொண்டு, பாடீர் அவன் நாமம், வீடே பெறலாமே (10-5-5)

6. தொழுவதன் பயன் : சாரா ஏதங்கள், நீரார் முகில் வண்ணன், பேரார் ஓதுவார், ஆரார் அமரரே (10-5-8).

பேர் ஆர் ஓதுவார் அமரரே—நித்திய சூரிகளோடொப்பர்.

வேதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள் யாவும் ஐந்து அரும்பொருள்களை (அர்த்த பஞ்சகம்) வெளியிடுகின்றன: ஈச்வர ஸ்வரூபம், ஆத்ம ஸ்வரூபம், ஈச்வரனைப் பெறும் உபாயம், இதனால் பயன், இவனைப் பெறுவதற்குத் தடைகள்.

ஈச்வர ஸ்வரூபம் : "எம்மான்" (10-5-2). உபாயம்—நாடீர் நாடோறும், பாடீர் அவன் நாமம்." பலன்—வீடே பெறலாம். தடை—பிறப்பால் ஏதங்கள்.

இவ்வாறு பல இடங்களிலும் காணலாம்.

## 11. 8. குணங்கள் : அனுபவம்

ஸர்வேச்வரனுடைய கல்யாண குணங்களைக் கேட்பதும், பேசுவதும், கீர்த்தனஞ் செய்வதும் அடியார்க்கு இன்பகரம்.

1. கற்பார் இராமபிரானையல்லாமல் மற்றும் கற்பரோ? (7-5-1).

2. கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ? (7-5-3).

3. நாட்டிற் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ? (7-5-2).

4. கேட்டு முணர்ந்தவர் கேசவற் காளன்றி யாவரோ? (7-5-6).

5 வார்த்தை யறிபவர் மாயவற் காளன்றி யாவரோ? (7-5-10) வார்த்தை—ஸ்ரீகீதை.

6. மாய மறிபவர் மாயவற் காளன்றி யாவரோ? (7-5-9).

## 11. 9. அடியாராக வாழ்தல்

ஸர்வேச்வரனிடம் கொள்ளும் அன்பும் பக்தியும் இவனது அடியார்களிடமும் கொள்வதுதான் பூர்ணமான ஞானத்தின் விளைவாகும்

திருமலடியார் செய்வன வருமாறு: இந்த அடியார்களுக்கு அடியாராக வாழ வேண்டும்.

1. பாற்கடல் சேர்ந்த பரமனைப் பயிலுந் திருவுடையார் (3-7-1), திரு—பாக்யம்.

2. தூமணி வண்ணன் தன்னைத் தாளுந் தடக்கையும் கூப்பிப் பணியுமவர் (3-7-2).

3 அப்பனை...தொன்மை பிதற்ற வல்லாரைப் பிதற்றுமவர் (3-7-9).

பிதற்ற—அடைவின்றிப் பாராட்டிப் பேச.

4. ஒளிக் கொண்ட சோதியை உள்ளத்துக் கொள்ளுமவர் (3-7-6) பகவானது சோதியை.

5. வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு ஆளென்று உள் கலந்தார் (3-7-9)

6.... அம்மான் புனைபூங் கழலடிக்கீழ், சயமே அடிமை தலை நின்றார் (8-10-2)

பூ புனை கழலடிக்கீழ்—பூவும் வீரக்கழலும அணியும் திருவடிகளின் கீழே. சயமே—அவனது பேரெழிலில் தோற்று, அல்லது இதுவே பயனாக. அடிமை தலை நின்றார்—அடிமையில் மேலெல்லையிருப்பவர்கள். சயமே: அடிமையா யிருப்பதே ஜயம் என்று, பரதாழ்வான் போல்வார்.

7 கோதில் அடியார் (8-10-9).

வேறு பயன் எதுவுங் கருதாது கைங்கர்யத்திலேயே தோய்ந்திருப்பவர்கள்; ராம குணங்களில் ஈடுபடாமல் பரதனுக்குத் தொண்டு செய்வதே தருமமாகக் கொண்ட சத்ருக்னாழ்வான் போல்வார்.

8. நீக்கமில்லா அடியார் (8-10-10). இளைய பெருமாள் போல்வார்கள்.

## 11. 10. ஸ்ரீவைகுண்டத்தில்

உலக வாழ்க்கை நீங்கியபின் ஆத்மாக்கள் அனுபவிப்பது என்ன? சிலர் வெளியிட்டுள்ளது: ஆத்மாக்கள் ப்ரஹ்மத்தோடு ஒன்றிவிடுகின்றனர் என்று; இதற்குமேல் விவரம் ஒன்றுமில்லை. உபநிஷத்துக்கள் அறிவித்துள்ளதை ஆழ்வார் திருவாய்மொழியில் விளக்கியிருக்கிறார். தனது அடியார்களை ஸர்வேச்வரன் அர்ச்சிராதி மார்கமாக அழைத்துச் சென்று, இவர்களுடன் இன்புறுகிறான்; இவர்கள் இவனுக்குத் தொண்டு செய்தும், இவனது புகழ்களைப் பாடியும், திருமேனியின் கட்டழகை அனுபவித்தும் மகிழ்கின்றனர்; இவ்வுலகுக்கு மீள்வதில்லை. அர்ச்சிராதி மார்கமாகச் சென்று பகவானை அடிதொழுது இன்புறுவது கௌஷீதிகி என்ற உபநிஷத்தில் உள்ளது. இதில் குறிப்பிட்டுள்ளன: அபராஜிதம் ஆயதநம்—ஸ்ரீவைகுண்டம். விபுப்ரமிதம்—திருமாமணி மண்டபம். அமிதௌஜா: பர்யங்க:—திருக்கட்டில். வேறு சில உபநிஷத்துக்களிலும் இது குறிப்பிடப்பெற்றுள்ளது.

1. சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின (10-9-1).

அர்ச்சிராதி மார்கமாகச் செல்லும் போது முக்தர்களைக் கண்டு, மேகங்கள் பறைபோல் முழங்கின.

2. தொழுதனர் உலகர்கள் தூப—நல் மலர் மழை பொழிவனர் (10-9-3).

உலகர்கள்—வழியில் அந்த அந்த உலகில் உள்ளவர்கள்.

3. கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் (10-9-5).

4. மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும், தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர் (10-9-7).

மடந்தையர்: ஐந்நூறு அப்ஸரஸ் பெண்டிர் தங்கள் கரங்களில் மாலைகள், பட்டாடைகள் போல்வனவற்றை ஏந்தி முக்தரை அலங்காரஞ் செய்து வாழ்த்துகின்றனர். மருதர்—மருத்துக்கள் எழுவர். வசுக்கள்: எண்மர்

5. வந்தவர் எதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து, அடியரோடிருந்தமை (10-9-11).

அவர் வந்து எதிர் கொள்ள—பிராட்டியோடு நாராயணன் எதிர் வந்து ஏற்றுக் கொள்ள. அந்தம் இல் பேர் இன்பம்—அடியார்களோடு கைங்கர்யம் செய்வதால்.

6. ...இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதுஞ் செய் தொல்லை எாலை (திரு வி. 97).

நித்தியசூரிகள் பகவானைச் சூழ்ந்தும் தொழுதும் பேரின்பம் பெறுவர். இத்தகைய இன்பம் முக்தர்க்கு.

7. மாக வைகுந்தத்து மகிழ்வெய்துவர் வைகலுமே (5 10-11).

மாக வைகுந்தத்து—பரமாகாசத்திலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில். வைகல்—எப்போதும், மீட்சியில்லாமல்.

8. அடிமை செய்வார் திருமாலுக்கே (6-5-11).

9. முகில் வண்ணனானத்து இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே (7-2-11).

10. நேர்பட்டார் நெடுமாற்கு அடிமை செய்யவே (8-10-11).

11. தொண்டர் ஆள்வது சூழ் பொன் விசும்பே (10-8-11).

ஆள்வது—யாவராலும் பாராட்டப்பெற்று மகிழ்வது. சூழ் பொன் விசும்பு—வியக்கத்தக்க சோதிமயமான பரமபதம்.

## 12. தொண்டர்க்கு அமுது

ஸர்வேச்வரனது திருவருளாலே ஆழ்வார் திருவாய்மொழி பாடினார். "என் முன் சொல்லும்" என்கிறார், ஆழ்வார்; பகவான் முன்னுருச் சொன்னதைத் தாம் சொன்னதாகக் கூறுகிறரர், இவர்." 'என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை இன் தமிழ் பாடிய ஈசன் என்கிறார்;, ஆதலால் திருவாய் மொழி எல்லா வகையாலும் சிறப்புடையது அரிய கருத்துக்களா லும், காவிய நலனாலும், இசை வளத்தாலும் நிகரற்றதாய் இது விளங்குகிறது "தொண்டர்க்குஅமுதுண்ணச் சொலமாலைகள்" என்கிறார் ஆழ்வார், இத் திருவாய்மொழி விஷயமாக.

(1) உட்பொருளால் மேன்மை:

1 திருமாலால், அருளப்பட்ட சடகோபன் ஓராயிரம் (8-8-11).

அருளப்பட்ட: மயர்வற மதிநலம் பெற்றார், இவர்.

2. கேசவனடியிணை மிசைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன தூய ஆயிரம் (6-4-11).

3 முகில்வண்ண னடிமேல் சொன்ன சொல் மாலை ஆயிரம் (7-2-11).

4. திருவடிமேல் உரைத்த தமிழ் ஆயிரம் (4-9-11).

திருவடிமேல்—பகவானது திருவடிகள் பற்றி.

5 தீர்த்தங்கள் ஆயிரம் (7-10-11).

தீர்த்தங்கள்: புனிதமானவை; தீர்த்தனை (பகவானை)ப் போலே. பகவான் : "பாவந ஸர்வலோகாநாம்".

6. முந்தை ஆயிரம் (6-5-11)

முந்தை — பழைமையான. பழைமையான வேதங்களின் கருத்துக்களை வெளியிடுவதால்.

7. அழிவில்லா ஆயிரம் (9-7-11).

கேட்பார்களது நெஞ்சில் எப்போதும் தோய்ந்திருப்பது.

8. நூறே சொன்ன ஓராயிரம் (9-4-11).

பொன்னைக் கிழிகிழியாகக் கோப்பார் போலே நூறு நூறாக ஆழ்வார் அளிக்கின்றார்.

9. பொய்யில் பாடல் ஆயிரம் (4-3-11).

பகவான் "மெய்யனாகும்"; இவனைப் பற்றிய பாடலும் இவ்வாறே.

(2) பாடிய ஆழ்வாரால் மேன்மை:

10. நாவியலால் இசை மாலைகள் ஏத்தி மேவப் பெற்றேன் (4-5-4).

நா இயலால்: நெஞ்சிற் வவுத்தமின்றிக்கே நாவே இசைத்தது

11 தெருள்கொள்ளச் சொன்ன ஓர் ஆயிரம் (2-10-11).

கேட்பார்க்குத் தம்மிலும் தெளிவு மனத்தில் விளங்குமாறு.

12 துயக்கின்றித் தொழுதுரைத்த ஆயிரம் (3-1-11).

துயக்கு இன்றி—ஐயந்திரிபு இல்லாமல்.

13. அவாவிலந்தாதிகளால் இவை ஆயிரம் (10-10-11).

பக்திப் பெருக்கால் வாய்ந்த ப்ரபந்தம்.

14. ஆகநூற்றவந்தாதி ஆயிரம் (5-10-11).

தாம் பகவானைப் பாடி தரித்திருப்பதற்கு இசைத்த ஆயிரம்,

15. ஒலி புகழ் ஆயிரம் (5-?-11).

பகவானுடைய குணங்களை யாவரும் அறியுமாறு வெளியிடுகின்ற ப்ரபந்தம்.

(3) பக்தி வளத்தாலே கவிப் பெருக்கு:

16. சொல்பணிசெய் ஆயிரம் (1-10-11).

சொல்லாலே பணி செய்த ஆயிரம், சொற்கள் தாமே முன் வந்து பாசுரங்களாகிப் பணிசெய்தன.

17. சொல்வலங் கொண்ட ஆயிரம் (3-8-11).

சொற்களாலே கருத்துக்கள் நன்கு விளங்குமாறு.

18. வேட்கையால் சொன்ன பாடல் ஆயிரம் (4-10-11.)

குணங்களை அனுபவிக்க வேணுமென்ற ஆசையால்.

19. தெளிவுற்ற ஆயிரம் (7-5-11).

பாசுரங்களே தெளிவைப் பிறப்பிக்கும்.

20. மிடைந்த சொல் தொடை ஆயிரம் (1-8-11)

மிடைந்த சொல்—அடர்ந்த சொற்சள் "என்னைக் கொள் என்னைக் கொள்" என்று தாமே முன்வந்தவை.

(4) கவியால் வரும் சிறப்பு :

21. சீர்த்தொடை ஆயிரம் (1-2-11).

கவிக்கு உறுப்பான அலங்காரங்கள் வாய்த்ததால்.

22. அடியார்ந்த ஆயிரம் (3-7-11).

பாதம் போன்ற இலக்கணங்கள் பூர்ணமாக வாய்ந்த.

23. நிரைக்கொள் அந்தாதி ஓர் ஆயிரம் (5-3-11).

பக்தி பரவசரான நிலையில் எழுத்து, சொல், பொருள், அடி. தொடை, பா, இசை, தாளம், அந்தாதி யாவும் சேர அமைந்தன.

24 சீர்வண்ண ஒண்தமிழ்கள் இவை ஆயிரம் (5-1-11).

கவிக்கு அங்கமான சீர், வண்ணம், அன்றியும் இனிமையான தமிழ் இவை அடர்ந்து

25. கட்டெழில் ஆயிரம் (6-6-11).

கட்டு : செய்யுளுக்கான தொடை. இதனால் எழில்:

26 அமை பாட்டு ஓர் ஆயிரம் (2-4-11).

அமை — சமைந்த. சொல், பொருள் இவை பூர்ணமாக அமைந்த.

27. பண்மிகொள் ஆயிரம் (3-6-11).

தலையான பண்ணிலே சொன்ன.

28. பண்தலையில் சொன்ன தமிழாயிரம் (2-8-11).

29. செயிரில் சொல் இசை மாலை (3-2-11).

செயிர் இல்—குற்றமில்லாத சொல், பொருள் இவற்றால்.

30. குழலில் மலியச் சொன்ன ஓர் ஆயிரம் (5-8-11).

பகவானது திருக்குழலோசையினும் இனிமை மிகுமாறு.

31. பாலோடு அமுதன்ன ஆயிரம் (8-6-11).

பால்:- திருக்கடித்தானப் பெருமான் என்ற இனிமை அமுது—ஆழ்வாரது கவி.

(6) பாடிக் களிப்பவர்கள்:

32. பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம் (1-5-11).

பால் ஏய் தமிழர்—பால் போல் இனிய தமிழ் அறிந்தோர்: முதலாழ்வார்கள் போல்வார். இசைகாரர்: ஸ்ரீமதுரகவி போல்வார் பத்தர்: பெரியாழ்வார் போல்வார்.

33. குழாம் கொள் ஆயிரம் (2-3-11).

குழாம்: ஸ்ரீவைஷ்ணவகோஷ்டிகள். கொள்—அனுபவிக்கின்ற.

இவரது திருவுள்ளம், பகவானது திருவருளால் வெளிவந்த திருவாய்மொழியை யாவரும் பாடி உய்யவேண்டும் என்பதே.

1. குழாங்களாய் அடியீருடன் பாடி நின்று ஆடுமினே (2-3-11).

2. ஆயிரத்துள் இப்பத்தும் பாடியாடிப் பணிமின் அவன் தாள்களே (9-10-11).

இவ்வாறு பாடினால்,

3. பன்னிரு நாமப் பாட்டு அண்ணல் தாள் அணைவிக்குமே (2-7-11).

4. வேரி மாறாத பூமேல் இருப்பாள் வினை தீர்க்குமே (4-5-11).

5. ஓதவல்லார் பிறவாரே (1-6-11).

6. எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்குமே (7-9-11).

7. மாக வைகுந்தத்து மகிழ்வெய்துவர் வைகலுமே (5-10-11)

8. நல்ல பதத்தால் மனை வாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே (8-10-11).

---

# நம்மாழ்வார்
# காட்டும்
# தெய்வம்

T. S. ராஜகோபாலன்

# Nammalvar Kattum Deivam

[TAMIL]



This Book is Published
with the Financial Assistance
of
Thirumala Tirupati Devastanams
Under their Scheme
Aid to Publish Religious Books.

## நன்றி!

மத சம்பந்தமான நூல்கள் வெளியிடுவதற்கான பொருளுதவி என்ற திட்டத்தின்படி திருமலை திருப்பதி தேவஸ்தானங்கள் வழங்கிய பொருளுதவியைக் கொண்டு இந்நூல் வெளியிடப்படுகிறது. இதனை ஆய்ந்து அச்சிட ஏற்றதென ஆதரவு நல்கிய பெரியோர்க்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானங்களின் அதிகாரிகளுக்கும் எனது வணக்கம் கலந்த நன்றி!

T. S. ராஜகோபாலன்

# நம்மாழ்வார்
# காட்டும் தெய்வம்

செஞ்சொற்கவி, கவிரத்ந-கண்டீரவ
அபிநவ பட்டர்பிரான், அபிநவ வித்யாபாஸ்கர
வித்யாரத்நம்

**T. S. ராஜகோபாலன், B. A., L. T.**

முன்னாள் தலைமை யாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி,
திருவல்லிக்கேணி

திருவல்லிக்கேணி, சென்னை-600 005.

**1994**

# முன்னுரை

ஸ்ரீமந் நாராயணனது திருவருளாலே நம்மாழ்வார் தமது ப்ரபந்தங்களை அருளினார். இவற்றில் வேதங்களின் கருத்துக்களே தெள்ளத் தெளிவாக, யாவரும் ஐயந்திரிபற உணர்ந்து கொள்ளுமாறு அடர்ந்துள்ளன. ஆதலால் இவை வேதங்களின் சாரமாகப் போற்றப் பெறுகின்றன.

இவர் காட்டும் தெய்வம் ஸ்ரீமந் நாராயணன். இவன் உலகங்களுக்கெல்லாம் மூவகைக் காரணமுமானவன்; உயிர்களைப் படைத்துக் காப்பவன். இவன் பிரமன் முதலான சேதனர்களுக்கு அந்தர்யாமியாகி யாவரையும் இயங்கச் செய்கிறான், இவன் தன்னைத் தன் அடியார்களுக்கே யாக்கிக் கொண்டு, இவர்களை உய்யச் செய்து தானும் பெரிதும் மகிழ்கிறான். ஸ்ரீவைகுண்டத்தில் இவனது திருமேனியின் கட்டழகு, இளமை, திவ்யபரிமளம் போன்றவற்றையும், அளவில்லாத கல்யாண குணங்கள்பலவற்றையும் முற்றூட்டாக அநுபவித்துப் பேரானந்தத்தில் திளைப்பவர் நித்யரும் முக்தரும். வியூஹம், விபவம், அர்ச்சை போன்ற நிலைகளிலும் இந்த மேன்மை சிறிதும் குறையாமல் இவன் விளங்குகிறான். இவன் சேதனரிடம் கொள்ளும் அன்பும் கருணையும் அபாரமானவை. மனைவி, மக்கள் இவர்களது குற்றங்களைக் காணாக் கண்ணிட்டு அன்பே கொள்ளுங் குடும்பத் தலைவன் போல், ஸர்வேச்வரன் சேதனரிடம் வாத்ஸல்யத்தால் அருள்புரிந்து இவர்களை நன்னெறியில் ஊன்றச் செய்து, தன்னிடம் பக்தி வளரச் செய்து, தன்பால் ஏற்றுக் கொண்டு பெரிதும் மகிழ்ந்து, இவர்களுக்கும் என்றுங் குறையாத பேரின்பம் விளைவிக்கின்றான்.

சேதனர் இவனையே புகலாகப் பற்றி உய்தல் எளிதாகும். இவன் ஆராதனைக்கு எளியவன். அர்ச்சையில் இவனை ஆராதித்து திருமந்த்ரத்தை ஓதி வந்தால் மோக்ஷமாகிய பேற்றை எளிதில் பெறலாம். உலகோர் உய்வதற்கெனவே இவன் அவதாரங்கள் பல செய்து, அறநெறியை வளர்க்கின்றான், அன்றியும் ஞானத்தால் மிகச் சிறந்த மஹான்களிடம் ஆவேசித்து, நன்னெறி நூல்களை அருளி உபதேசிக்கச் செய்கிறான். உய்வதற்கு இவனையே பற்ற வேண்டுமென்று ஆசார்யர்கள் உபதேசித்துள்ளனர்.

இவ்வாழ்வார் தமது அநுபவங்களை விவரிப்பது தனிச் சிறப்புடையது. சேதனர்களைப் பெறுவது தனது பேறாக ஸர்வேச்வரன் கருதிப் பலவாறு முயற்சி செய்கிறான். இவன் தம்மைத் "தீமனம் கெடுத்தான்" என்கிறார், ஆழ்வார்— அதாவது உலக வாழ்க்கையிற் மனம் செல்லாதவாறு இவருக்கு மதிநலம் அருளி பக்தியை விளைவிக்கிறான், இந்த பக்தி பரபக்தி, பரஞானம், பரமபக்தியாகி, இவர் பகவானது திருவடிகளைக் காணவேண்டுமென்று துடிக்கிறார். எவ்வகையாலும் இவரைத் தனக்கே யாக்கிக் கொள்ள ஸர்வேச்வரன் விழைகின்றான், இவரை உரிய பெருமையுடன் வரவேற்க ஸ்ரீவைகுண்டத்தைப் புதுப் பொலிவுடன் திகழச் செய்கிறான். இவன் இவரிடம் கொள்ளும் காதல், இவர் காட்டும் காதலைவிஞ்சுகிறது. விடாய்த்தவன் இரு கரங்களாலும் தண்ணீரை வாரி வாரிப் பருகுவது போல் இவன் இவரது திருவுள்ளத்தில் உறைந்து, இவருடன் கலந்து பெரிதுங் குலவுகிறான். "ஆருயிர் பட்டது எனதுயிர் பட்டது?" என்கிறார் இவர். இவரது திருமேனியில் பெரிதும் மோகங் கொண்டு இவன் திவ்யதேசங்களில் தான் கொள்ளும் அன்பை இவரது அவயவங்களில் காட்டுகிறான்— "திருமாலிருஞ்சோலை மலையே திருப்பாற்கடலே என் தலையே, திருமால் வைகுந்தமே திருவேங்கடமே எனதுடலே" என்கிறார் இவர். இவரது பேரவா பலன்பெறுகின்றது; இவரை ஸர்வேச்வரன் தன்னிடம் ஏற்றுக் கொள்கிறான். "அவாவற்று வீடு பெற்ற" என்கிறார் ஆழ்வார்.

இவர் வெளியிட்டுள்ள கருத்து: பகவானது திருவருளாலே சேதனன் ஒருவன் தனது அறிவின்மை நீங்கிச் சிறந்த ஞானத்தால் பக்தி வாய்ந்து, ஸ்ரீ வைகுண்டத்தில் நித்யர் முக்தர்களுடன் ஸர்வேச்வரனுக்கு எல்லாவகைக் கைங்கர்யங்களுஞ் செய்து, மீட்சியின்றி எக்காலமும் பேரின்பம் பெறுவது.

இவரது அருளிச்செயல்கள் பெரியதோர் மணற்கேணி போல் தொட்ட தொட்ட இடமெல்லாம் இன்பச் சுவை குமிழ்த்துப் பொங்கி வெழுகின்றது. பகவானிடம் கொள்ளும் அன்பின் மேலீட்டால் இவர் இவனது திருமேனிக் கட்டழகையும், ஆத்ம குணங்களையும் நினைந்து நினைந்து நைந்துருகித் தமது மனத்தில் ஏற்பனவற்றை விவரிக்கும் பாங்கு வேறு எந்த பக்தரிடமுங் காண்பதற்கில்லை. இவரது அநுபவங்கள் ஒப்பற்ற சொல் லோவியமாகித் தொண்டர்க்கு அமுதமாகின்றன. இறைவனது

திருமேனி எங்குந் தாமரை பூத்த கருமாணிக்க மலை என்றும், இலைகளிடையே மலர்கள் அடர்ந்த தாமரைத் தடாகம் என்றும், ''அரவணைமேல் இருள்விரி நீலக் கருநாயிறு சுடர்கால்வது போல் இருள் விரி சோதி'' என்றும், திருத்தோள்கள் கற்பகக்கா என்றும், ''கோலமே! தாமரைக் கண்ணது ஓர் அஞ்சன நீலம்'' என்றும் இவ்வகைகளிலே அநுபவித்து, இவ்வாறு அநுபவிப்பது, அப்பொழுதைக் கப்பொழுது ஆராவமுதமென்றும், இவன் கோதவமில் கன்னற் கட்டி என்றும், ''அச்சுவைகட்டி என்கோ? அறுசுவை அடிசில் எனகோ?'' என்றும், ''முன் நல் யாழ்பயில் நூல் நரம்பின் முதிர் சுவை'' என்றும், இவனது புகழ் தமது செவிகள் சுவைக்கும் ''கீர்த்திக் கனிகள்'' என்றும் ஆழ்வார் விவரிக்கிறார். இவ்வாறான இன்பம் ப்ரபந்தங்கள் முழுதும் பயின்றுமேன்மேலும் அநுபவிக்கக் கூடும். பாசுரங்களின் கருத்துக்களை அசார்யர்களது வ்யாக்யானங்களோடே அநுபவிப்பது என்றுந் தெவிட்டாத ஆராவமுதமாகும். இவரது அநுபவங்கள் சிலவற்றைப் பகுதிகளாக எளிய தமிழில் விளக்கத்துடன் அமைந்திருக்கிறேன். இந்நூலின் மூலம் அருளிச் செயல்களிலும் வ்யாக்யானங்களிலும் ஆர்வம் விளைந்து அன்பர் பயின்று இன்புறுவராக.

ஆசிரியன்

# பொருளடக்கம்



---

திரு வி.—திருவிருத்தம்

திருவா.—திருவாசிரியம்

பெ. திரு—பெரிய திருவந்தாதி




நம்மாழ்வார்

# 1. பரத்வம்

நம்மாழ்வார் காட்டும் தெய்வம் ஸ்ரீமந் நாராயணன். இவன் எங்கும் உறைந்திருப்பவன்; உலகங்களுக்கெல்லாம் நாதன்; உயிர்களைக் காப்பதே தனது பேறாகக் கொள்பவன், தனது அடியார் தன்னை அனுபவித்து இன்புறுமாறு, பேரெழில் வாய்ந்த திருமேனியோடு சோதிமயமாய் விளங்குகிறான். பிறவியே இல்லாத இவன் உயிர்களைக் காத்து நன்னெறியில் உய்த்திடப் பலவகைப் பிறவிகள் பிறந்து அருள் பாலிக்கின்றான். அர்ச்சா மூர்த்தியாகத் திருக்கோயில்களிலும இல்லங்களிலும் உறைந்து யாவரையும் காப்பாற்றுகிறான். இவனது மங்கள குணங்கள் எண்கடந்தவை; இவற்றால் விவரிக்கப் பெறும் திருநாமங்கள் ஆயிரக் கணக்கானவை.

## 1. 1. பரமன், பரமபதம்

இவன் யாவரிலும் வேறுபட்டு மேம்பாடுடையவன்; ஆதலால் இவன் பரன், பரமன், பரம் பொருள். இவன் உறையுமிடங்களில் சிறந்தது பரமபதம்; இது என்றும் அழியாமல் நிலைத்துள்ளது,

1. ஆதி மூர்த்தி(3-3-5).
யாவர்க்கும் இவன் முதல்வன், ஆதலால் பரமன்.

2. ஆதியம் புருடனென்கோ? (3-4-4).
புருடன் என்கோ—புருஷன் என்பேனோ?

3. கணக்கறு நலத்தனன் அந்தமில் ஆதியம் பகவன் (1-3-5).

எல்லையில்லாத வள்ளல் தன்மை யுடையவன்; அந்தமில்லாதவன்; யாவர்க்கும் காரணமாக இருப்பவன். இழிவு யாதுமில்லாமல ஞானமயமாக இருப்பவன்.

4. பரமபரம்பரன் (10-4-11):
யாவர்க்கும் ஈச்வரன்.

5. பரவி வானவர் ஏத்த நின்ற பரமனை (3-6-3).
வானவர்—நித்திய சூரிகள்.

6. வரனவில் திறல் வலி அளி பொறையாய் நின்ற—பரன் (1-1-11).

வரன் நவில் திறல்—சிறந்ததாகச் சொல்லப்பெறும் சக்தி (தீயின் குணம்), வலி—வலிமை (வாயுவுக்கு). அளி—சீதளம் (நீர்), பொறை — பூமியின் குணம். இவ்வாறு பண்புடைய பஞ்ச

பூதங்களுக்கும் இவன் இறைவன். உபலக்ஷணமாக ஸ்ரீவைகுண்டமும் இவனது உடைமை. இவ்வகையால் இவன் பரன்.

7. படியே இதுவென்றுரைக்கலாம் படியனல்லன் பரம்பரன் (8-8-2).

படி இது—இது ஒப்பு, என்று உரைக்கலாம் படி அல்லன்—என்று சொல்ல இயலாதவாறு மேன்மை யுடையவன். ஆதலால் பரம்பரன்.

8. வைகுந்த மாநகர் (4-10-11).

9. அந்தாமம் (2-5-1).
அம்—அழகிய; தாமம்—உறைவிடம்: பரமபதம்.

10. பொன்னுல காளீரோ (6-8-1).
பொன் உலகு—பரமபதம்.

11. நலமந்த மில்லதோர் நாடு (2-8-4).
நலம் அந்தம் இல்லது ஓர் நாடு—நன்மைக்கு முடிவின்றிக்கே இருக்கும் நிலம்; பரமபதம்.

12. பெரிய வானுள் நிலாவுவரே (6-10-11).
பெரிய வான்—பரமபதம்.

13. எம்மா வீட்டுத் திறமும் (2-9-1).
எம் மா வீடு — எல்லா வகையாலும் சிறப்புடைய ஸ்ரீவைகுண்டம்.

14. தன் சோதி புக்க அமர ரரியேற்றினையே (7-6-9).
தன் சோதி—சோதி மயமாய் (பகவானுக்கு) இருப்பிடமான பரமபதம். அமரர்—நித்தியசூரிகள். அமரர் அரி ஏறு—நித்திய சூரிகளுக்குத் தலைவன்.

15. பரமேட்டி (9-10-8).
பரமபதத்தில் உறைபவன்.

16. வீடுடையான் (1-2-1).
பரமபத நாதன், வீடு-பரமபதம்.

## 1. 2. பெருமானின் கட்டழகு

பகவானது திருமேனி பஞ்ச-உபநிஷத் மயமானது, சோதிமயமானது, பரிமளம் மிக்கது, கட்டழகு வாய்ந்தது, இளமையே விளங்குவது.

1. செந்தண் கமலக் கண் கை கால் சிவந்த வாயோர் கருநாயிறு, அந்தமில்லாக் கதிர் பரப்பி அலர்ந்த தொக்கும் (8-5-7).

நீலநிறமுடைய சூரியனது கதிர்கள் பரந்துள்ளது போல் திருமேனி விளங்கும்; குளிர்ந்த தாமரைபோன்ற கைகள், கால்கள், வாய் இவை உடைய சூரியன் போன்றது திருமேனி.

2. கருகிய நீலநன் மேனி வண்ணன் செந்தாமரைக் கண்ணன் (1-9-3).

மிகவுங் கறுத்த நீலமணிபோல் திருமேனி நிறமுடையவன்; தாமரை போன்ற திருக்கண்கள் உடையவன்.

3. அப்பொழுதைத் தாமரைப்பூக் கண்பாதம் கை கமலம் (2-5-4).

அப்போதலர்ந்த தாமரைபோல் கண், பாதம், கை இவை புதுமை பெற்றுள்ளன.

4. விட்டிலங்கு செஞ்சோதித் தாமரை பாதம் கைகள் கண்கள் (2-7-5).

பரந்து விளங்கிச் சிவந்த தாமரை போல்வன பாதங்கள், கைகள், கண்கள்.

5. நேரா வாய் செம்பவளம், கண் பாதம் கை கமலம் (2-5-5).

சிவந்த பவளம் வாய்க்கு ஒப்பாகாது. கண், பாதம், கை இவற்றிற்குக் கமலங்கள் ஒப்பாகமாட்டா.

6. கருமாணிக்க மலைமேல் மணித்தடந் தாமரைக் காடுகள் போல், திருமார்பு வாய் கண் கை காலுடை ஆடைகள் செய்ய பிரான் (8-9-1).

கறுத்த மாணிக்க மயமான மலையின் மேல் படர்ந்த தாமரைக் காடுகள் போல் திருமார்பு முதலியன சிவந்து விளங்க, இச்செவ்வியால் விளங்கும் பெருமான்,

7. தாளுந் தோளும் முடிகளும் சமனிலாத பல பரப்பி, நீளும் படர்பூங் கற்பகக் காவும் நிறை பன்னாயிற்றின், கோளுமுடைய மணி மலை போற் கிடந்தான் (8-10-8).

இவன் சோதியடர்ந்த கருமாணிக்க மலை போல் விளங்குகிறான். சமனிலாத—ஒப்பில்லாத. இதில் விளங்குவன பல தாள்கள், தோள்கள், முடிகள். இவை ஓங்கிப் பணைத்த கற்பகச் சோலைகள் போல் படர்ந்துள்ளன. ஆதித்யர் பலர் அடர்ந்தாற் போல் இம்மலை சோதி மிக்கது. பல் நாயிறு—பல ஆதித்யர். கோள்—சோதி.

8. அந்தரமேல் செம்பட்டோடு அடி உந்தி கை மார்பு கண்வாய், செஞ்சுடர்ச் சோதிவிட உறை யென் திருமார்பனையே (7-6-6)

அந்தரம மேல் — உடமபுக்கு நடுவான அரையில். செம்பாடு — சிவப்புப் பீதாம்பரம். அரைக்குக் கீழும் மேலும் இவ்வாறு சிவப்புடையன. திருவடிகள், கொப்பூழ், திருக்கைகள், திருமார்பு, திருக்கண், பவளவாய்.

## 1. 3. திருமேனி வண்ணம்—சோதி

1. எங்கும் அழகமர் சூழொளியன் (3-10-8)

எங்கும் பரவிய உறுப்புக்களின் பேரெழிலோடு இயைந்த கட்டழகு வாய்ந்தவன்.

2. பயிலுஞ் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக் கண்ணனை (3-7-1).

பயிலும்—பரந்த.

3 வண்ண மாமணிச் சோதியை (2-7-13).

நிறத்தாலே சிறந்த நீல மணிபோல் ஒளியுடையவனை.

4. நீலமலர் நெடுஞ்சோதி சூழ்ந்த நீண்ட முகில்வண்ணன் கண்ணன் (8-2-3)

நிறத்தாலே சிறந்த நீல மணிபோல் ஒளியுடையவன்.

5. என் மைதோய் சோதிமணி வண்ண! எந்தாய்! (2-9-2).

கருமை அடர்ந்த ஒளியுடைய மாணிக்கம்போல் வடிவழகுடையவனே! என் ஸ்வாமியே!

6. மாசூணாச் சுடருடம்பாய் (3-1-8).

குறைவில்லாத சோதிமயமான திருமேனியுடைய.

7. உயர்வினையே தரும் ஒண் சுடர்க் கற்றையை (1-7-4).

ஞானம், பக்தி போல்வனவற்றை அளிப்பவனாய், சோதிமயமான திருமேனியுடையவனை. உயர்வு, உயர்வினை (இரண்டாம் வேற்றுமை).

8. அஞ்சன வண்ணனென்கோ? (3-4-3).

அஞ்சனம்போல் நிறமுடையவன் என்பேனோ?

9. சாதி மாணிக்கமென்கோ? சவிகொள் பொன் முத்தமென்கோ? (3-4-4).

சாதி மாணிக்கம்—சிறந்த மாணிக்கம், சவி—ஒளி, முத்தம்—முத்து.

10. நீலத் தடவரைமேல் புண்டரீக நெடுந்தடங்கள், போலப் பொலிந்து (திருவி. 39).

வரை—மலை, தடங்கள்—தடாகங்கள்.

மாசு அறு சோதி—குறை ஏதுமில்லாமல் சோதியே அடர்ந்த, மணிக்குன்றத்தை—மாணிக்க மலைபோல் விளங்குவோனை

12. சாயல் சாமத் திருமேனி தண்பாசடையா தாமரைநீள், வாசத்தடம்போல் வருவானே (8-5-1).

சாயல்—ஒளி, சாமம்—கறுப்பு, பசு—பசுமை, அடை—இலை, திருமேனியின் அழகு: பசுமையான இலைகள் அடர்ந்து, தாமரை மலர்கள் நிறைந்து, பெரியதாய், பரிமளம் மிக்க த்டாகம் நடந்து வருவதுபோல.

13. சோதியாகி எல்லா உலகுந் தொழும் ஆதி மூர்த்தி (3-3-5).

## 1. 4. திருவடிகள்

திருவடிகள் முதல் திருமுடி வரையில் பெருமானது பேரெழிலை ஆழ்வார் விவரிக்கிறார், பல பாசுரங்களில்.

1. பூவார் கழல்கள் (6-10-4).

தேவர், முனிவர், ரிஷிகள் இவர்கள் இடும் மலர்கள் அடர்ந்தன திருவடிகள்.

2. தேனே மலருந் திருப்பாதம் (1-5-5).

தேனைப் பெருக்கி மலருந் திருவடிகள்.

3. மலர்த் தாமரைப் பாதங்களே (5-9-6).

மலர்ந்த தாமரைபோல் அழகிய திருவடிகள்.

4. அடிச்சோதி நீ நின்ற தாமரையாய் அலர்ந்ததுவோ? (3-1-1),

திருவடிகளின் ஒளியே ஆஸன பத்மமாகக் கீழே பரவியதோ? ஆஸநபத்மம்—திருவடிகள் பொருந்தியிருக்கும் தாமரைமலர்.

5. நறுமாவிரை நாண்மலரடி (8-10-3).

நறு மா விரை—பரிமளத்தால் சிறந்த. நாள் மலர்—அப்போதலர்ந்த தாமரை போல் அழகிய

6 மலரடிப் போதுகள் (7-10-5).

7. தனிமாத் தெய்வத் தளிரடி (8-10-7).

ஒப்பில்லாத தேவபிரானுடையவனாய், தளிர்போல் மெல்லிய திருவடிகள்.

8 வடிவிணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடி (9-2-10).

வடிவால் ஒப்பில்லாத பெரிய பிராட்டியாரும், இவள் போன்ற பூமிப்பிராட்டியும், தங்களது மெல்லிய கரங்களால் பிடித்தால் திருவடிகள் கன்றுமோ என்று அஞ்சிப் பிடிக்கிறார்கள்.

9. துயரறு சுடரடி (1-7-1)

அடியார்களது துயரத்தைத் தீர்ப்பதால் ஒளி வாய்ந்த திருவடிகள். சுடர் அடி—பஞ்ச—உபநிஷத் மயமான திருவடிகள். இங்குப் பஞ்சபூதங்கள் போல் ஸ்ரீவைகுண்டத்தில் பஞ்ச உபநிஷத்துக்கள்; இன்பமே தருவன.

## 1. 5. உந்தி

உந்தி—கொப்பூழ்.

1. தாமரை உந்தித் தனிப்பெரு நாயக! (திருவா. 1).
நாயக—நாயகனே!

2. கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்பு,[3] கால் கண் கை செவ்வா யுந்தியானே! (8-7-6).

3. அயனிடமே கொப்பூழ் (2-5-2).
அயன்—பிரமன்.

## 1. 6 திருமார்பு

பெரிய பிராட்டியாருக்கு உறைவிடம்

1. அலர்மேல் மங்கை உறைமார்பா! (6-10-10).

2. அல்லி மாதரமருந் திருமார்பினன் (9-10-10).

அல்லி மாதர்—தாமரைப் பூவில் வீற்றிருக்கும் பெரிய பிராட்டியார். பரிமளம் அடர்ந்த திருமேனி வாய்ந்த பெரிய பிராட்டியார் விரும்பி உறையுந் திருமார்பு.

3. மலர் மாதருறை மார்பன் (4-8-2).

4. திகழ்கின்ற திருமார்பில் திருமங்கை தன்னோடும், திகழ்கின்ற திருமாலார் (10-6-9).

இயல்பாக அழகு வாய்ந்த திருமார்பு. பிராட்டி உறைவதால் அழகு மிக்கு விளங்குகிறது. திருமாலார்-பிராட்டியிடம் பிரேமம் வாய்ந்தவன்.

5. மார்பில் திருமறுவும் (5-5-2).
மறு—மச்சம், ஸ்ரீவத்ஸம்

6. மடத்தையை வண்கமலத் திருமாதினைத், தடங்கொள் தார் மார்பினில் வைத்தவர் (4-2-7).

தடங்கொள்—பரப்புடைய. தார் மார்பு—திருத்துழாய் மாலை வேய்ந்த மார்பு.

7. மையார் கருங்கண்ணி கமல மலர்மேல், செய்யாள் - திருமார் பினில் சேர் திருமாலே! (9-4-1)

செய்யாள்—தாமரை மலரில் வீற்றிருந்து, சிவந்த திருமேனி வாய்ந்தவள்.

## 1. 7. திருவதரம்

அதரம்—உதடு.

1. பவளச் செவ்வாயன் என்கோ? (3-4-3).
பவளம்போற் சிவந்த வாயுடையவன் என்பேனோ?

2. செம்பவளத் திரள் வாயன் சிரீதரன் (3-5-4).
செம்பவளம் போலே விளங்கும் வாயுடையவன்.

3. செங்கனிவா யொன்றினோடுஞ் செல்கின்றதென் நெஞ்சமே (5-5-1).

கனி—கோவைக் கனி.

4. பனிங்குநீர் முகிலின் பவளம்போற் கனிவாய் சிவப்ப (9-2-4).
தெளிந்த நீரை முகப்பதாலே அழகிய மேகமானது பவளம் பூத்தாப்போல் வாயின் பழுப்பு.

5. தூமுறுவல் தொண்டைவாய்ப் பிரானை (5-3-8).
தொண்டை—தொண்டைக் கனி.

6. வாலியதோர் கனி கொல்?..., நீல நெடுமுகில் போல் திருமேனி யம்மான் தொண்டை வாய் (7 7-3).

அம்மான் தொண்டை வாய்—(பெருமானுடைய) தொண்டைக் கனியின் நிறமுடைய வாயானது; வாலியது ஓர் கனி கொல்?—நன்மையுடையதாய், நிறத்தாலும், இனிமையாலும் ஒப்பில்லாத தொண்டைக் கனி என்னலாமோ?

## 1. 8. திருமூக்கு

1 கோல நீள் கொடிமூக்கும் (5-5-6).
அழகு மிக்க கொடிபோல் விளங்கும் மூக்கு.

2. மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ அறியேன் (7-7-2).

மாடு உயர்—பக்கத்திலே ஓங்கியிருக்கும், கற்பகத்தின்—கற்பகத்தின், வல்லி—கொடி.

## 1. 9. திருப்புருவம்

1. நீண்ட புருவங்களும் (5-5-5).

2. இன்னுயிர்க்கு ஏழையர்மேல் வளையும் இணை நீளவிற்கொல் மன்னிய சீர்மதனன் கருப்புச் சிலைகொல்? மதனன், தன்னுயிர்த் தாதை கண்ணபெருமான் புருவமவையே (7-7-4).

ஏழையர்மேல்—பெண்பாலரைக் குறித்து, இன் உயிர்க்கு—உயிரைக் கவர்வதற்காகவே. நீல வில் கொல்—கறுத்த வில்லோ? (இந்தப் புருவம்). அன்றி, மதனன்—மன்மதன். கருப்பு—கரும்பு. தாதை—தகப்பன.

## 1. 10. திருத்தோள்கள்

1. தோளுமோர் நன்குடைத் தூமணி வண்ணன் (3-7-2).

2. கற்பகக் காவன நற்பல தோளற்கு (6-6-6).
காவன—காவைப்போல், நல்—சிறந்த.

3. சேண்சுடர்த் தோள்கள் பல தழைத்த தேவபிராற்கு (8-2-9).
சேண்—ஓங்கி, சுடர்—சோதி வாய்ந்த

4. தோள்களாயிரத்தாய் (8-1-10)
(இவன் எங்கும் பரந்திருப்பதால் ஆயிரக்கணக்கான தோள்கள்).

## 1. 11. திருச்செவிகள்

1. மகரம் தழைக்குந் தளிர்கொல், பைவிடப் பாம்பணையான் திருக்குண்டலக் காதுகளே (7-7-6).

பை—படம். மகரம் தழைக்கும் தளிர் கொல்—மகரவடிவில் தழைத்த தளிர்களோ! என்னுமாறு. குண்டலக் காதுகள்—குண்டலங்கள் அணிந்த காதுகள். குண்டலங்கள் மகரமீன்வடிவுடையன.

## 1. 12. திருக்கண்கள்

1. கண்ணுஞ் செந்தாமரை (திருவி. 43).

2. சோதி வாயவுங் கண்ணவுஞ் சிவப்ப (திருவா. 1).

3. தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவுந் தலைமகனை (2-6-3).

4. அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனை (6-7-10).

5. கோலமே! தாமரைக் கண்ணதோர் அஞ்சன, நீலமே! (3-8-8).

கோலமே!—ஒப்பனை ரூபம் தரித்தாற் போல் விளங்கு பானே! தாமரைக் கண் அது அஞ்சன நீலமே!—தாமரைபோற் கண்கள் வாய்ந்து, நீல நிறத்தின் வடிவானவனே!

செந்தாமரைத் தடங்கண் (2-5-1).

கரியமேனி மிசை வெளிய நீறு சிறிதேயிடும் பெரிய கோலத் - ங்கண்ணன் (4-5-6).

கரிய மேனி மிசை-கறுத்த வடிவழகுக்கு மேலே. நீறு—அஞ்சனம் சிறிதே இடும்—ஓரளவு அணிகின்ற (மங்களகரமாக).

எரிகொள் செந்நாயிறிரண்டுடனே உதயம் மலைவாய் விரி கின்ற வண்ணத்த எம்பெருமான் கண்கள் (திருவி. 82).

எரிகொள் உதயம் மலைவாய்—நெருப்புடைய உதய கிரியில் —னே—ஒரே காலத்தில். செம் நாயிறு இரண்டு—சிவந்த கதிர் நடைய சூரியன் இரண்டு, எழுந்தால் போல்; விரிகின்ற ண்ணத்த—பரவும் இயல்புடையன, சோதியாலே

## 1. 13. திருக்குழல்

சுரிகுழல் (10-1-1). சுருண்ட குழல்.

மொய்ய நீள்குழல் தாழ்ந்த தோள்களும் (5-5-8).

மொய்ய—அடர்ந்து. தாழ்ந்த—தாழ்கின்ற. தோள்கள் வரை தாழ்கின்ற.

மாசறு நீலச் சுடர்முடி வானவர் கோனை (6-8-8).
முடி—குழற்கற்றை.

கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ் சுருளின், r கொண்ட நீல நன்னூல் தழைகொல் அன்று மாயன் குழல் 7 -9).

கொள்கின்ற கோள் இருளை—ஊழிக் காலத்தில் எங்கும் -ர்ந்துள்ள இருட்டை சுகிர்ந்திட்டு—பஞ்சைப்போல் எஃகிட் சாரமில்லாததை அகற்றி இவ்வாறு பெற்ற, கொழும் ளின்—திணிந்த சுருளின். உள்கொண்ட—நூற்றுக் கொள்ளப் ட. நீல நல்நூல் தழைகொல்—கருமையே திணிந்து அழகிய ப் திரளோ? அன்று—இல்லை; இவ்வாறும் விவரிக்க இயலாது.

நூல்—பூணூல்.

6. மன்னு பூணும் நான்கு தோளும் ([illegible])

பூண்—ஆபரணம்.

7. உடையார்ந்த ஆடையன் கண்டிகை[illegible] உடை நாணினன் புடையார் பொன் நூலினன் [illegible] மற்றும் பலகலன் (3-7-4).

உடை ஆர்ந்த ஆடையன் அரையி[illegible] பூத்தாற் போல் விளங்கும் திருப்பீதாம்பரம் [illegible] திருக் கழுத்தில் கண்டிகை வேய்ந்த[illegible] நாணினன் பீதாம்பரத் தின் மேலே சாத்திய கோவை [illegible]—பலவ கைப்பட்ட திருவாபரணங்கள் பூண்[illegible].

8. பூந்தண் மாலைத் தண்டுழாயும் பொன்முடியும் வடிவும் (5-5-4).

9. தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர்முடிமேலும் தாளிணை மேலும் புனைந்த தண்ணந் துழாயுடை யம்மான் (1-9-7).

10. துழாய்விரைப் பூமருவு கண்ணி எம்பிரானை (2-6-3).

விரை—பரிமளம். பரிமளமும் மலரும் மருவியிருந்துள்ள துழாய்க் கண்ணி வேய்ந்த பெருமானை

## 1. 16. திவ்யாயுதங்கள்

பெருமானிடம் அன்புடையோர்களுக்கு இவை ஆபரணங்கள் போல் விளங்கும்.

1. அறமுயல் ஆழியங்கைக் கருமேனி யம்மான் ([illegible]).

அறம் முயல் ஆழி—அடியார்களைக் காப்பாற்றும் தர்மத்தில் ஊன்றியிருக்கும் சக்கரம் கருமேனி[illegible] அழகு குறிப்பு.

2. சக்கரத் தண்ணலே! என்று ([illegible]).

அண்ணல்—கையுந் திருவாழியுமான [illegible] காட்டி அடிமைக் கொண்ட ஸ்வாமியே! என்று.

3. கையார் சக்கரத்தென் கருமாணி[illegible] ([illegible])

4. திண் சக்கர நிழறு தொல்[illegible] ([illegible])

திண் சக்கரம்—பகைவ[illegible] நிற்கும் திண்மையுடைய சக்கரம். நிழறு—[illegible] பரப்புகின்ற. தொல்—ஒப்பில்லா ஆயுதம்.

வளைவாய்—சூழ்ந்த வாயுடைய; எங்கும் கூர்மையுடை
நேமி—சக்கரம்.

6. சுடராழி சங்கேந்தி அளிக்கின்ற மாயப்பிரான் (2-3-10).

7. வலக்கையாழி இடக்கைச் சங்கம் இவையுடைய வண்ணனை (6-4-9).

மால் வண்ணனை—கறுத்த திருமேனியுடையவனை.

8. சங்கு வில் வாள் தண்டு சக்கரக் கையற்கு (6-6-2).

9. வெள்ளைச் சுரி சங்கொடாழி ஏந்தி (7-3-1)
சங்கொடு ஆழி ஏந்தி.

10. விடலில் சக்கரத் தண்ணலை (2-9-11).
கையை விட்டு நீங்காத சக்கரத்தையுடைய பெருமானை

11. எப்போதுங் கை கழலா நேமியான் நம்மேல் வினைகடி (பெ. திரு. 87).

நம்மேல் வினைகடிவான்—நமது வினைகளைப் போக்கு
காக. கை கழலா நேமியான்—கையை விட்டு நீங்காமல் சக்கர
ஏந்துபவன்.

இந்த ஆயுதங்களே பகைவர் அஞ்சுமாறு விளங்குகின்ற
12. அடலாழி யம்மானை (1-4-10).
அடல் ஆழி—விரோதிகளை அழிப்பதே இயல்பான சக்

13. பொருமா நீள் படை ஆழி சங்கத்தொடு (1-10-1).
பொருமா நீள் படை—விரோதிகளை அழிப்பதில் முனை
இத்தாலே மிகச் சிறந்தனவாய், வடிவோட்ட வளரக் கட
யுள்ள சக்கரத்தோடும் சங்கோடும்.

14. வென்றி வில்லும் தண்டும் வாளும் சக்கரமும் சங் (5-5-3).

வென்றி—வெற்றி கொள்ளும்.

15. சீறா வெரியுந் திருநேமி வலவா! (6-10-2).
(அசுரர் குலங்களை நீறாக்கி) சீறா—சீறி. எரியும்—அ
கக்குகின்றன.

16. திண்பூஞ் சுடர் நுதி நேமியஞ் செல்வர் (திரு வி. 9).
திண்ணியதாய், அழகியதாய், ஒளியும் வாயுமுடைய ச
ஏந்தும் பெருமான்.

17. ஒண்மை யுடைய உலக்கை ஒள்வாள் தண்டு கொண்டு புள்ளூர்ந்து (3-10-1).

தண்டு—கதை. ஒள்—ஒளியுடைய; கூரான. புள்—கருடன்.

## 1. 17. அணை

1. அணைவது அரவணைமேல் (2-8-1).

2. நாகணை மிசை நம்பிரான் (5-10-11).

3. சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை (8-7-11).
சுடர்—சோதி அடர்ந்த.

4. பைகொள் பாம்பேறி உறைபரனே! (3-8-4)
பை—படம்

## 1. 18. வாகனம்

1. தூவியம் புள்ளுடையான் (4-5-4).

அம் தூவி புள்—அழகிய சிறகுகளுடைய கருடன். கருடனை வாகனமாக உடையவன் பரமன்.

2. ஆடும் பறவை மிசைக் கண்டு (7-10-3)
அழகிய நடையுடைய கருடன்மேல் கண்டு.

3. பொருசிறைப்புள் உவந்தேறும் (1-9-3).
பொருசிறை—அடர்ந்த சிறகுகளுடைய.

4. கறையணி மூக்குடைப் புள்ளைக் கடாவி அசுரரைக் காய்ந்த அம்மான் (3-10-2).

கறை அணி மூக்குடை—முட்டை பக்குவமாவதற்கு முன்னே உடைக்கையாலே நுனியில் கருகுதலாகிய அடையாளமுடைய அலகு வாய்ந்த கருடன்.

5 காய்சினப் பறவை யூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார் முகில்போல் (9 2-6)

காய் சினப் பறவை—பகைவர்களிடம் மிகுந்த சீற்றமுடைய கருடன்.

## 1. 19. கொடி

1. ஏறும் இருஞ்சிறைப்புள், அதுவே கொடியா உயர்த்தானே! (8-5-9).

2. வெஞ்சிறைப்புள் ளுயர்த்தார்க்கு (1-4-1).

வெம் சிறை புள்—பறந்து வரும்போதே பகைவர்களை முடித்துக்கொண்டு வரும் கருடன். உயர்த்தார்க்கு—கொடியிலே கொண்டவருக்கு.

3. கொடி மன்னு புள்ளுடையண்ணல் (4-1-9)

4. கருளப்புட்கொடி சக்கரப் படை வான நாட! (5-7-3).
கருளன் — கருடன்

5. நிறை புகழஞ்சிறைப் புள்ளின் கொடியானை (9-4-10)
கொடியான் — கொடியுடையவன்

## 1. 28. தேவிமார்

தேவிமார் இருமருங்கிலும் அமர்ந்து இப்பெருமானது பேரெழிலை அனுபவிப்பர். தேவிமார் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டி, நீளாதேவி

1. பூவினை மேவிய தேவி மணாளனை (திருவி. 89).

பூ—தாமரை. பூவினை—பூவின் மேல்; இவளது திருமேனியின் மென்மை, பரிமளம் குறிப்பு.

2. மைய கண்ணாள் மலர்மேலுறைவாள் உறை மார்பினன் (4-5-2).

இவளது கண்ணழகில் ஆழ்ந்திருப்பவன்.

3. ஒசிந்த ஒண் மலராள் கொழுநன் (6-7-8).

இவளோடு எப்போதும் இணைந்திருப்பதால் துவண்டிருப்பன் இவளுக்கு நாயகன்.

4. மணிமாமை குறைவில்லா மலர்மாதர் உறைமார்பன் (4-8-2).
புகரோடு விளங்குபவள்.

5. பாரணங்காளன் (10-5-2)
பாரணங்கு—பூமிப் பிராட்டி.

6. குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளுந் திருவும் நிழற் போல் வனர் (திருவி. 43).

குழல் கோவலர் மடப்பாவை—அழகிய குழற்கற்றையுடைய வளாய், ஆயர் குலத்தில் அவதரித்த நப்பின்னைப் பிராட்டி.

7. உடனமர் காதல் மகளிர் திருமகள் மண்மகள் ஆயர், மடமகள் (1-9-4).

காதல்: அகலகில்லேன் இறையும் என்றவாறு பெருகும் காதல்.

8. நிறைவினாற் குறைவில்லா நெடும் பணைத்தோள் மடப் பின்னை (4-8-4).

நிறைவு—பெண்மைக்கான பூர்த்தி. குறைவில்லா — அடர்ந் துள்ள. நெடும் பணை தோள்—நீண்டு பணைத்த தோளுடைய மடம்—மடப்பம்.

## 1. 21. பரிஜனங்கள்

பெருமானும் பிராட்டிமாரும் கூடியுள்ள சேர்த்தியில் கைங்கர்யம் செய்வோர் ஆதிசேஷன், கருடன், சேனைத் தலைவர் போல்வார்

1. அயர்வறு மமரர்களதிபதி (1-1-1).

அயர்வு அறும்—பகவானை அனுபவிப்பதில் தடங்கல் இல்லாத. அமரர்—நித்தியசூரிகள். அதிபதி—தலைவன்; இவர்களிலும் மேம்பட்ட தலைவன்

2. அயர்விலமரர்களாதிக் கொழுந்தை (1-7-4).

அயர்வு இல்—பகவத் விஷயத்தில் மறதியில்லாத. ஆதி கொழுந்தை—இவர்களது வாழ்வுக்குக் காரணமாய் இவர்களுள் முக்கியமாக இருப்பவன்.

3. விண்ணோர் பரவ நின்ற நாதனை (திருவி. 79).
விண்ணோர்—நித்தியசூரிகள்.

4. கலக்க மில்லா நல்தவ முனிவர் கரை கண்டோர், துளக்க மில்லா வானவரெல்லாந் தொழுவார்கள் (8-3-10).

கலக்கம் இல்லா—உலகப் பிறவியால் நிகழும் கலக்கம் இல்லாத. நல் தவ முனிவர்—ஸநகாதி முனிவர். கரை கண்டோர்—உலக வாழ்க்கையாகிய கடலைக் கடந்து வந்த முக்தர் (மோக்ஷம் பெற்றவர்). துளக்கம்—சலனம் வானவர்—நித்தியசூரிகள்.

5. பேர் வானவர்கள் பிதற்றும் பெருமையனே (10-4-1).

வானவர்கள்—நித்தியசூரிகள். பேர்—திருநாமங்களை. பிதற்றும்—விருப்பாலே அடைவு கெடக் கூறும். பெருமையன்—பெருமை வாய்ந்தவன்.

## உ. கல்யாண குணங்கள்

பெருமானது குணங்கள் எண்ணிறந்தன. இவற்றுள் சில. இவனது இயல்பை விவரிப்பன; சில அடியார்கள் அனுபவித்து மகிழ்வதற்காவன; பகைவர்களுக்கு அச்சம் விளைவிப்பன சில. இவை மேல் வரம்பில்லாமல மேலும்மேலும் ஓங்கி விளங்கும் என்கிறார் ஆழ்வார். யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ—இவற்றை அனுபவித்து விளக்கும் வாசகங்கள் விவரிக்க இயலாமல் செயலற்று மீண்டன என்கிறது தைத்திரீயம்.

## 2. 1. ஞானம்

இது சங்கல்ப ஞானம் எனப்பெறும். பிரபஞ்சத்தில் எங்கும் நிகழ்வனவற்றை ஒரே காலத்தில் நேரிற் காண்பது போல் அறியும் பேராற்றல் இது.

1. உணர் முழு நலம் (1-1-2).

முழு உணர்வும் முழு நலமுமான ஞான ஆனந்த மயமானவன். ''ய: ஸர்வஜ்ஞ: ஸர்வவித்''.

2. மிக்க ஞான மூர்த்தியாய வேத விளக்கினை (4-7-10).

அளவிட முடியாத ஞான ஸ்வரூபனாய், வேதமாகிய விளக்காலே காணப்படுவோன்.

3. ஆர்ந்த ஞானச் சுடராகி (1-5-10).

பரிபூர்ணமாய், ஞானத்தின் ஒளியுடையவனாய்.

4. செய்ய சூழ் சுடர் ஞானமாய் வெளிப்பட்டிவை படைத்தான் (3-6-1).

செய்ய சூழ் சுடர் ஞானமாய்—செவ்வியதாய், சூழ்லதாய்க் கொண்டு, ஒளிர்கின்ற சங்கல்ப ஞானம் இயல்பாகவே உடையவன். வெளிப்பட்டு—படைப்பதற்கு முற்பட்டு. இவை படைத்தான்—எல்லாவற்றையும் படைத்தான்.

5. வருந்தாத ஞானமாய் வரம்பின்றி முழுதியன்றாய் (3-1-5).

வருந்தாத ஞானமாய்—முயற்சி ஏதுமில்லாமல் இயல்பாகப் பெற்ற ஞானம் வாய்ந்தவனாய். வரம்பு இன்றி—எல்லையில்லாமல். முழுது இயன்றாய்—எல்லாப் பொருள்களிலும் இருப்பவனாய்.

6. மாசூணா ஞானமாய் முழுதுமாய் (3-1-8).

மாசூணா—ஐயந்திரிபுகளாகிய இழுக்கு இல்லாமல். முழுதுமாய்—யாவற்றையும் உனதாக்கிக் கொண்டு.

7. மழுங்காத ஞானமே படையாக (3-1-9).

மழுங்காத—குறைவேயின்றி அடர்ந்துள்ள. படையாக—பரிகரமாக, உதவியாகக் கொண்டு.

## 2. 2. ஆனந்தம்

தைத்திரீய உபநிஷத்தில் பகவான் ஆனந்த மயன் என்று போற்றப்படுகிறான். இவன் கொள்ளும் ஆனந்தம் பரிபூர்ண மானது; இவன் அனுபவிப்பது பேரின்பம்.

1. முட்டில் பல்போகத் தொருதனி நாயகன் (3-10-3).

முட்டு இல்—முடிவே யில்லாத. பல் போகத்து—பலவகையாக இன்பம் வாய்ந்த.

2. வீவில் இன்பம் மிக எல்லை நிகழ்ந்த நம் அச்சுதன் (4-5-3).

வீவு இல் - குறைவே காணாத. இன்பம் மிக—இன்பம் பெருக. எல்லை நிகழ்ந்த—மிகுதியான எல்லையாயிருக்கும்; மிகுந்த என்றவாறு.

3. வானுயர் இன்பம் மன்னி வீற்றிருந்தாய் (8-1-9).

வான்—பரமபதத்தில். உயர் இன்பம்—மேன்மேலும் பெருகும் இன்பத்தை. மன்னி—பெற்று. வீற்றிருந்தாய்—பெருமையுடன் விளங்குகிறாய்.

4. (1) கடிசேர் நாற்றத்துள்ளாலை, (2) இன்பத்துன்பக் கழி நேர்மை, ஒழியா இன்பப் பெருமையோன், (3) உணர்விலும்பர் ஒருவனே (8-8-2).

(1) கடிசேர் நாற்றத்து உள் ஆலை—பரிமளமே அடர்ந்து பரிமள மயமான தேக்கம். ஆலை—மது; "ஸர்வ கந்த: ஸர்வரஸ" என்பது குறிப்பு. (2) இன்பத் துன்பக் கழி நேர்மை—இன்பத்திற்கான துன்பம்: அற்பமாயிருத்தல், நிலையற்றது என்ற காரணங்களால் காணும் குறைவு. இவை கழி நேர்மை ஒழியா—இவை நீங்கி, இன்பம் சிறிதேனும் குறையாதவாறு விளங்குவோன். (3) உணர்வில்—ஞானத்தால். உம்பர் ஒருவன் - மேம்பட்டவன். ஒருவன்—யாவரினும் சிறப்புடையவன்.

## 2. 3. செல்வம்

இவன் யாவர்க்கும் ஈசன்; யாவரையும் தனக்காக்கிக் கொண்டு காக்கும் பேராற்றல் வாய்ந்தவன். ஈசன்: இப்பண்பு ஐச்வர்யம். ஸ்ரீவைகுண்டமும் அண்டங்கள் யாவும இவனது உடைமை. ஸ்ரீவைகுண்டம் நித்யமாயிருப்பது, ஆதலால் நித்ய விபூதி. அண்டங்கள் இவனது லீலைக்காவன; ஆதலால் இவை லீலா விபூதி; இவை இரண்டும் உபய விபூதி எனப்பெறும். விபூதி—செல்வம். இவன் உபய விபூதி நாதன். உபய விபூதியும் இவனுக்கு ஐச்வர்யம், உடைமை.

1. ஈசன் என் கருமாணிக்கம் என் செங்கோலக் கண்ணன், விண்ணோர் நாயகன் (2-7-1).

எனக்கு நாதன், நித்ய சூரிகளுக்கு நாதன்; ஆதலால் உபய விபூதி நாதன்.

2. உயிர்கள் எல்லா உலகு முடையவன் (3-2-11).

எல்லா உலகங்களும் இலற்றில் வாழும் உயிர்களும் உடையவன்.

3. ஓர் ஆயிரமாய் உலகேழ் அளிக்கும், பேர் ஆயிரம் கொண்டதோர் பீடு உடையன் (9-3-1).

பீடு—மேருமை. பேர்கள் ஆயிரங்களாக வாய்ந்தவன். ஒவ்வொரு பேரும் ஆயிரம் வகைகளிலே உயிர்களைக் காக்கும்.

4. அமைவுடை அமரரும் யாவையும் யாவரும் தானாம், அமைவுடை நாரணன் (1-3-3).

அமைவு—இயல்பு, நிறைவு. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவை கை வந்துள்ள பிரமன் முதலோரும், அசேதனங்களும் தானேயாகி விளங்கி. அமைவு உடை நாரணன்—இந்த தேவர்களுக்கு முதல்வனாக இருப்பதால் நாராயணன் என்ற திருநாமமுடையவன்.

5. வீற்றிருந்து ஏழுலகுந் தனிக்கோல் செல்ல (4-5-1).

வீற்றிருந்து—யாவர்க்கும் இறைவன் என்ற மேன்மையோடு விளங்கி ஏழு உலகும் -உலகங்கள் எழிலும் தனிகோல் செல்ல—ஒப்பற்ற தன் ஆணை நடக்குமாறு, அதாவது தனது ஆணைக்குட்பட்டவாறு

6. உண்டுமிழ்ந்தும் கடந்தும் இடந்தும்... கண்டவாற்றால் தனதே உலகென நின்றான் றனை (4-5-10)

பூமியை உண்டும், உமிழ்ந்தும், கடந்து (அளந்தும்), இடந்தும் (வராகமாகி) கண்டவாறறல்—கண்கூடாக. உலகு தானே என நின்றான்—''பதிம் விச்வஸ்ய'' (உலகுத்து நாயகனை) என்றவாறு உலகங்களுக்கு இறைவனாவான்.

## 2. 4. காரணம்

உலகங்களுக்கும் இவற்றில் வாழும் உயிர்களுக்கும் ஸ்ரீமந் நாராயணனே காரணம் ''நான் பலவாகக் கடவேன்'' என்று இவன் சங்கல்பித்து உலகைப் படைத்தான், சேதன அசேதனங்களானான், ''இவற்றுள் புகுந்து இவற்றிற்கு நாம ரூபங்களைச் செய்வேன்'' என்றான். ஆதலால் இவனே மூலகைக் காரணமுமாவான். ஆக சேதன அசேதனங்களைச் சொல்லும் சொற்கள் தன்னளவாகுமாறு இவன் விளங்குகிறான்.

1. சோராத எப்பொருட்கும் ஆதியாம் சோதி (2-1-11).

சோராத—ஒன்றும் சோராதவாறு. ஆதி ஆம் சோதி—காரணமாகி, இதனால் பரஞ்சோதி என்றறியப்படுகிறான்.

2. மூவாத் தனி முதலாய் (2-8-5).

மூவா—மூப்பே இல்லாத. தனிமுதல்—தனக்கு வேறு உதவியில்லாமல், தானே காரணமாகி.

3. எப்பொருட்கும் வேர் முதலாய் வித்தாய்ப் பரந்து தனிநின்ற (2-8-10)

எல்லாவற்றிற்கும் இவன் வேர்—உபகரணங்களாகி, முதலாய்—செய்பவனாய். வித்தாய்—உபாதானமாய், செய்பொருளாய், இவ்வகையில் மூவகைக் காரணங்களுமாகி.

4. பொருளென்றிவ்வுலகம் படைத்தவன் (2-10-11).

பொருள் என்று—அடியார்களைப் பெறுவது தனக்குப் பயன் என்று

5. மண்ணும் நீரும் எரியும் நல் வாயுவும் விண்ணுமாய் விரியும் எம்பிரானையே (1-10-2).

மண், நீர், தீ, காற்று, ஆகாசம்—இவற்றுக்குக் காரணம் இவனே "பலவாகக் கடவேன்" என்று இவன் சங்கல்பித்தவாறு.

6. முனி மாப் பிரம முதல்வித்தாய் உலகம் மூன்றும் முளைப்பித்த (8-10-7).

முனி—மனனஞ் செய்பவன், "நான் பலவாகக் கடவேன்" என்று. மா பிரமம்—ப்ரஹ்மம் என்று யாவராலும் பாராட்டப் பெற்று. முதல் வித்தாய்—முக்கிய காரணமான உபாதானமாகி, செயல் பொருளாகி

7. கொண்ட மூர்த்தியோர் மூவராய்க் குணங்கள் படைத்தளித்துக் கெடுக்கும்—அப், புண்டரீகக் கொப்பூழ்ப் புனற்பள்ளியப்பன் (7-1-11).

குணங்கள் கொண்ட மூர்த்தி மூவராய்; படைத்து—பிரமனுக்கு அந்தர்யாமியாகி உலகைப் படைத்து. அளித்து—தானே விஷ்ணு ரூபமாய்க் காத்து. கெடுக்கும்—சிவனுக்கு அந்தர்யாமியாகி. அ புண்டரீக கொப்பூழ் புனல் பள்ளி அப்பனுக்கே—அனத்த சாயியான ஸ்ரீமந் நாராயணனுக்கே.

## 2. 5. எங்கும் பரந்திருத்தல்

இப்பண்பு வ்யாப்தி எனப் பெறும். "அநந்தம் ப்ரஹ்ம": இவன் எல்லாக் காலத்திலும், எல்லாப் பொருள்களிலும் அடர்ந்

இருக்கிறான். இந்தக் காலத்திலே தான் இருப்பவன், இந்த இடத்திலே தான் இருப்பவன், இந்தப் பொருளாக (ஜீவனாக)த் தான் இருப்பவன்—இம்மூன்றும் இவனுக்கு இல.

1. திடவிசும் பெரிவளி நீர் நிலமிவை மிசைப் படர் பொருள் முழுவதுமாய், —அவையவை தொறும், உடல் மிசை உயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன் (1-1-7).

திட விசும்பு—நிலையான ஆகாசம். எரி—தீ. வளி - காற்று. படர் பொருள் முழுவதுமாய்—இவை ஆதாரமாகப் பரந்துள்ள பொருள்களுக்குச் செயல் பொருளாய் (உபாதானமாய்). அவை அவை தொறும்—அவை எல்லாவற்றிலும். கரந்து எங்கும் பரந்துளன்—யாவரும் அறியாதவாறு மறைந்து எல்லாவற்றுள்ளும் படர்ந்திருக்கிறான். எவ்வாறெனில், உடல் மிசை உயிரென—சரீரத்தை தரித்து இயங்கச் செய்யும் ஆத்மாவைப் போல.

2. (இவன் பரந்துள்ள இடங்கள்):சேண்பால வீடோ உயிரோ மற்றெப் பொருட்கும், எண் பாலும் சோரான் பரந்துளனாம் எங்குமே (2-8 8)

சேண் பால வீடு-உயர்ந்த தான பரம பதம் உயிர்—இதிலுள்ள முக்தாத்மாக்கள் மற்று எப்பொருட்கும்—தேவர், மனிதர் போன்ற ஜீவர்கள், அசேதனங்கள் - இவற்றுள் உறைந்திருக்கிறான் எண பாலும் — எண்ணப்படும் இடங்கள் எல்லாவற்றுள்ளும், அல்லது எட்டு திசைகளிலும், சோரான்—சிறிதளவும் விடமாட்டான்; எங்கும் பரந்துளன்.

3. (பரந்து பெறும் இன்பம்):
பரந்த தண் பரவையுள் நீர்தொறும் பரந்துளன்
பரந்த அண்டமிதென, நில விசும்பொழிவறக்
கரந்த சிலிடந்தொறும் இடந்திகழ் பொருடொறும்
கரந்தெங்கும் பரந்துளன் (1-1-10).

பரந்த அண்டம் இது என—பரந்த அண்டத்தில் அனுபவிக்கும் போகங்களுடன் பரந்த தண் பரவையுள்—பரந்து குளிர்ந்த நீருடைய கடலில் நீர் தொறும்—ஒவ்வொரு நீர்த்திவலையிலும். நிலம் விசும்பு ஒழிவற—இவ்வாறே நிலத்திலும் ஆகாசத்திலும், கரந்த சில் இடந்தொறும் —மிகவும் நுண்ணிய ஆத்மாக்களிலும், கரந்து — காணாத வகையில், எங்கும் — எல்லாவற்றுள்ளும் பரந்துளன்—வியாபித்திருக்கிறான்.

4. (எங்கும் ஞான ஒளியோடு அடர்ந்திருக்கிறான்)

சூழ்ச்சி ஞானச் சுடரொளியாகி—என்றும்
ஏழ்ச்சிக்கேடின்றி எங்கணும் நிறைந்த (3-2-4).

சூழ்ச்சி—எங்கும் சூழ்ந்துள்ள. ஞானசுடராகி—ஞானத்தாலே வந்த புகர் சோதிமயமாகி ஏழ்ச்சி—எழுதல் மலர்தல் கேடு—குறைதல் இன்றி—இல்லாமல், என்றும் எங்கணும—எப்போதும் எல்லா இடங்களிலும், நிறைந்த.

## 2. 6. காப்பு

அகாரத்தின் கருத்து, முக்கியமாக, காப்பவன் என்பது. இவன் ரக்ஷகன்; இத்தன்மை ரக்ஷகத்வம். காப்பு என்பது, அடியார் வேண்டாதவற்றை அகற்றுவதும், விரும்புவனவற்றை அளிப்பதும.

(1) அடியார் வேண்டாதவற்றை இவன் அகற்றும் வகை வருமாறு:

1. வன் சரண் சுரர்க்காய், அசுரர்க்கு வெங்கூற்றமுமாய் (6-3-8).

அமரர்க்குப் பகைவர்களான அசுரர்களை அழித்து, இவர்களுக்குப் புகலாவான் எம்பெருமான். வெம் கூற்றம்—கொடிய யமன்,

2. கூற்றியல் கஞ்சனைக் கொன்று, ஐவர்க்காய்க் கொடுஞ் சேனை தடிந்து (7-6-10).

கூற்று இயல்—யமன் போலே எப்போதும் உயிரைக் கவர்வதுவே குறிப்பாகவுடைய.

3. உட்குடை அசுரர் உயிரெல்லாமுண்ட ஒருவனே! (7-2-3).

உட்கு—மிடுக்கு. உடை—உடைய.

4. உடம்பினாற் குறைவில்லா உயிர் பிரிந்த மலைத் துண்டம், கிடந்தன போல் துணி பலவா அசுரர் குழாம் துணித்துகந்த (4-8-10).

தேவர் வேண்டாதது, அசுரர்களால் நேரும் தீமைகள், உடம்பினால் குறைவு இல்லா—திண்ணிய சரீரமுடைய. பலவா துணி—பலவகையாலும் துணிவுள்ள. அசுரர்கள் உயிர் நீத்துக் கிடந்தது, உயிர் பிரிந்த மலை துண்டம் பல போல—இந்திரனால் வெட்டப்பட்டுத் துண்டங்களாகக் கிடந்த மலைகள் போல்; சிறகு

கொண்டு பறந்து துன்பிழைத்த மலைகளின் சிறகுகளை இந்திரன் வெட்டி வீழ்த்தினான்.

(2) அடியார் விரும்பியவற்றைச் செய்த வகை.

5. கூடி நீரைக் கடைந்தவாறும் (5-10-10)

அமரர்கள் இழந்த செல்வத்தை மீட்டுக் கொடுப்பதற்காக, இவர்களோடும் அசுரர்களோடும் கூடிப் பாற்கடலைக் கடைந்தான் பகவான்.

(3) உயிர்களை உய்விப்பதற்காக அவதாரங்கள்:

6. உயிரளிப்பான் எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்? (திருவி.1)

7. ஞாலத்தூடே நடந்தும் நின்றும் கிடந்திருந்தும், சாலப் பல நாள் உகந்தோறுயிர்கள் காப்பானே! (6-9-3)

உகந்தோறும்—அவதாரத்திற்கான யுகங்களிலே. ஞாலத்தூடே நடந்தும்—பூமியிலே எங்கும் நடந்து சென்றும். நின்றும்—வில்லேந்தி எதிரில் நின்றும் (ராமாவதாரத்தில்) கிடந்தும்—கடற்கரையில் ஒரு பெருங்கடல் போல் சயனித்துக் கொண்டும். இருந்தும்—பிராட்டியோடு இனிதுடன் வீற்றிருந்தும்.

(4) பெரிய பிராட்டியாரின் கடாக்ஷத்தாலே இவன் செய்யும் ரக்ஷணம்:

8. "என் திருமகள்சேர் மார்பனே என்னும்" என்னுடை ஆவியே! என்னும் (7-2-9).

என்னிடம் கருணை கொண்டுள்ள திருமகளின் அருள்நோக்காலே என்னைக் காப்பதால் எனக்கு உயிர் போன்றவன்.

9. என் திருமார்பன் றன்னை (7-6-7).

(5) நூல்கள் வெளியிட்டுக் காப்பாற்றும் வகை:

10. பண்புடை வேதம் பயந்த பரனுக்கு (6-6-5)

11. வேத(ம்) முன் விரித்தான் விரும்பிய கோயில் (2-10-10).

12 நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி (4-8-6).

## 2. 7. ஆண்மை

1. வளவேழ் உலகின் முதலாய வானோ ரிறையை (1-4-1).

வளம் ஏழ் உலகு—வளம் மிக்க ஏழு உலகுகள்.

2. உயிர்கள் எல்லா உலகமுடையவனை (3-2-11).

3. நாயகன் முழுவேழுலகுக்குமாய் (6-4-11).

4 பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே! பரமா! (2-6-10)

பாகின்ற—பரவியுள்ள.

5 பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்கும் நாயகனவனே (4-10-4)

6 மூவராகிய மூர்த்தியை முதல் மூவர்க்கும் முதல்வன்றன்னை (3-6-3).

## 28. இரட்டைக் குறிப்பு

ப்ரளயத்தின்போது இறைவன் சேதன அசேதனங்களைத் தன்னுள் ஒடுக்கி வைத்துக் காக்கின்றான். பின்பு இவற்றைப் படைத்து இவற்றுள் உறைகின்றான். இத்தொடர்பாலேஇவற்றின் இழிவுகள் இவனை அணுகவும் மாட்டா; சூரியனைக் கண்ட இருள்போலே தாமே நீங்கிவிடும் சேதனருக்கான இழிவுகள். துன்பம், பிணி, பசி, தாகம் கர்மம், பிறப்பு, இறப்பு போலவன: அசேதனங்களுக்கான இழிவுகள்: தோன்றுதல், மாறுதல், மறைதல் போல்வன. இத்தகைய இழிவுகளுக்கு எம்பெருமான் எதிர்நிலையாவான். இழிவுகளுக்கான எதிர்நிலையாகும் இந்த குணத்தோடு இணைத்துக் கூறுவது இவனது கல்யாண குணங்கள். இந்த இரட்டை குணத்தாலே இப்பெருமானது மேன்மை விளங்கும். இவை இரண்டும் உபய லிங்கம் எனப்பெறும். லிங்கம்—அடையாளம், குறிப்பு.

கல்யாண குணங்கள் என்பவை மங்களத்தைத் தருவன. பகவானுக்கு அனுகூலமாய் இன்பமே தருவன; அடியார்க்கு ஆனந்தத்தையும் மங்களத்தையும் அளிப்பன. இவனது கல்யாண குணங்களால் இழிவு என்பது இவனிடம் அணுக மாட்டா; ஸர்வேச்வரன் சிறந்த குணங்களுக்கு ஆகரமாக இருப்பவன்.

இவனுக்கே உரியனவான கல்யாண குணங்கள் உபநிஷத்துக்கள் இதிஹாஸங்கள், புராணங்கள், பாஞ்சராத்ர சாஸ்த்ரம் ஸ்ரீ பகவத்கீதை போல்வனவற்றுள் ஆங்காங்கே வெளியாகின்றன இவற்றை ஆசார்யர்கள் ஒன்று சேர்த்து வெளியிட்டுள்ளனர்.

இவற்றுள் முக்கியமானவை ஞானம், பலம், வீர்யம், ஐச்வர்யம், சக்தி, தேஜஸ் என்பன.

அடியார்கள் விஷயமாக வாய்ந்துள்ள குணங்கள் வருவன.

## 2. 9. தாயன்பு

இது வாத்ஸல்யம். அன்றீன்ற கன்றிடம் தாய்ப் பசு காட்டும் பேரன்பு வாத்ஸல்யம். இந்தப் பண்பால் பகவான் அடியார்களது குற்றங் குறைகளைப் புறக்கணித்து, அருளே பொழிகின்றான்.

(1) பொதுவாக:

1. எண்ணிலும் வரும், என் இனி வேண்டுவம்? (1-10 2).

நாம் பகவானது மேன்மையை மனத்துக் கொள்ளாமல், சாதாரணமாக, குடம், பசு என்பது போல் ஈச்வரன் என்று கருதினால், "இவன் நம்மை நினைக்கிறான்" என்று பகவான் நம்மிடம் வருவான். ஆதலால் இவன் நம்மைக் காப்பதற்கு வேறு என்ன வேண்டும்? அன்றி இவன் இருபத்தாறாவது தத்வம். எண்களை எண்ணும்போது இருபத்தாறு என்றால் ஈச்வரன் தன்னையே குறிப்பதாகக் களிப்பான். மாந்தரிடம் இவன் கொள்ளும் அன்பு இத்தகையது.

2. கண்ணாவான் என்றும் மண்ணோர் விண்ணோர்க்கு (1-8-3) கண் ஆவான்—தாய் போல் காப்பவனாவான்.

3. சன்ம சன்மாந்தரங் காத்து அடியார்களைக் கொண்டு போய்த், தன்மை பெறுத்தித் தன தாளிணைக் கீழ்க் கொள்ளும் அப்பனை (3-7-7).

சன்ம சன்மாந்தரம்—சன்ம பரம்பரைகள். காத்து—பிறவி நேரா வண்ணம் காத்து. அடியார்களைக் கொண்டு போய் ஸ்ரீ வைகுண்டத்தில் ஏற்றுக் கொண்டு தன்மை பெறுத்தி—ஸ்வரூபம் பெறுமாறு செய்து.

4. என்னுள் கலந்தவன் (2-5-3).

5 ஆய்கொண்ட சீர் வள்ளல் ஆழிப்பிரான் எனக்கே யுளன் (3-9-9).

ஆய்கொண்ட சீர்—வேதங்களில் ஆராயப் பெற்ற ஆனந்தம் போன்ற குணங்கள் வாய்ந்து பெருமையுடைய எனக்கே உளன்—என்னிடம் அன்பு கொண்டு நலங்கள பொழிகிறான்.

(2) மார்க்கண்டேயனிடம் அன்பு:

6 "மார்க்கண்டேயனுக்கு வாழு நாள், இண்டைச் சடைமுடி ஈசனுடன் கொண்டு உசாச் செல்லக் கொண்டங்குத் தன்னொடுங் கொண்டுடன் சென்றது (7-5-7).

இண்டை சடைமுடி ஈசன்—மாலையும் சடையுமுடைய சிவன். உடன் கொண்டு—மார்க்கண்டேயனைத் தன்னோடு அழைத்துக் கொண்டு. உசா செல்ல—பரமனாகிய நாராயணனொடு உசாவுவதற்காகச் செல்ல. உடன் கொண்டு—தன்னுடன் சேர்த்துக் கொண்டு. சென்றது—பிரியாமலே நடந்து கொண்டது. (நாராயணன்) இவனைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டது.

(3) பிரகலாதனிடம் அன்பு:

7. சீற்றத் தோடருள் பெற்றவன் அடிக்கீழ்ப் புகநின்ற செங்கண் மால் (3-6-6).

சீற்றத்தோடு—இரணியன் விஷயமாகக் கொண்டது. இப் பெருமானது அருளைப் பெற்றவன் பிரகலாதன்.

பிரகலாதன் தனது அடிக்கீழ் ஒதுங்குமாறு நின்றவன் சிங்கப் பிரான். நின்ற—பிரேமத்தால், பகவான் காட்டிய எளிமை.

(4) சிவபெருமானிடம் பேரன்பு:

8. வாள்கொள் நீள் மழுவாளி உன் ஆகத்தான் (9-3-10).

வாள்—ஒளி, மழுவாளி—மழு ஏந்தும் சிவபெருமான். உன் ஆகத்தான்—உனது திருமார்பில் ஓரிடத்தில் உறைபவன்.

9. குமரனார் தாதை துன்பந் துடைத்த கோவிந்தனாரே (10-2-6).

குமாரனார் தாதை—சிவபெருமான். துன்பம்—பிரமன் இட்ட சாபத்தால் கையில் கபாலங் கொண்டு, அது நிரமபுவதற்காக எங்கும் பிச்சை நாடித் திரிநதது. துடைத்த—போக்கிய.

(5) பகைவனிடமும் பிரேமம்:

10. சேட்பால் பழம்பகைவன் சிசுபாலன் திருவடி தாட்பா லடைந்த தன்மை (7-5-3).

சேட்பால்—நெடுங்காலமாகவே. பழம் பகைவன்—பழைமைப் பகையுடையவன். திருவடி—கண்ணபிரான் (கண்ணபிரானது) தாள்பால்—திருவடிகளில்.

## 2. 10. இயல்பில் கலத்தல்

இது சீல குணம், ஸௌசீல்யம் : பெரியவன் தாழ்ந்தோருடன், நீரோடு நீர் கலப்பது போல் இயல்பில் கலப்பது. இராமபிரான் வேடுவனோடும், குரங்கோடும், அரக்கனோடும் இயல்பில் கலந்து ''எழுவரானோம்'' என்றது எடுத்துக்காட்டு.

1. என்னுள் கலந்தவன் (2-5-3).

இதுவே பகவானுக்குத் திருநாமம் போலும்!

2 அந்தாமத் தன்பு செய்து என் ஆவிசேர் அம்மானுக்கு (2-5-1).

அந்தாமம்—பரமபதம்; பரமபதத்திலுள்ள நித்திய சூரிகள் குறிப்பு. இவர்களிடம் கொள்ளும் அன்பை என்னிடம் செய்து.

3. தானும் யானு மெல்லாம் தன்னுள்ளே கலந்தொழிந்தோம் தேனும் பாலும் நெய்யும் கன்னலும் அமுதுமொத்தே (2-3-1).

தானும்—ஸர்வேச்வரனும். இயல்பில் கலந்தோம். எவ்வா றெனில்? தேனோடு தேனும், பாலோடு பாலும், நெய்யோடு நெய்யும், கன்னலோடு கன்னலும் கலப்பது போல. அன்றி எல்லா ரஸங்களும் தோன்றுமாறு கலந்தோம்.

## 2. 11. பெறுதற்கு எளிமை

இது ஸௌலப்யம்; எளிதில் கண்ணுக்கிலக்காவது. இந்திரன் பிரமன், சிவன் இவர்களும் தமது கண்ணால் காணக் கூடாதவன், மாந்தர் தமது ஊனக் கண்ணால் காணுமாறு தோன்றும் நிலை.

1. ஒரு மாணிக் குறளாகி நிமிர்ந்த, அக்கருமாணிக்க மென் கண்ணுள தாகுமே (1-10-1).

2. துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து (3-10-6).

3. எந்தாய்! தண் திருவேங்கடத்துள் நின்றாய் (2-6-9).

யாவரும் எளிதில் கண்டு வணங்குமாறு.

## 2. 12. நன்மனப் பான்மை

தன்னைப் பற்றியவர்களுக்கு எல்லா நன்மையும் உண்டாக வேண்டும் என்ற மனப்பான்மை, ஸௌஹார்தம் எனப்பெறும்

1. தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணி கொள்ள வல்ல, ஆர்ந்த புகழ் அச்சுதனை (3-5-11).

அச்சுதன் : அடியார்களை நழுவ விடாதவன்; இவர்களைக் காப்பதிலிருந்து நழுவாதவன்.

2 இசைவித்து என்னை உன் தாளிணைக் கீழ் இருத்தும் அம்மானே! 5 8-9).

3. அடியானிவனென்று எனக்கு ஆரருள் செய்யும்,நெடியானை... (9-4-10).

## 2. 13. இளகும் மனம்

இளகும் மனமுடைமை மார்தவம் எனப்பெறும். ம்ருது, மார்தவம். அன்பர்களை விட்டுப் பிரிந்து வாழ இயலாமை; இவர்களது துயரத்தைப் பொறுக்க இயலாத திருவுள்ளத்தின் மென்மை.

1. பூந்தண் புனற்பொய்கை யானை இடர் கடிந்த, பூந்தண் துழாய் என் தனி நாயகன் (2-8-2).

பூ தண் புனல்—மலர்கள் அடர்ந்து, குளிர்ந்த நீர் வாய்ந்த.

2. சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியில் வைதிகன் பிள்ளைகளை, உடலொடும் கொண்டு கொடுத்தவனை (3-10-5).

பிறந்த போதே மறைந்து போன பிள்ளைகள் நால்வரையும் கண்ணபிரான் வைதிகனுக்கு மீட்டுக் கொடுத்தது குறிப்பு.

## 2. 14. ஒப்புமை

இது ஸாம்யம் எனப்படும். ஸமம்; ஸமமாகக் கருதிப் பழகுவது ஸாம்யம். அன்பரது பிறவி, குணம், ஒழுக்கம் போன்றவற்றைக் கருதாது, இவர்களைத் தனக்குச் சமமாக நடத்துவது, இந்தக் குணம். ''தம்மையே ஒக்க அருள் செய்வர்'' என்கிறார் திருமங்கையாழ்வார்

1. உன்னதென்ன தாவியும் என்ன துன்ன தாவியும், இன்ன வண்ணமே நின்றாய் (4-3 8).

என் ஆத்ம ஸ்வரூபம் உனக்கு இன்பந் தருமாறும், உன் ஆத்ம ஸ்வரூபம் எனக்கு இன்பம் தருமாறும் நீ என்னுடன் பழகி நின்றாய்.

2. கோயில் கொண்டான் தன் திருக்கடித்தானத்தை கோயில் கொண்டான் அதனோடும் என் நெஞ்சகம் (8-6-5).

திருக்கடித்தானத்தைப் போலே என் நெஞ்சிலும் உறைந்து மகிழ்கின்றான்.

3. திருமாலிருஞ் சோலைமலையே திருப்பாற்கடலே என்தலையே திருமால் வைகுந்தமே திருவேங்கடமே எனதுடலே (10-7-8).

திருமாலிருஞ்சோலை, திருப்பாற் கடல். இந்த இரண்டு திவ்ய தேசங்களிலும் இவன் கொள்ளும் அன்பு என் தலை விஷயமாகக் காட்டப் பெறுகின்றது. எனது உடல்: திருமால் வைகுந்தம், திருவேங்கடம், என் உடல் இவனுக்கு அளிக்கும் இன்பம், ஸ்ரீவைகுண்டம், திருவேங்கடம் இவை அளிப்பன போன்றது.

## 2. 15. இனிமை

தன்னை வணங்கி அனுபவிக்கும் அன்பர்க்கு இவன் இன்பமயமாய் விளங்குகிறான். இது மாதுர்யம் என்பர். மதுரம்—இனிமை. மதுரம்; மாதுர்யம்.

1. அடியேன் மேவி அமர்கின்ற அமுதே! (6-10-7)

மேவி--அணுகி, அமர்கின்ற—எப்போதும் அனுபவிக்குமாறு இனிய.

2. ஆராவமுதாய் அடியேனாவியகமே தித்திப்பாய் (5-8-10).

ஆரா அமுதாய்—எவ்வளவு அனுபவித்தாலும் மேன்மேலும் அனுபவிக்க விரும்புமாறு இன்பமுள்ள. ஆவி அகமே—உனக்குப் பொருளான என் நெஞ்சுக்குள்ளேயும்.

3. கனியைக் கருப்பிணின் சாற்றைக் கட்டியைத் தேனை யமுதை (3-5-6)

கனி—கண்டபோதே நுகர்வது. கரும்பின் இன் சாறு—கோதில்லாத கருப்பஞ்சாறு. கட்டி - இச்சுவையே அடர்ந்த கட்டி. (பல மலர்களிலிருந்து பெறுவதால்) எல்லா ரசங்களும் வாய்ந்தது தேன, அமுது இனிமையே வாய்ந்தது.

4. முன் நல்யாழ் பயில்நூல் நரம்பின் முதிர் சுவையே! (2-3-7).

செவிகளுக்கு விருந்து: முன்...நரம்பின்—அநாதியாகச் சிறந்ததாய் யாழைப் பற்றிய கீத சாஸ்த்ரத்தில் விவரித்த லக்ஷணம் தப்பாதவாறு அமைந்துள்ள நரயபாலே வெளிவரும் இனிமை போலே. முதிர் சுவையே!— சிறந்த சுவை போல் இனிமையளிப்பவனே!

## 2. 16. வீறு

வீறு என்பது தனிப்பட்ட மேன்மை. பிறரது குற்றங்களைக் கண்ணெடுத்துப் பாராமல் அருள் செய்வதே இயல்பாக வுடைய பெருமை இது அடியார்களது துன்பங்களைத் தீர்த்துத் தன்பால் இவர்களைச் சேர்த்துக் கொள்ளும் பரந்த மனப்பான்மையுமாகும். இப்பண்பு காம்பீர்யம். எனப்பெறும், கம்பீரம்—பெருமையால் வரும் மேம்பாடு; இத்தன்மை காம்பீர்யம் ''ஸமுத்ர இவ காம்பீர்யே'' என்று வால்மீகி இராமனைப் பற்றிக் கூறுகிறார்.

1. சேர்ந்தார் தீவினைகட்கு அருநஞ்சைத் திண்மதியை (2-3-6).

(உன்னை)அடைந்தவர்களது பாவங்களுக்கு நஞ்சாகி திண் மதியை—அவர்களுக்கு அருள் செய்வதே திண்ணமாக நினைக்கும் உன்னை. அருள் செய்வதில் திண்மை கம்பீரமான குணம்.

2. என்னுள் புகுந்திருந்து தீதவம் கெடுக்கும் அமுதம் (2-7-3).

தீது—அறிந்து செய்யும் தீவினைகள். அவம்—அறியாமல் செய்த குற்றம். கெடுக்கும் அமுதம்—இவை தாமே கெடுமாறு, அளவு கடந்த இனிமை வாய்ந்தவன். இவ்வாறான இனிமை கம்பீரமான குணம். ''போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்'' இவனது அருளாலே.

## 2. 17. காருண்யம்

பிறரது துன்பங் கண்டு ''ஐயோ!'' என்று இரங்கி, அதைத் தவிர்க்க முற்படுவது கருணையினாலே. பகவான் செய்த அவதாரங்கள் பலவும் இக்கருணையினாலேயே இந்திரனிடம் கருணை கொண்டு அவன் இழந்த உலகங்கள் மூன்றையும் மீட்டுக் கொடுக்க பகவான் தன்னை வாமனனாகக் குறுக்கிக் கொண்டு, நடந்து சென்று, மூவடி மண் இரந்து, பின்பு ஓங்கி எல்லா உலகங்களையும் அளந்தது, இந்தக் கருணையினாலேயே.

1. அமரர்க்கு அமுது ஈந்த ஆயர் கொழுந்தை (1-7-9).

2. தொல்லைலக்கண் மாத்தானைக் கெல்லாம் ஓர் ஐவரையே மாறாகக் காத்தானை (பெ. திரு. 19).

தொல்லைலக் கண் மா தானைக்கு எல்லாம்—பழையதான பூமி நெளியுமாறு அடர்ந்த சேனைகளால் துன்பம் நேரிடா வாறு ஓர் ஐவரை—பாண்டவர்களை. மாறாக—இந்தச் சேனைகளுக்கு

எதிரிகளாகச் செய்து. காத்தானை—கருணை கொண்டு பல வகைகளாலும் காத்தவனை.

3. அடைக்கலத்து ஓங்கு—கமலத்தலர் அயன் சென்னி என்னும், முடைக்கலத்து ஊண் முன் அரனுக்கு நீக்கினை (திரு. வி. 86).

அடைக்கலத்து ஓங்கு—ஸர்வேச்வரனது காப்பிலுற்று கமலத்து அலர் அயன்—கொப்பூழ்த் தாமரையில் வாழும் பிரமனது. சென்னி—தலை. முடை கலத்து ஊண்—நாற்ற மடர்ந்த இந்தக் கபாலத்தில் பிச்சை ஏற்று உண்பதாகிய துன்பத்தை. நீக்கினை—நீக்கிய பகவானான உன்னை.

## 2. 18. வள்ளல் தன்மை

வரையின்றி வழங்குவோன் வள்ளல், உதாரன். இப்பண்பு, ஔதார்யம். ஸர்வேச்வரன் தன்னையும் தன் அன்பர்க்குக், கொடுக்கும் பெரும் பண்புடையவன்.

1. எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-11).

கற்பகம் நாம் விரும்புவனவற்றையே தரும். இவன் தன்னை யும் கொடுப்பவன்; தன் அன்பர்க்கு வசமானவன்.

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-3). ஔதார்யத்தின் எல்லை.

3. கொள்ளக் குறைவிலன், வேண்டிற்றெல்லாம் தரும் கோதில் என் வள்ளல் மணிவண்ணன் (3-9-5).

கொள்ள குறைவிலன்—இவனைக் கவிபாடினால், இவனிட மிருந்து பெறும் நன்மைக்கு ஒரு குறையு மில்லாதவாறு பூர்ணன். வேண்டிற்று எல்லாம் தரும்—நாம் வேண்டுவன எல்லாம் தருவான். கோது இல்—தரம் பார்த்துக் கொடுப்பது, கைம் மாறாகக் கொடுப்பது ஆகிய குற்றமில்லாத. வள்ளல்—பெரிய உதாரன்.

## 2. 19. உரை நயம்

மனங்கவருமாறு இனிமையாகப் பேசுவது உரைநயம். இது சாதுர்யம் என்பது சதுரன் (பேசுவதில்) ஆற்றல் மிக்கவன்; சாதுர்யம்: இப்பண்பு.

1. சொன்னவன் தான் மாவலி! மூவடி தா என்ற கள்வனே! (3-8-9).

"மாவலி! நான் உன்னிடமிருந்து மூவடி மண் கொள்வேன். தருவாய்" என்று இனிய மதலைப் பேச்சாலே மாவலியைத் தன் வசமாக்கிக் கொண்டவனே! வேந்தனிடம் யாசகம் செய்யும் போது பேசும் தரமன்று, இது; எனினும் இனிமையால் மனத்தைக் கவர்த்தது.

2. பழுத்த நல்ல முதினின் சாற்று வெள்ளம் பாவியேன் மனமகந்தொறும் உள்புக்கு அழுத்த நின் செங்கனி லாயின் கள்வப் பணிமொழி (10-3-4).

கண்ணபிரானது பேச்சினிமையை ஓர் ஆய்ச்சி நிலையில் ஆழ்வார் விவரிக்கிறார். பழுத்த—பக்குவமான. அமுதின்—அமுத மயமான இன்—இனிமையான. சாற்று வெள்ளம்—இனிய சுவையின் பெருக்கு. பணிமொழி—உரைத்த அமுதமொழி.

## 2. 20. வீரியம்

உலகங்களுக்கெல்லாம் உபாதான காரணமாகி, யாவற்றையும் தன்னுள் வைத்துக் காத்து வெளியிடுவது வீரியம் என்ற பண்பு. இவ்வாறு உலகங்களை தரித்துப் பின் வெளியிடுவதால் எம்பெருமானுக்கு யாதோர் ஆயாசமும் மில்லை.

1. நம்பனை ஞாலம் படைத்தவனைத் திருமார்பனை (3-7-8).

நம்பனை - நமக்குத் தஞ்சமாக நம்பப்படுவோனை.

2. முன்னிய மூவுலகு மவையாய் அவற்றைப் படைத்து (7-8-8).

முன்னிய — தோன்றித் தோன்றி அழிந்து பழையதாகப் போருகிற. மூவுலகு அவையாய்—மூன்று உலகங்களுந் தனக்கே யாக்கி.

3. மண் கொள் ஞாலத் துயிர்க்கெல்லாம் அருள் செய்யும் வானவரீசனை (3-6-11).

மண் கொள் ஞாலம்—மண்ணே முக்கியமான பொருளாக அமைந்த உலகம்.

4. கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்றன்னை (4-5-10).

தன்னுடைய லீலைகளாலே, தானே இவ்வுலகுக்கு அதிபதி என்று விளங்குவோனை.

## 2. 21. சக்தி

பிறர்க்குத் தலைவனாய் அடக்கியாளும் ஆற்றல் சக்தி என்பது. பிறரால் செய்ய இயலாதவற்றைச் செய்யும் பேராற்றலு மாம். இது அகடித-கடநா-ஸாமர்த்யம் எனப்பெறும்.

1. கருத்தில் தேவு மெல்லாப் பொருளும் வருத்தித்த மாயப் பிரானை (2-2-8).

கருத்தில்—தன் சங்கல்பத்தாலே, தேவும் எல்லாப் பொருளும்—தேவர் முதல் புல் வரையில் யாவரையும் யாவற்றையும். வருத்தித்த—வர்த்தித்த, உண்டாக்கிய. மாயப் பிரான்—வியக்கத்தக்க பேராற்றல் வாய்ந்தவன்.

2. ...தன் உந்தியுள்ளே, வாய்த்த திசைமுகன் இந்திரன் வானவர் ஆக்கினான் தெய்வ உலகுகளே (2-2-9).

தனது திருநாபிக் கமலத்திலே தோன்றிய நான்முகன், பின்னும் இந்திரன், தேவர், தேவலோகங்கள் இவற்றை உண்டாக்கினான்.

3. யவரும் யாவையும் எல்லாப் பொருளும் கவர்வின்றித் தன்னுள் ஒடுங்க நின்ற, பவர் கொள் ஞானவெள்ளச் சுடர் மூர்த்தி (2-2-6).

## 2. 22. தேசு

தேசு—தேஜஸ்; இது வீர்யம், பலம் ஆகும். இவனைக் காணும் போதே எதிரிகள் நடுநடுங்கிப் பிணமாகும நிலை.

1. குழாங்கொள் பேரரக்கன் குலம் வீய முனிந்தவனை. (2-3-11)

குழாம்கொள்—சுற்றத்தாரும் தன்னுடையோருமாக. வீய—அழியுமாறு. முனிந்தவனை—சீறியவனை; சீற்றத்தாலே பாதி உயிர் போயிற்று. ''இவன் ஜிதக்ரோத:''—கோபமே யில்லாதவன். ''சிறிதே முனிந்த திருமார்பன்'' எதிரிகளைக் கண்டு சிறிதளவே கோபங்கொண்டான.

2. அங்கப் பொழுதே அவன் வீயத்தோன்றிய என் சிங்கப்பிரான் (2-8-9).

அங்கு—இரணியன் சுட்டிய இடத்திலேயே. வீய தோன்றிய—தோன்றிய போதே இரணியன் வலிமை முற்றும இழந்து வாட்டிய கோரைபோலானான; பின்பு வகிர்வது எளிதாயிற்று.

3. ஆளியைக் காண் பரியாய் அரிகாண் நரியாய் அரக்கர் ஊளையிட்டு அன்று இலங்கை கடந்து பிலம்புக் கொளிப்ப (7-6-8).

இராவணனுக்குமுன் இலங்கையில் வாழ்ந்து வந்த அரக்கரின் கதி. ஆளியை காண் பரியாய்—ஆளி என்ற கொடிய விலங்கைக் கண்டு ஒடுங்கும் குதிரைபோல், பரி—குதிரை. அரி காண் நரி—சிங்கத்தைக் காணும் நரிபோல். பிலம்—பாதாளம்.

## 2. 23. செயல் உறுதிப்பாடு

செய்யும் செயலில் ஊன்றியிருத்தல் ஸ்திரமாக இருத்தல் என்பர்; இப்பண்பு ஸ்தைர்யம். அடியார்களைக் காப்பதில் ஊன்றியிருப்பவன், இறைவன்; ஆதலால் அச்யுதன் எனப் பெறுகிறான்.

1. பகலிரா என்பதுவும் பரவியாது எம்மை, இகல் செய்து இருபொழுதும் ஆள்வர் (பெ. திரு. 81)

பகல்—என்னைக் காப்பதற்குத் தகுதியான காலம். இரா—தகுதியில்லாமை. என்னைக் காப்பதற்கு என்னிடம் தகுதி, தகுதியின்மை இவற்றைப் பாராமல், ஆராயாமல் இகல் செய்து—தீயனவற்றை அகற்றப் பெருமுயற்சி செய்து. ஆள்வர்—இவ்வகையிலே தமக் காக்கிக் கொள்வர்.

2. மறப்பற என்னுள்ளே மன்னினான் றன்னை (1-10-10).

மறப்பு என்பது நான் கொள்ளாதவாறு என்னுள்ளே இருந்து காப்பாற்றுகின்ற. அன்றி, என்னைப் பற்றித் தனக்கு மறப்பு நேராமைக்காக என்னுள்ளே இருப்பவன்.

3. இன்றிப் போக இருவினையுங் கெடுத்து ஒன்றி யாக்கை புகாமை உய்யக்கொள்வான், நின்ற வேங்கடம்... (9-3-8).

இன்றி போக—முற்றிலும் நீங்குமாறு (இருவினைகள்). இதன் விளைவு, யாக்கை ஒன்றி புகாமை—பிறவியில்லாமல். உய்யக் கொள்வான்—உய்விப்பதற்கென்றே.

## 2. 24. மனத் திண்மை

திண்ணிய மனமுடையவன் தீரன்; இப்பண்பு தைர்யம். அடியார்களைக் காப்பதே மனத்திற் கொண்டு ஈச்வரன் அருள் புரிவான்; இவ்வாறு அருள்புரிவதே இவனது மனத்தில் திண்மையுறும்.

1. அல்லு(ம்) நன்பகலும் இடைவீடின்றி நல்கி என்னை விடான் நம்பி நம்பியே (1-10-8).

இவன் என்னிடம் இடையறாமல் நட்பைச் செய்து, என்னை விடுகிறதில்லை.

2. இருப்பேன் என்று என்நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-6).

3 திண்ணமென் மனத்துப்புகுந்தான் செறிந்துஇன்றே (10-8-8).

செறிந்து புகுந்தான் – பிரேமம் அடர்த்து, இதன் விளைவாகப் புகுந்தான். திண்ணம் – நிச்சயம்; இது நிகழுமோ என்று நினைக்க வேண்டா.

4. வந்தருளி என் நெஞ்சிங் கொண்ட வானவர் கொழுந்தே! (5-7-7).

அருள் செய்வதில் ஊன்றியிருந்தமை குறிப்பு.

எதிரிகள் விஷயமான குணங்கள் இரண்டு வருமாறு:

## 2. 25. பராக்ரமம்

பரன் – மாற்றான். ஆக்ரமித்தல்—வலிந்து கவர்தல் காணும் போதே பகைவர் குலையும்படி வாய்ந்த குணம் இது.

1. மாசின மாலி மாலிமா னென்று, அங்கவர் படக் கனன்று முன் நின்ற, காய்சின வேந்தே! (9-2-6).

மா சினம்—கொடிய சினமுடைய மாலி; ஓர் அரக்கன்; மாலி மான்—மகானான சுமாலி; ஓர் அரக்கன்; பேராற்றலால் மேன்மை. பட—அழியுமாறு. கனன்று—பெரிதும் சீற்றங்கொண்டு. இவர்கள் இராவணனுக்கு முன்னால் இலங்கையில் வாழ்ந்தவர்கள்.

2. பெயர்களாயிரமுடைய வல்லரக்கர் புக்கழுந்தத் தயரதன் பெற்ற மரதக மணித் தடத்தினையே (10-1-8).

இராமபிரான் நீல மணிபோல் நிறமுடைய தடாகம் போன்றவன். இத்தடாகத்தில் ஆழ்ந்து உயிர் நீத்தவர்: பெயர்கள்

ஆயிரம் உடைய—செய்த கொடுமைகளாலே யஜ்ஞ சத்ரு, ப்ரஹ்ம சத்ரு போன்ற பேர்கள் கொண்ட அரக்கர் பலர்.

3. திரிபுரம் செற்றவனும் மகனும் பின்னும் அங்கியும் போர் தொலையப், பொரு சிறைப் புள்ளைக் கடாவிய மாயனை (3-10-4)

திரிபுரம் செற்றவன்—சிவபிரான். மகன்—முருகன். அங்கி—நாற்பத்தொன்பது அக்நிகள். பொரு சிறை புள்—கருடன். கடாவிய—கருடன் மேலேறி நடத்திய.

## 2. 26. போர்த் திறன்

போரில் ஆற்றல் மிக்கவன் சூரன்; இவனது பண்பு சௌர்யம் அடியார்களது பகைவர்களை எளிதில் அழிக்கும் பேராற்றல் வாய்ந்தவன் எம்பெருமான்.

1. செய்குந் தாவருந் தீமை உன் அடியார்க்குத் தீர்த்து அசுரர்க்குத் தீமைகள் செய்குந்தா! (2-6-1).

செய்கும்—செய்யப்பட்ட. தா அரும் தீமை—கடக்க அரியன வான தீமைகள்; மாற்றில்லாத கொடுமைகள் (அசுரர்கள் செய்வன). செய்—செய்கின்ற குந்தா! குந்தன் என்பது பகவானது திருநாமங்களுள் ஒன்று.

2. வாண னாயிரம் தோள் துணித்ததும் (6-4-8).

3 அப்பன், நீறுபட இலங்கை செற்ற நேரே (7-4-7).

நீறுபட—(படைகள்) நீறாகுமாறு.

4. நிகர்ச் செம்பங்கி எரிவிழிகள் நீண்ட அசுரர் உயிரெல்லாம், தகர்த்துண் டுழலும் புட்பாகன் (8-10-6).

அசுரர்களது பயங்கரமான தோற்றம்: நிகர்—ஒளியுள்ள. செம் பங்கி—செம்மயிர். எரி விழிகள்—தழற்கற்றை போன்ற விழிகள். நீண்ட—பெரிய வடிவுடைய, இவர்களைத் தகர்த்தவன் புள் பாகன்—பகவான், கருடனை ஊர்தியாகக் கொண்டவன்.

5. மிகுந் தானவன் மரர்பகலம் இருகூறா, நகந்தாய் நரசிங்க மாய உருவே (9-4-7).

மிகும் தானவன்—பகைமைக்கு எல்லையில்லாத இரணியன். மார்பு அகலம்—அகன்ற மார்பை, நகந்தாய்—நகத்தாய், நகத்தையுடையவனே.

## 2. 27. மற்றைய பண்புகள்

ஸர்வேச்வரனது குணங்களுள் இரண்டு சிறப்புடையனவாக உபநிஷத்துக்கள் புகழ்கின்றன: ஸத்ய காமத்வம், ஸத்ய ஸங்கல்பத்வம். இவனது விருப்பங்கள் யாவும் அடியார்களைப் பற்றியே; இந்த விருப்பங்கள் யாவும் எப்போதும் இடையறாமல் நிகழ்வன, இவன் ஸத்ய ஸங்கல்பன்: அடியார்களைக் காப்பதன் பொருட்டு இவன் கொள்ளும் முயற்சிகள்—அவதாரம்செய்வது போல்வன—அமோகமாக நிகழ்வன.

1. முட்டில் பல் போகத்து ஒரு தனி நாயகன் (3-10-5).

மூட்டு இல்—தடங்கல் இல்லாமல். பல் போகம்—பலவகைப் பட்ட இன்ப அனுபவங்தள், அடியாருடன் அனுபவிக்கும் இன்பம்.

2. மேவிய உலகம் மூன்றவை ஆட்சி வேண்டு வேண்டுருவம் நின்னுருவம் (8-1-1).

மேவிய உலகம் மூன்று அவை ஆட்சி—தனது ஆணைக்குட்பட்ட மூன்று உலகங்களையும் ஆள்வது. வேண்டு வேண்டு உருவம்—காப்பதற்காகத் தான் ஏற்றுக்கொள்ள விரும்பும் உருவங்கள்.

அடியார்களைப் பெறுவதற்குத் தான் செய்யும் முயற்சிகள் பலித்தனவெனில், இவன் மகிழும் நிலை க்ருதீ என்பது; தான் க்ருத க்ருத்யனானமையால் மகிழ்கிறான். விபீஷணாழ்வானுக்கு முடிசூட்டியபிறகு இராமன் தான் க்ருத க்ருத்யன் என்று கருதினான்.

3. இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் (10-8-9).

இவன் கொண்ட முயற்சிகளின் பயன் இது

அன்றியும், சிறிதளவு நலம் கண்டாலும் இதனைப் பெரிதும் பாராட்டும் பெருமனமுடையவன் ஸர்வேச்வரன்; இவன் க்ருதஜ்ஞன், செய்ந்நன்றி யறிந்தவன்.

4. நாம் பெருமானைச் சிக்கெனப் பிடித்ததாகவும், இனி நம்மை விட்டு இவன் அகலமாட்டான் என்று ஆழ்வார் சொல்லியதை பகவான் கேட்டு, நன்றியைக் காட்டிய வகை.

எங்கும் பக்க(ம்) நோக்கறியான் என் செந்தாமரைக் கண்ணனே (2-6-2).

5. கேசவன் தமர் கீழ் மேல் எமரேழ் எழுபிறப்பும் மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா! (2-7-1)

## 3. வியூகம்

வியூகம் என்பது வகுப்பு. உயிர்களைக் காப்பாற்றுவதற்காக, ஸ்ரீமந்நாராயணன்—பரமபத வாஸுதேவன் மூன்று வகைத் திருமேனிகளோடு விளங்குகிறான்—ஸங்கர்ஷணன், ப்ரத்யும்நன், அநிருத்தன் என்று. ப்ரளய காலத்தில் மஹார்ணவத்தில் (எங்கும் பரந்த பெருங்கடலில்) துயிலும் நிலையைத்தான் ஆழ்வார் விளக்கியிருக்கிறார். இவ்வாறு துயில்வது யோக நித்திரை; உயிர்களைக் காக்கும் வகையை ஆய்ந்து கொண்டிருக்கும் நிலை. பிரமன், சிவன் போன்ற தெய்வங்கள் பரத்வ நிலையில் இவர்களைக் காண இயலாது; இவர்களுக்குக் காட்சி அளிப்பதற்கே வியூக நிலை.

1. உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை (5-4-11).

2. பையரவினணைப் பள்ளியினானுக்கு (6-6-7).

பை அரவு—படங்களுடைய ஆதிசேஷன்.

3. படவரவினணைக் கிடந்த பரஞ்சுடர் (3-6-10).

4. வெள்ளத் தடங்கடலுள் விட நாகணை மேல் மருவி உள்ளப் பல் யோகு செய்தி (7-8-4).

யோகு செய்தி – யோகஞ் செய்கிறாய்.

5. ஆலி னீளிலை ஏழுலகுண்டு, அன்று நீ கிடந்தாய் (6-2-4).

ஆலின் நீள் இலை—முகிழ் விரிந்து நீளுபளவான ஆலிலை, சிறிய தளிர்.

6 ஞாலம் போனகம் பற்றி, ஓர் முற்றா உருவாகி ஆலம் பேரிலை அன்னவசஞ் செய்யுமம் மானே! (8-3-4).

பேரிலை—சிறு தளிர்.

7. நச்சுவினைக் கவர்தலை அரவி னமளியேறி
எறிகடல் நடுவுள் அறிதுயி லமர்ந்து
சிவனய னிந்திரன் இவர்முத லனைத்தோர்
தெய்வக் குழாங்கள் கைதொழக் கிடந்த
தாமரை யுந்தித் தனிப்பெரு நாயக! (திருவா. 1)

நச்சுவினை—எதிரிகளை முடிக்கும் நச்சுத் தொழில், கவர்தலை - கவிந்த படங்கள், அமளி—ஆதிசேஷனாகிய படுக்கை.

8. ...இரும் பொருட்
கெல்லாம் அரும்பெறல் தனிவித்து ஒருதா
னாகித் தெய்வ நான்முகக் கொழுமுளை
யீன்று—முக் கணீசனொடு தேவுபல நுதலி
மூவுலகும் விளைத்த உந்தி
மாயக் கடவுள் மாமுத லடியே (திருவா. 8).

இரும்பொருட்கு எல்லாம்—எண்ணிறந்த ஆத்மாக்களுக்கு. அரும்பெறல்—அரிய பொருளாய் தனிவித்து—உபாதான காரணமாய். தெய்வ நான்முகக் கொழுமுளை—உலகம் மலர்வதற்குக் காரணமான முளைபோலே தெய்வத் தன்மை வாய்ந்த நான்முகனைப் படைத்து. முக்கண் ஈசனொடு தேவு பல நுதலி—ருத்ரன் முதலான தேவர்களை சங்கல்பத்தாலே பிறப்பித்து.

9. நிலம்நீர் தீகால் சுடரிரு விசும்பும்
மலர்சுடர் பிறவும் சிறிதுடன் மயங்க
ஒருபொருள் புறப்பாடின்றி முழுவதும்
அகப்படக் கரந்து—ஓராலிலைச் சேர்ந்த—எம்
பெருமா மாயனை ...( திருவா. 7).

நிலம், நீர் தீ. காய், சுடர் இரு விசும்பு—ஐந்து பூதங்கள். சுடர் இருவிசும்பு—மற்றைய பூதங்களைக் காட்டிலும் சிறிது காலம் அதிகமாக இருப்பதால் வந்த புகர். மலர் சுடர்—சந்த்ரன் சூர்யன் போன்று ஒளி விடுவன. பிறவும்—தேவர் மனிதர் விலங்குகள் போல்வன. புறப்பாடு இன்றி—வெளி வராமல். கரந்து—வயிற்றுள் வைத்து ஒளித்து

10. அரவமேறி அலைகடலமரும் துயில் கொண்ட அண்ணலை (3-6-3).

11 உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை (5-4-11).

## 4. அந்தர்யாமி நிலை

ஸர்வேச்வரன் சேதன அசேதனங்குள்ளே உறைந்து இவற்றை இயங்கச் செய்கிறான். ஆதலால் இவன் அந்தர்யாமி. இவன் ஜீவர்களது இதயத்திலே உறைந்து, இவர்களால் தியானஞ் செய்யப் பெற்று இவர்களுக்கு எல்லா வகையிலும் நலன்கள் செய்து காப்பாற்றுகிறான் பிரமன், சிவன் முதலான தேவர் களுக்கும், மற்ற ஜீவர்களுக்கும், பஞ்ச பூதங்களுக்கும், காலத் திற்கும் இவன் அந்தர்யாமி.

### 4. 1. ஜீவர்களுக்கு

1. மயர்வற என் மனத்தே மன்னினான் றன்னை (1-7 4).
மயர்வு—அறிவின்மை, ஐயம், திரிபு அற—நீங்குமாறு.

2. மாயப்பிரான் என வல்வினை மாய்ந்தற நேயத்தினால் நெஞ்சம் நாடுகுடி கொண்டான் (8-6-4).

நேயத்தினால்—என்னிடம் கொள்ளும் பிரேமத்தாலே. நெஞ்சம் நாடு—எனது மனம் தனக்குப் பரமபதம் போலே இட முடைத்தானபடி

3. உளரெம் மொருவர் அவர் வந்து என் உள்ளத்துள்ளே உறைகின்றார் (8-8-10).

உளர் எம் ஒருவர்—குணங்கள், செல்வம் போன்றவற்றால் பரிபூர்ணராய், உறைகின்றார்—நித்தியமாக வசிக்கிறார்,

4. எனக்கே ஆட்செய் எக்காலத்தும் என்று என் மனக்கே வந்து, இடைவீடின்றி மன்னி (2 9-4).

''எனக்கே எக்காலத்திலும் நீ ஆட்செய்வாய்'' என்று மனக்கே வந்து—மனத்துள் புகுந்து. மன்னி—அகலாமல் தோய்ந்து.

### 4. 2. தேவர்களுக்கு

1. சீரார் சுடர்கள் இரண்டாய்ச் சிவனாய் அயனானாய் (6-9-1).
அயன்—பிரமன், சுடர்கள் இரண்டு—சூரியனும் சந்திரனும். இவர்களுக்கு ஸர்வேச்வரன் அந்தர்யாமி.

2. புணர்க்கு மயனாம் அழிக்கு மரனாம் (3-8-3).

புணர்க்கும்—படைப்பிற்குக் காரணமாகும். அயன்—பிரமன், பிரமன், சிவன் இவர்களுக்கு அந்தர்யாமியாகி ஈச்வரன் படைப் பதும் அழிப்பதும் செய்கிறான்.

3. அங்குயர் முக்கட்பிரான் பிரம பெருமானவன் நீ, வெங்கதிர் வச்சிரக்கை இந்திரன் முதலாத் தெய்வம் நீ (7-6-4).

வெம் கதிர்— வெம்மை மிக்குச் சுடர் அடர்ந்த, வச்சிரம்— வச்சிராயுதம்.

## 4. 3. காலத்திற்கு

1. வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாய் (3-1-5).

2. எத்தனையோ ருகமும் அவையாய் அவற்றுளியலும், ஒத்த ஒண்பல் பொருள்கள் உலப்பில்லனவாய் வியவாய் (7-8-3).

எத்தனை ஓர் உகமும்—க்ருதயுகம் போல்வனவற்றிற்கு நிர்வாஹகனாய். அவற்றுள் இயலும்—இந்த யுகங்களில் விளங்கு கிற. ஒத்த ஒண்பொருள்கள்—ஒரே பண்புகளுடைய ஆத்மாக்கள் உலப்பு இல்லனவாய்—அழிவில்லாதனவாய். வியவாய்—வேறு பட்டனவாய்; சரீரத்தாலே தேவர், மனிதர் என்றவாறு வேறு பட்டவையாய். ஆத்மாவால் ஒன்றுபட்டும் சரீரங்களாலே வேறு பட்டும் விளங்குவது நோக்கு.

3. இறந்ததும் நீயே எதிர்ந்ததும் நீயே நிகழ்வதோ நீ இன்னே யானால் (8-1-7)

இறந்தது—இறந்த காலம் இன்னே ஆனால்—இவ்வாறான பின்பு.

## 4. 4. பூதங்களுக்கு

1. நீராய் நிலனாய்த் தீயாய்க் காலாய் நெடு வானாய்ச், சீரார் சுடர்கள் இரண்டாய் (6 9-1).

2. திரியுங் காற்றோ டகல் விசும்பு திணிந்த மண் கிடந்த கடல், எரியுந் தீயோ டிரு சுடர் தெய்வம் (3 6-5).

திரியும்—பரவும். அகல் விசும்பு—பரந்த ஆகாசம். திணிந்த மண்—திடமான பூமி. எரியும் தீ—மேலே சுடர் எழுகின்ற தழல். இரு சுடர்—சந்திரன், சூரியன், தெய்வம்—இவற்றிற்கு அந்தர்யாமி.

3. தீயென்கோ? வாயு வென்கோ? நிகழும் ஆகாச மென்கோ? நீள் சுடர் இரண்டு மென்கோ? (3-4-1)

# 5. ஸர்வம் விஷ்ணுமயம் ஜகத்

உபநிஷத்துக்கள் வெளியிட்டுள்ளது: "ஸோSகாமயத பஹுஸ்யாம்"—நான் பலவாகக் கடவேன் என்று பகவான் சங்கல்பித்துக் கொண்டான்—என்பது. இவன் சேதன அசேதனங்களாகி இவற்றுள் உறைந்து. இவற்றை இயங்கச் செய்கிறான். இவனன்றி ஓரணுவும் அசையாது. சேதனர்களது நிலை, முயற்சிகள் போல்வனவும், அசேதனங்களுடைய நிலை, பரிணாமங்கள் போல்வனவும் இவனையே ஆதாரமாக உள்ளன. இக்கருத்துக்கள் சில பாசுரங்களில் விளங்குகின்றன; இவற்றை ஆசாரியர்கள் தெளிவாக விளக்கியிருக்கின்றனர்.

எம்பெருமானைப் பற்றி விவரிக்கும் போது விவரிக்கும் சொல் (அல்லது சொற்கள்) வேறுபட்டு அதே வேற்றுமைச் சொல்லாக அமைந்து, எம்பெருமானோடுள்ள தொடர்பைக் காட்டும். இது ஸயாநாதிகரண்யம் எனப்பெறும். இவ்வாறு விளக்கம் பெறுவது கருத்திற்கேற்பப் பலவகைப்படும்.

## 5. 1. தேறும் விவரங்கள்

1. நாம் அவன் இவன் உவன், அவள், இவள், உவள், எவள்... ஆமவையாய் (1-1-4)

அவன்-தொலைவில் இருப்பவன். இவன்—அருகில் இருப்பவன். உவன்—அருகிலும் இல்லாமல், தொலைவிலும் இல்லாமல் நடுவில் இருப்பவன் அவள், இவள், உவள், எவள்—இவ்வாறு விவரிக்கப் பெறும் பெண்பாலர். இவர்கள் எம்பெருமானுக்குச் சரீரமாவர். எம்பெருமான் இவர்களுக்கு அந்தர்யாமி. உடலில் ஆத்மா அமைந்துள்ளதுபோல் எம்பெருமான் இவர்களுக்கு ஆதாரமாக விளங்குகிறான். சரீரம், ஆத்மா என்ற தொடர்புபோல் விளங்குவது குறிப்பு.

2. முனியே! நான்முகனே! முக்கண்ணப்பா! (10-10-1).

முனியே!—அடியாரைக் காப்பதை மனனஞ் செய்து கொண்டிருக்கும் நாராயணனே! நான்முகனே!—நான்முகனுக்கு அந்தர்யாமியாகிப் படைப்புத் தொழில் செய்பவனே! முக்கண் அப்பா!—சிவனுக்குஅந்தர்யாமியாகி அழிக்குந் தொழில் கொண்டவனே! தேவர்களுக்கு அந்தர்யாமி, ஸர்வேச்வரன்

3 அவாவறச் சூழ் அரியை, அயனை, அரனை அலற்றி (10-10-11).

அவா அற சூழ் அரியை—என்னுடைய பிரேமம் பலன்பெறு மாறு என்னுடன் கலக்கும் நாராயணனை. அலற்றி—கூவி யழைத்து. அயன், அரன் இவர்கள் எம்பெருமானது ஆணைக்குட் பட்டவர்கள்.

4. ஆழாத பாரு(ம்) நீ, வானு(ம்) நீ, காலு(ம்) நீ, தீயு(ம்) நீ நீரும் நீயாய்—நின்ற நீ (பெ. திரு. 11).

ஆழாத—நீரில் அழுந்தாத. கால்—காற்று. பஞ்ச பூதங்கள் இறைவனது ஆணைக் குட்பட்டவை.

5. செய்ய சூழ் சுடர் ஞானமாய் வெளிப்பட்டிவை படைத்தான் (3-6-1).

செய்ய—செவ்வியதாய். சூழ்—படைத்த பொருள்களைச் சூழ்வதாய். சுடர்—விளங்குகிற. ஞானமாய்—சங்கல்ப ரூப ஞான மாய். ஞானம் என்ற குணத்தைக் கொண்டு, இந்த குணத்தை யுடையவன் ஈச்வரன் என்று விளக்குவது.

6. துயரமேதரு துன்ப இன்ப வினைகளாய் (3-6-8).

துயரமே தரு—பரிதாபமே விளைவிக்கும் துன்பம், இன்பம் இவற்றிற்குக் காரணமான. புண்ணிய பாப ரூபமான தர்மங் களுக்கு ஈச்வரன் நிர்வாஹகன் (செய்விப்பவன்). செயல், செய்விப் பவன் என்ற தொடர்பு.

7. மூவராகிய மூர்த்தியை (3-6-2).

மூவராகிய—தனக்குத் தானே காரணமாகி, தன்னோடு கூடிய மற்ற இருவர்க்கும் காரணமானவன் எம்பெருமான்.

8. அம்மானுக்கு, செந்தாமரைத் தடங்கண், செங்கனிவாய் செங் கமலம், செந்தாமரை அடிக்கள், செம்பொன் திருவுடம்பே (2-5-1).

கண்: செந்தாமரைத் தடம்: மலர்ந்த தாமரை அடர்ந்த தடாகம் போன்றது. சிவந்து கனிந்த வாய் செங்கமலம் போல. திருவடிகள் செந்தாமரை போன்வன. திருவுடம்பு பொன்போல் புகர்வாய்ந்தது. இங்கு உபமானத்தைக் கொண்டு உபமேயம் விவரம் பெறுகின்றது.

9. தனியன் பிறப்பிலி தன்னைத் தடங்கல் சேர்ந்த பிரானை (3-5-6)

பெருமான் அவதாரஞ் செய்தும் நாலு பேரைப் பெறாமை யாலே, தான் ஒருவனாகவே திருப்பாற்கடல் மீண்டான், மறுபடி யும் அவதாரஞ் செய்வதற்காக தடங்கடல் சேர்ந்தது, அவதாரம் செய்வது இவற்றுள் ஒன்று காரணம், மற்றது காரியம்,

10: நின்றனர் இருந்தனர் கிடந்தனர் திரிந்தனர்
நின்றிலர் இருந்திலர் கிடந்திலர் திரிந்திலர்
என்றுமோர் இயல்வினர் (1-1-6).

ஜீவர்கள் கொள்ளும் முயற்சிகள் நிற்றல், இருத்தல், கிடத்தல் திரிதல். நில்லாமை, இராமை. கிடவாமை, திரியாமை இவையும் இவர்களுக்குரியன. இவைகளுக்கெல்லாம் ஆதாரமாகவுள்ள ஜீவர் கள் பகவானுக்கு ப்ரகாரமாவர். செயலைக் குறிப்பிட்டு, இச் செயலை உடையவர் பகவானுக்கு அதீநம் என்பதால் ஸமா நாதிகரண்யம்.

## 5. 2. யாவும் ஸர்வேச்வரன்

உலகங்கள், இவற்றுள் காண்பன, இவ்வாறு காண்பன ஒன்றுக்கொன்று எதிர்நிலையாக அமைவது, பண்புகள், செயல் கள், இவற்றின் பயன்கள் யாவும் ஸர்வேச்வரனாலே இதனால் இவன் ''விருத்த விபூதியன்'' எனப்பெறுகிறான். விருத்த—ஒன்றுக் கொன்று மாறுபாடுள்ள. விபூதியன்—இவ்வாறானவற்றைத் தனக்குச் செல்வமாக உடையவன்.

1 மூவுலகங்களுமாய்!அல்லனாய் (6-3-6)

அல்லனாய் இங்கு நித்திய விபூதி குறிப்பு.

2 நகரமும் நாடுகளும் (6-3-3)

3. பரஞ்சுடர் உடம்பாய் அழுக்குப் பதித்த உடம்பாய்(6-3-7).

பரஞ்சுடர் உடம்பாய்—ஒப்பில்லாத புகழுடைய திவ்யமான திருமேனியுடையவனாய். அழுக்கு பதித்த உடம்பாய்—ஸத்வம், ரஜஸ், தமஸ் இவற்றிற்கு வசியமான ஜகத்தைத் திருமேனியாக வுடையவனாய். (பகவானைப் பற்றிவை).

4. வன்சரண் அரர்க்காய் அசுரர்க்கு வெங்கூற்றமுமாய் (6-3-8) பகவானைப் பற்றியது.

5. நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய் (6-3-1). நல்குரவு—வறுமை.

6. வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய் (6-3-1).

7. கண்ட இன்பம் துன்பம் கலக்கங்களும் தேற்றமுமாய் (6-3-2).

8 புண்ணியம் பாவம், புணர்ச்சி பிரிவென்றிவையாய் (6-3-4),

9. கைதவம் செம்மை (6-3-5). கைதவம்—கபடம்.

10. மெய் பொய், முதுமை இளமை, புதுமை பழமையுமாய் (6-3-5).

## 5. 3. விசித்திரமான விபூதி

தம்மை இவ்வுலகில் வைத்துத் துன்புற்றுக் கலங்கும்படி முடியவும் மாட்டாமல் செய்யும் ஆச்சரியம் என்னவோ என்று ஆழ்வார் பகவானைக் கேட்க, பகவான் தான் விசித்திரங்களுக்கெல்லாம் ஆகரமாயிருப்பதை வெளியிடுகிறான். இதனால் இந்த விபூதி விசித்திரமானது.

1. மாயா! வாமனனே! மதுசூதா! (7-8-1).

மாயா—தான் கொள்ளும் வியப்பிற்கெல்லாம் காரணமானவனே! வாமனனே—பிறந்தவுடனே மகாபலியிடம் நடந்து சென்றவனே! இதோர் ஆச்சரியம்.

2. தாயாய்த் தந்தையாய் மக்களாய் மற்றுமாய் முற்றுமாய் (7-8-1).

தாய், தந்தை இவர்கள் உபகரிப்பதில் வேறுபாடு.

3. திங்களும் ஞாயிறுமாய்ச் செழும்பல் சுடராய் இருளாய் (7-8-2).

திங்கள்: காணும் போதே இனிமை. ஞாயிறு: ஒளி, செழும்பல் சுடர்—நக்ஷத்ரங்கள். இவற்றிற்குப் பெருமான் நிர்வாஹகன் (இவற்றைச் செய்விப்பவன்).

4. பொங்கு பொழி மழையாய்ப் புகழாய்ப் பழியாய் (7-8-2).

5. காயமும் சீவனுமாய்க் கழிவாய்ப் பிறப்பாய் (7-8-5).
காயம்—சரீரம். சீவன்—ஆத்மா. கழிவு—விநாசம்.

6. வியப்பாய் வென்றிகளாய் வினையாய்ப் பயனாய் (7-8-6).
வியப்பு—வியக்கத்தக்கவை, வென்றி—, வினை—செயல்.

இவ்வாறு விவரித்தபடி விசித்திரமானவற்றை யுடைய ஜகத்திற்குப் பகவான் காரணம். இந்த ஜகத்து விசித்திரமான விபூதி; இந்த விபூதிமயமானவன் பகவான்; விசித்ர ஜகதாகாரன்.

## 6. விபவம்

தேவர், மனிதர் போன்ற வடிவங்களோடு ஸர்வேச்வரன் தோன்றுவது விபவம் என்ற நிலை. விபவம்: சிறப்பான தோற்றம். இவன் இவ்வாறு தோன்றுவது தனது விருப்பத்தாலே; மெய்யன்பர்களைக் காப்பதற்கும், தீயோர்களை அழிப்பதற்கும் நன்னெறியை நிலைநாட்டுவதற்கும். இவன் பிறக்கப் பிறக்க இவனது புகர் மேன்மேலும் ஓங்கும். ஸ உச்ரேயாந் பவதி ஜாயமாந: பிறவாத இவன் பிறந்து புகழையே பெறுகிறான், பிறந்தே பெறுகிறான்.

அன்றியும் விபு—எங்கும் வியாபித்திருப்பது உயிர்களைக் காப்பதற்காக. ஆழ்வார் 'மண்மீது உழல்வாய்'' என்கிறார்.

### 6. 1. அவதாரங்கள்

1. எளிவரு மியல்பினன் நிலை வரம்பில பல பிறப்பாய், ஒளிவரு முழு நலம் (1-3-2).

நிலை: ஜன்மத்தில் மேன்மை தாழ்மை பார்ப்பது. வரம்பு—வரையறை; இவ்வாறுதான் பிறக்க வேண்டுமென்பது. எளிவரும் இயல்பினன்—எளிமையே இயல்பாக வுடையவன்; நீருக்குக் குளிர்ச்சி இயல்பு போலே.

2. துயரில் சுடரொளி தன்னுடைச் சோதி நின்றவண்ணம் நிற்கவே, துயரில் மலியும் மனிசர் பிறவியில் தோன்றிக் கண் காண வந்து (3-10-6).

துயரில்—துயரமில்லாமல், துயரத்திற்கு எதிர் நிலையாய். சுடர்—சோதி வடிவாய். தன்னுடை சோதி—பரஞ்சோதி என்று புகழப் பெறும் தனது திருமேனி. நின்ற வண்ணம் நிற்க—பரமபதத்தில் போலே விளங்கச் சிறிதேனும் வேறுபாடில்லாமல். துயரில் மலியும் மனிசர் பிறவியில்...வந்து—யாவரும் தமது ஊனக் கண்களாலேயே காணுமாறு அவதரித்து;

3. ஆதியஞ் சோதியுருவை அங்குவைத் திங்குப் பிறந்த (3-5-5).

ஆதி அம் சோதி உருவை—ஆதியாய், பரமபதத்தில் விளங்கும் சோதிமயமான திருமேனியை. அங்கு—பரமபதத்தில். வைத்து—விளங்கும் வகையிலே, இங்கு கொண்டு பிறந்த, அதே திருமேனிச் சோதியுடன் இங்குப் பிறந்தவன்.

4. பேருமோ ராயிரம் பிற பலவுடைய எம்பெருமான், பேருமோ ருருவமும் உளதில்லை இலதில்லை பிணக்கே (1-3-4)

பேரும்—திருநாமங்கள், பிற—இத்திரு நாமங்களால் விவரம் பெறும் திருவுருவங்கள். ஓர் பேரும் ஓர் உருவமும்...... ஒவ்வொரு பேரும் ஒவ்வோர் உருவமும். உளது இல்லை—இல்லை யென்று அறிவிலிகளும், இலது இல்லை—இல்லையென்பதில்லை, அதாவது உண்டு என்று அறிஞரும். பிணக்கு—தமக்குள்ளே கொள்ளும் பிணக்காகும்.

5. மீனாய் ஆமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் காணாரே னமுமாய்க் கற்கியாம் இன்னம் கார்வண்ணனே (5-1-10

இன்னம் கற்கியாம்—மேலும் கற்கியாகி.

மீனாய் அவதரித்தது : வேதங்களைக் கவர்ந்துஒளித்து வைத்த மதுகைடபர்களைக் கொன்று வேதங்களை மீட்பதற்காக. ஏழு வகைப் பெருங்கடல்களும் ஒரு செதிளில் அடங்குமாறு மிகப் பெரிய மீனாய்த் தோன்றினான் ஸர்வேச்வரன்.

## 6. 2. ஆமை

துர்வாஸரது சாபத்தினால் தேவர்கள் இழந்த செல்வத்தை மீட்டளிப்பதற்கும், அமுதம் அளிப்பதற்கும் திருப்பாற்கடலைக் கடைந்தான் பகவான். மந்தரகிரி மத்தாயிற்று, வாசுகி கடை நாணாயிற்று. மந்தர மலை கடலில் ஆழாமல் ஆமை வடிவத்தில் பகவான் தன் முதுகில் ஏற்றுக் கொண்டு தாங்கினான்.

1. மலை கொண்டு மத்தா அரவால் சுழற்றிய மாயப்பிரான் (திருவி. 51)

2. மலக்க மெய்த மாகடல் தன்னைக் கடைந்தானை (8-3-10).
மலக்கம் எய்த—கலங்குமாறு.

3. கூடிநீரைக் கடைந்தவாறும் அமுதம் தேவர் உண்ண. (5-10-10).

கூடி—தேவர்கள், அசுரர்கள் இவர்களுடன் சேர்ந்து, தானும் ஒருகை பற்றி

4. அமரர்கட்கருமை யொழிய ஆரமுதூட்டிய அப்பனை (3-7-5).
அருமை ஒழிய—அசுரர்களால் விளைந்ததீமைகள் நீங்குமாறு.

## 6. 3. வராகம்

இரணியாட்சன் என்ற அசுரன் பூமியைப் பாயாகச் சுருட்டி ஆழ்கடலில் ஆழ்த்தி ஒளித்து வைத்தான். இந்தப் பூமியை அண்ட பித்தியிலிருந்து மேலெடுத்து வருவதற்காக ஸர்வேச்வரன் கோல வராகமாக அவதரித்தான்.

1. கோலவராக மொன்றாய் நிலம் கோட்டிடைக் கொண்ட எந்தாய்! (10-10-7).

கோடு—தந்தம், கோரப்பல்.

2. ஏனமாய் நிலங்கீண்ட என் அப்பனே! கண்ணா! (5-7-6).

3. மாதர்மா மண்மடந்தை பொருட் டேனமாய்ஆதியங் காலத்து அகலிடம் கீண்டவர் (4-2-6).

4. எரிதிரை வையம் முற்றும் ஏனத்துருவாய் இடந்த பிரான் (திருவி. 99).

எரி திரை—ஓங்குகின்ற அலைகளிலிருந்து, வையம் முற்றும் ஏனத்து உருவாய் இடந்தபிரான்.

5. ஏன மொன்றாய் மண்துகளாடி (திருவி. 55).

மண் துகள் ஆடி—பூமியின் புழுதியைத் தனது திருமேனியில் ஏற்றுக் கொண்டவன்.

6. பெருங்கேழலார் தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம்மேல், ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம் (திரு. வி. 45).

வராகப் பெருமான் தனது தாமரை போன்ற திருக்கண்களை நம்மேல் முழுதும் சேர நோக்கி யருளினார்.

## 6. 4. நரசிங்கன்

தேவர்களிடமிருந்து பெற்ற வரத்தினால் இரணியன் எல்லா உலகங்களையும் தனக்கே யாக்கிக் கொண்டு, தேவர்களைத் துன் புறுத்தி வந்தான். சிறந்த பக்தி வாய்ந்தவனாகிய தன் மகன் பிரக

லாதனைக் கொல்லப் பலவகையாக முயன்றான், இச்சிறுவனைக் காப்பதற்காகப் பகவான் தூணில் நரசிங்கமாகத் தோன்றினான்.

1. ... என் நெஞ்சகலான்—அன்றங்கை வன்புடையால் பொன் பெயரோன் வாய்தகர்த்து மார்பிடந்தான் (பெ.திரு. 35).

புடை—அடித்தல், தாக்குதல். பொன்பெயரோன்-இரணியன்

2. அரியாகி இரணியனை ஆகங் கீண்டான் (10-6-10).

3. புக்க அரியுருவாய் அவுணனுடல் கீண்டுகந்த சக்கரச் செல்வன் (7-6-11).

4. கடுத்த போரவுணன் உடலிரு பிளவாக் கையுகி ராண்ட எங் கடலே! (8-1-3)

கடுத்த போர் அவுணன்—போர் செய்வதிலே பெரிதும் நோக்குடைய. கை உகிர் ஆண்ட—கையின் நகங்களைப் பயன்படுத்திய. கடல்—''மஹா விஷ்ணும்'' என்றவாறு அளவிடமுடியாத பெரிய வடிவம்.

5. ஆகஞ் சேர் நரசிங்க மதாகி—ஓர்
ஆகம் வள்ளுகிரால் பிளந்தான் (9-3-7).

6. அல்லல் அமரரைச் செய்யும் இரணிய னாகத்தை
மல்ல லரியுருவாய்ச் செய்த மாயம் (7-5-8).

அமரரை அல்லல் செய்யும்—தேவர்களை இடையறாமல் துன்புறுத்திய, மல்லல்—பெரிய.

7. உன்னைச் சிந்தையினா லிகழ்ந்த இரணியனாகங் கீண்ட என், முன்னைக் கோளரியே! (2-6-6).

சிந்தையினால் இகழ்ந்த—வாக்காலே இகழ்ந்ததன்றி, நெஞ்சாலும் இகழ்ந்த. கோள் — மிடுக்கு. முன்னை—பக்தனான பிரகலாதன் நெஞ்சில் முதலில் கொண்ட.

8. அங்கப் பொழுதே அவன் வீயத் தோன்றிய என், சிங்கப் பிரான் பெருமை ஆராயுஞ் சீர்மைத்தே (2-8-9).

9. கிளரொளியால் குறைவில்லா அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து கிளரொளிய இரணியன தகல்மார்பங் கிழித்துகந்த (4-8-7).

## 6. 5. வாமனன்

மகாபலி இந்திரனிடமிருந்து கவர்ந்த உலகங்களை மீட்டுக் கொடுப்பதற்காக, இறைவன் வாமனனாய் அவதரித்து, அவனிடம் மூவடி நிலம் இரந்து, பின்பு இவற்றை அளப்பதாக வானில் ஓங்கினான், திரிவிக்கிரமனாக.

1. அடியை மூன்றை இரந்தவாறும் (5 10-9).

2. மாலுக்கு வையமளந்த மணாளற்கு (6-6-1).

3. வன் மா வையமளந்த எம் வாமனா! (3-2-2).

வன் மா வையம்—கடினமே இயல்பாய்ப் பரந்துள்ள பூமியை.

4. வள்ளலேயோ! வையங் கொண்ட வாமனாவோ! என்றென்று (4-7-2).

வள்ளல்—பூமியிலுள்ளாரது சிரத்தில் திருவடி படிய வைத்ததால்.

5 புலன் கொள் மாணாய், நிலங்கொண்டானே (1-8-6).

புலன் கொள்—இந்திரியங்களைக் கவரும் (அழகாலும் மதலைச் சொல்லாலும்).

6. அறியாமைக் குறளாய் நிலம் மாவலி! மூவடி யென்று, அறியாமை வஞ்சித்தாய் (2-3-3).

அறியாமை—தன்னைப் பிறர் அறியாதவாறு. ''நிலம்—மாவலி!—மூவடி'' என்று—இசைவில்லாச் சொற்களைச் சொல்லி, அறியாமை—சுக்கிராச்சாரி கூறியும் மனத்துள் ஏற்காதவாறு, வஞ்சித்தாய்—கபடத்தினால் நிலங்கொண்டாய்.

7. ஒரு மாணிக் குறளாகி நிமிர்ந்த அக் கருமாணிக்கம் (1-10-1)

மாணி—அழகுள்ள. குறள்—திருமேனி சுருங்கி இனிமையானது குறிப்பு; பால் சுண்டி இனிப்பது போல.

8. பாமரு மூவுலகு மளந்த பற்ப பாதாவோ! (7-6-1).

பற்பபாதாவோ—பதுமம் போல் அழகிய திருவடிகளுடையவனே!

9. பாயோரடிவைத்து அதன் கீழ் பரவை நிலமெல்லாம் தாய், ஓரடியால் எல்லா உலகும் தடவந்த மாயோன் (6-9-9)

10. அடியால் படி கடந்த முத்தோ? அதன்றேல் முடியால் விசும்பளந்த முத்தோ? (பெ. திரு. 27).

11. மீனென்னுங் கம்பில் வெறியென்னும் வெள்ளி வேய், வானென்னுங் கேடிலா வான்குடைக்குத்-தானோர். மணிக்காம்பு போல் நிமிர்ந்து மண்ணளந்தான் (பெ. திரு. 62)

மாவலியிடம் நீரேற்று இறைவன் மேலே ஓங்கும் போது, ஆகாசம் ஒரு குடைபோல் விளங்கியது. மீன்—நக்ஷத்திரங்கள்; இவை குடையின் குறுக்குக் கம்புகள் போல் விளங்கின. வெறி. வெள்ளி—சந்திரன், சுக்கிரன். இவை வேய்- மூங்கிற் குழல்கள் போல் இலங்கின. இறைவன் இதன் மணிக்காம்பு (மணிமயமான காம்புபோல்) மிளிர்ந்தான் (தனது நிறத்தாலே). வான் குடை—பெரிய குடை.

12. இறைமுறையான் சேவடிமேல் மண்ணளந்த அந்நாள், மறைமுறையால் வானாடர் கூடி—முறை முறையின், தாதிலகு பூத்தெளித்தால் ஒவ்வாதே! தாழ்விசும்பின், மீதிலகித் தான் கிடக்கும் மீன். (பெ. திரு. 61).

ஈச்வரன் என்ற முறையாலே பகவான் உலகளந்தபோது, வானோர் வரிசை வரிசையாக நின்று மலர்களைத் திருவடியில் தூவினர். இவ்வாறு சிதறிய மலர்கள் போல் விளங்கின ஆகாயத்தில் அடர்ந்துள்ள நஷத்திரங்கள். நக்ஷத்திர மண்டலம் வரையில் ஓங்கியது திருவடி.

13. ஞால முற்றும் வேயகமாயினும் சோரா வகை இரண்டே அடியால், தாயவன் (திரு. வி. 61).

ஞால முற்றும்—பூமிப்பரப்படங்கலும், வேய் அகமாயினும்—மூங்கிற் குத்தளவாயினும். சோரா வகை—விடாமல், தாயவன்—அளந்தவன். இரண்டே அடி என்பதால் ஞாலம் என்பது மண்ணும் விண்ணும், இந்திரனுக்குரியவை.

14 மண்ணும் விண்ணும், என் காற்கு அளவின்மை காண்மின் என்பானொத்து வான் நிமிர்ந்த தன் கால் பணிந்த என்பால் (திரு. வி. 42).

வானோங்கி மண்ணளந்ததால் தேறுவது: மண்ணும்

15. கழல்தல மொன்றே நிலமுழுதாயிற்று, ஒருகழல்போய், நிழல் தர எல்லா விசும்பும் நிறைந்தது (திரு.வி. 58)

## 6. 6. பரசுராமன்

பார்க்கவ முனிவரது மகனான பரசுராமன் க்ஷத்ரியர்களை இருபத்தோர் கால் வதைத்து, அதனால் தேங்கிய உதிரத்தில் தன் பிதாவுக்குத் தர்ப்பணம் செய்தான். இவன் கையில் பரசு ஏந்தியவன். தனது தகப்பனாராகிய ஜமதக்னி முனிவரைக் கார்த்தவீர்யார்ஜுனனது குமார்கள் கொன்றதால், பழி தீர்ப்ப தற்கு இவன் க்ஷத்ரிய மன்னரைக் கொன்றான்.

1. நின்றிலங்கு முடியினாய்! இருபத்தோர் கால் அரசு களைகட்ட வென்றி நீண் மழுவா! (6-2-10).

அரசு களைகட்ட-அரசர்களை நாசஞ்செய்து. நீள் மழுவா!— பெரிய மழுவை ஆயுதமாக வுடையவனே!

## 6. 7. தசரதராமன்

(1) ஏழு மாமரங்கள் துளைபடச் சிலை வளைத்தது:

1. மராமரம் எய்த மாயவன் (1-7-6).

2. கணையொன்றாலே ஏழ்மரமுமெய்த எம் கார்முகிலை (9-1-2) சிலையேந்தியபோது திருமேனி யழகு.

3. சினையேய் தழைய மராமரங்கள் ஏழு மெய்தாய் சிரீதரா! (1-5 6).

சினை ஏய் தழைய-கிளைகளோடு சேர்ந்ததழைகளையுடைய.

(2) திருக்கையில் ஏந்திய சிலை:

4. காயுங் கடுஞ்சிலை என் காகுத்தன் (5-4-3).

காயும் கடும் சிலை—பகைவரிடம் இராமன் கருணை கொண்டாலும், அவன் ஏந்தும் சிலை தானே கணைகளைப் பெய்யும். காகுத்தன் கருணையுடையவன்; சிலை கொடியது.

5. கொம்பு போல் சீதை பொருட் டிலங்கை நகர் அம்பெரியுய்த் தவர் (4-2-9).

6. மதிளிலங்கைக் கோவை வீயச் சிலை குனித்தாய் (4-3-1).

7. கிளர் வாழ்வை வேவ இலங்கை செற்றீர் (2-4-10)

8. ஏர்கொ ளிலங்கையை, நீறே செய்த நெடுஞ்சுடர்ச் சோதி! (2-9-10).

9. தண்ணிலங்கைக் கிறையைச் செற்ற நஞ்சனே! (3-8-2).

10. தென்னிலங்கை எரியெழச் செற்ற வில்லியை (3-6-2).

11. ...கரந்துருவின், அம்மானை அந்நான்று பின்தொடர்ந்த—ஆழியங்கை, அம்மானை (பெ. திரு. 82).

கரந்து உருவின்—இயல்பான உருவத்தை மறைத்து, அம் மானை—மானாக வந்த மாரீசனை. ஆழி அம் கை—மோதிரம் அணிந்த அழகிய திருக்கை. கைகேயியின் வரத்தில் அகப்படாதது இந்த ஆழி. அம்மான்—ஸ்வாமி.

12. கடலாறு மடுத் துதிரப் புனலா—அப்பன், நீறுபட இலங்கை செற்ற நேரே. (7-4-7).

ஆறு மடுத்து உதிரம் புனலா—உதிர வெள்ளம் ஆறுகளாகப் பெருகிக் கடலிற் பாயக் கடல் நீர் எதிர்த்து வருமாறு.

(3) ராமராஜ்யம்:

13. புற்பா முதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே, நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும், நற்பாலுக் குய்த்தனன் (7-5-1).

பா புல்—பரவும் புல். முதலா—முதலாக. எறும்பு ஆதி—அற்ப மான எறும்பு முதல். நல் பால் அயோத்தியில்—நல்ல தேசமாகிய அயோத்தியிலே: அயோத்தியில் பிறப்பதாலேயே நன்மை. சராசரம் முற்றவும் நல்பாலுக்கு உய்த்தனன்—நல்ல நிலையிலிருக் குமாறு செய்தான் இராமன்; இது ஆட்சித் திறன். "ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாம் அபவந் கதா:" என்பது குறிப்பு.

14. நாட்டிற் பிறந்து படாதன பட்டு மனிசர்க்கா
நாட்டை நலியும் அரக்கரை நாடித் தடிந்திட்டு
நாட்டை அளித்து உய்யச் செய்து (5-5-2).

இது தான் ராமாயண சாரம். நாடி—இருந்த இடத்திற்குச் சென்று. தடிந்திட்டு—அழித்து. நாட்டை அளித்து—உயிர்களைக் காப்பாற்றி. உய்யச் செய்து—நல்லவர்களாகச் செய்து. ஆட்சித் திறன்.

## 6. 8. கண்ணபிரான்

நம்மாழ்வார் ''க்ருஷ்ண - த்ருஷ்ணா - தத்வம்'' என்பர்— கண்ணபிரானிடம் இவர் கொண்ட பிரேமத்தால் நேரே கண்டனுபவிக்க வேண்டு மென்ற வேட்கையே வடிவெடுத்து வந்தது போல்வார் இவ்வாழ்வார் கண்ணபிரானது எளிமையை நினைத்து இவர் ''எத்திறம்!'' என்று மோகித்தார். பிறந்த போது இருளில் பிறந்ததையும், மறைந்துவாழ்ந்ததையும், பாரதப் போரில் பட்ட பாடுகளையும் நினைத்து மனமுருகினார். ''உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ண''னென்று கருதினார் இவர். பரத்வ நிலையோடு கண்ண பிரானது லீலைகளை இணைத்து இவர் அனுபவித்தார். ''கண்ணன் வைகுந்தனோடு என் நெஞ்சினாரைக் கண்டால்,'' ''கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை யமுனை'', ''ஏனமாய் நிலங்கீண்ட என்னப்பனே! கண்ணா!', ''ஆயன் அமரர்க் கரியேறு எனதம்மான்'' என்றிவர் அனுபவிக்கிறார். இவர் கண்ணபிரானை அனுபவித்த வகை ஸ்ரீபாகவத சாரமாகும் என்னலாம்.

(1) மதுரையில் அவதாரம்: ''ஏஷ நாரயண: ஸ்ரீமாந்...ஷீர்யா கதோ மதுராம் புரீம்.''

1. மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான் (9-1-10).

2. வேண்டித் தேவர் இரக்க வந்து பிறந்தும் (6-4-5).

3. மல்லை மூதூர் வடமதுரைப் பிறந்தவன் (9-1-6).

4. மாதுகிலின் கொடிக் கொள் மாட வடமதுரைப் பிறந்த (9-1-9).

5. ...மாயவ னடிபரவிப், போழ்து போக உள்ளகிற்கும் புன்மை யிலாதவர்க்கு, வாழ்துணையா வடமதுரைப் பிறந்தவன் (9-1-8).

மாயவன் அடி பரவி போழ்து போக—பகவானது திருவடி களை வணங்கிப் போது போக்க நினைப்பவர்களாய், புன்மை இலாதவர்க்கு, வேறு பயனைக் கருதும் தாழ்மை இல்லாதவர்க்கு. வாழ்துணையா—நல்வாழ்வுக்கு உபாயமாக ''பரித்ராணாய ஸாதூநாம்'' என்றான் கண்ணபிரான்.

(2) பிறந்தவுடன் திருவாய்ப்பாடி சேர்ந்தான்:

6. வீங்கிருள்வாய் பூண்டு—அன்று, அன்னை புலம்பப் போய், அங்கோ ராய்க்குலம் புக்கதும் (6-4-5)

அன்னை—தேவகி, பூண்டு—கம்ஸ பயத்தாலே குழந்தையை அணைத்துக் கொண்டு புலம்ப—கூப்பிட. வீங்கு இருள்வாய்—அடர்ந்த இருளிலே போய். ஓர் ஆய்க்குலம்: குழந்தை மறைந்து வாழ்வதற்கு ஓர் இடம் நேர்வதே!

7. எடுத்த பேராளன் நந்தகோபன் றன் இன்னுயிர்ச் சிறுவனே! அசோதைக்கு, அடுத்த பேரின்பக் குலவிளங் களிறே!(8-1-3).

எடுத்த—பெருநிதி எடுத்ததுபோலே, உன்னை ஏற்றுப் பெரிதும் மகிழ்ந்த. பேராளன்—பெருமை வாய்ந்தவன். யசோதைக்கு அடுத்த—கிட்டிய. குல—ஆயர் குலத்திற்கு: இளங்களிறே—ஆனைக் கன்று போல் அப்போதப்போது பேரின்பம் அளித்து மகிழ்விப்பவனே. இவன் "தொல்லையின்பத்து இறுதி" கண்டான், இவனை மகனாகப் பெற்று.

8. மனை சேர் ஆயர் குலமுதலே! (1-5-6).

ஆயர் மனைகளிலே வந்து சேர்ந்து, அவர்களது குலத்திற்கு முதலானவனே!

(3) அடர்ந்த பகைவர்களை மாய்த்தவன்:

9. பேயைப் பிணம்படப் பாலுண் பிரானுக்கு (6-6-8).

10. மாயச் சகட முதைத்த மணாளற்கு (6-6-8).

11. போனாய் மாமருதின் நடுவே என் பொல்லா மணியே! (5-1-2).

12. பேய்முலை உண்டு சகடம் பாய்ந்து மருதிடை போய் முதல் சாய்த்துப் புள்வாய் பிளந்து களிறட்ட (5-3-8).

13. தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரர் உடல் வேறாப் பிளந்து வீயத் திருக்கா லாண்ட பெருமானே! (6-9-4).

சகட அசுரர்—சகடத்தில் ஆவேசித்த அசுரர். இவர்களது உடல் தளர்ந்து—கோப்புக் குலைந்து முறிந்து—நடுவே இற்றுப் போய். வீய—உருமாயும் படியாக. திருக்கால் ஆண்ட—திருவடிகளால் காரியங் கொண்ட. கண்ணன் அழித்தான் எனில்

கண்ணெச்சில் (த்ருஷ்டி)படுமென்று திருவடிகளை குலைத்தன என்கிறார், ஆழ்வார்

(4) வெண்ணெய் களவி லுண்டான்:

14. களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! (1-5-1).

களவு ஏழ் வெண்ணெய்—வெண்ணெயைக் களவிலே உண்ண விருப்பமுடையவனாய்; அன்றி, இவன் களவை யாவரும் வெளியிடுமாறு உண்டான். கள்வா!—பரிவுமிக்க யசோதைப் பிராட்டி சொல்லும் வார்த்தை. களவு ஏழ்—களவு எழ, அதாவது களவால், ''களவு'' என்ற கூச்சல் எழ.

15. சுருங்குறி வெண்ணெய் தொடுவுண்ட கள்வனை (திரு வி.91).

16. வைகலும் வெண்ணெய், கைகலந் துண்டான். (1-8-5).

17. உண்டாய் வெண்ணெய் சிறுமனிசர் உவலை யாக்கை நிலையெய்தி (1-5-8).

சிறு மனிசர் உவலை யாக்கை நிலை எய்தி—அற்பரான மனிதரின் அழிவான சரீரத்தின் நிலையைப் பெற்று, வெண்ணெய் உண்டாய்.

18. நோவ ஆய்ச்சி உரலோ டார்க்க இரங்கிற்றும் (6-4-4).

ஆய்ச்சி இவனை உரலோடு ஆர்க்க (பிணைத்துக் கட்ட). இரங்கிற்றும்—அதற்கீடுபட்டிருந்ததுவும்.

19. ஆயர் கொழுந்தாய் அவரால் புடையுண்ணும் என் மாயப் பிரானை (1-7-3).

ஆயர் கொழுந்தாய்—ஆயர்களுள் சிறந்தவனாய்; அவர்களுக்கு உயிராய் அவரால்—தாயாலின்றிப் பிறராலும். புடையுண்ணும்-வெண்ணெய் களவுசெய்து உண்டதன் விளைவாக அடிக்கப்பட்டதும். மாயப்பிரான்: எத்திறம் இந்த எளிமை!

(5) இளங்கன்னியரோடு குழைந்து மகிழ்ந்தான்:

20. வல்லிசேர் நுண்ணிடையாய்ச்சியர் தம்மொடும்கொல்லைமை செய்து குரவை பிணைந்தவர் (4-2-2)

வல்லி சேர் நுண் இடை—வஞ்சிக் கொடி போல் நுண்ணிய இடையுடைய. கொல்லைமை செய்து—வரம்பழிந்த செயல்கள் செய்து

21. குரவை ஆய்ச்சியரோடு கோத்ததும் (6-4-1).

22. கேயத் தீங்குழ லூதிற்றும் நிரை மேய்த்ததும் (6-4-2)

கேயம்: பாட்டுக்கள்; தனது தாழ்ச்சி விளங்குமாறு அமைத்து. இவ்வாறான சொற்கள் அமைத்து தீம் குழல் ஊதியதும் குழல் வழியே பெண்கள் வருவர்; இதே போல பசுக்களும் மீளும். பெண்களின் பேரை சங்கேதங்களாக அமைத்து ஊதுவான் கண்ணன். "நாம ஸமேதம் க்ருத ஸங்கேதம்".

(6) நப்பின்னைப் பிராட்டியை மணந்து கொண்டான் :

23. கோவை வாயாள் பொருட்டு ஏற்றின் எருத்தம் இறுத்தாய் (4-3-1).

கோவை வாயாள்—நப்பின்னைப் பிராட்டி. இவளது முறுவலால் இவளை எவ்வகையாயினும் பெற வேண்டுமென்று விரும்பினான். ஏற்றின்—ரிஷபங்களின். எருத்தம்—பிடர், இறுத்தாய்—குலைத்தாய்.

24. வதுவை வார்த்தையுள் ஏறு பாய்ந்ததும் (5-10-2).

வதுவை—நப்பின்னைப் பிராட்டியை மணஞ்செய்துகொள்வது வார்த்தையுள்—இந்த வார்த்தை கேட்டதும். ஏறு பாய்ந்ததும்—இவளை மணந்து கொண்டு களிப்பதற்கு ஏழு ரிஷபங்களோடு போர்செய்ததும்.

25. ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடு உண்ணப் போந்து—இமில் ஏற்று வன் கூன், கோட்டிடை ஆடினை கூத்து (திரு. வி. 21)

ஸ்ரீவைகுண்டத்தில் இவன் திருமஞ்சனம் கண்டருளும்போது, வெண்ணெய் விரும்பி இங்குப் போந்து நப்பின்னையை மணந்து கொள்ள ரிஷபங்களிடையே கூத்தாடினான், பகவான். பரத்வமும் விபவமும் ஆணைந்த நிகழ்ச்சி. இமில் ஏற்று—வலிய முசுப்புடைய ரிஷபங்களுடைய. வன் கூன் கோடு—வலிமை மிக்கு வளைந்த கொம்புகள். ஒரு கொம்பைப் பெறுவதற்கு ஏழு ரிஷபங்களின் கொம்புகளிடையே கூத்தாடினான். இவ்வாறு இவன் ரிஷபங்களோடு சண்டைசெய்தது, கூத்தாடுவது போல இவனுக்கு ஆயாசம் சிறிதுமின்றி மகிழ்ச்சியை விளைவித்தது.

(8) ருக்குமணிப் பிராட்டியை மணந்து கொண்டான்.

26. அன்றங் கமர்வென்று உருப்பிணி நங்கை அணிநெடுந்தோள் புணர்ந்தான் (7-10-6).

அன்று அங்கு—குண்டினபுரத்தில் சுயம்வரம் நடந்தவன்று. அமர்—போர்; சிசுபாலன் முதலோருடன். அமர்வென்று—அமரில் வென்று.

(9) குன்றமேந்தி ஆயர்களையும் பசுக்களையும் காப்பாற்றினான்:

27. குன்ற மேந்திக் குளிர்மழை காத்தவன் (3-3-8).

28. குன்ற மொன்றால் மழைகாத்த பிரானை (4-5-7).

29. குன்று குடையா ஆகாத்த கோவலனார் (பெ. திரு. 74).

30. மாண் குன்ற மேந்தி தண்மாமலை வேங்கடத்தும்பர் நம்பும் சேண் குன்றம சென்று (திரு. வி. 8).

மாண் குன்றம்—கோவர்த்தனம்; கண்ணபிரான் திருக்கையோடு கொண்ட தொடர்பால். இதை ஏந்தியவன் உறையும் திவ்யதேசம் திருவேங்கடம். சேண்குன்றம் — சிறப்புடைய திருமலை. விபவமும அர்ச்சையும் இணைந்துள்ளன.

(10) வீரச் செயல்கள்:

31. சாயக் குருந்த மொசித்த தமியற்கு (6-6-8).

குருந்தம்—அசுரன் ஆவேசித்திருந்த குருந்த மரம். சாய—வேர்ப்பற்றில்லாமல் சாய்ந்து விழுமாறு. தமியற்கு—வேறு உதவியில்லாமல் தனியாகத் தகைந்த வீரனுக்கு.

32. கன்றுயரத் தாமெறிந்து காயுதிர்த்தார் தாள் பணிந்தோம் (பெ. திரு. 54).

காய்—விளங்காய். கன்று—கன்று வடிவில் வந்த அசுரனை.

33. தாம்பா லாப்புண்டாலும் அத்தழும்பு தாளினகப், பாம்பா லாப்புண்டு பாடுற்றாலும்—சோம்பாது (இப்),பல்லுருவை யெல்லாம் படர்வித்த வித்தா! (பெ. திரு. 18)

தாம்பால் ஆப்புண்டாலும்—யசோதைப் பிராட்டியால் தாம்

பாம்பால் ஆப்புண்டாலும் — காளியனால் கட்டப்பட்டு வருத்த மடைந்தாலும். சோம்பாது — பின்வாங்காமல். பல் உருவை எல்லாம் படர்வித்து—தேவர், மனிதர் போன்ற ஜீவர்களைப் படைத்த. ஸம்ஸாரிகள் இப்படி அனாதரம் செய்தபோதும் இவர்களைப் படைத்த.

34. கவளக் கடாக் களிறட்ட பிரான் (4-6-5).

கவளம் கடாம் களிறு—மதம் பெருக்குவனவற்றைக் கவளமாகக் கொண்டு, அதனால் மதம் பெருகியால் மதித்த யானை குவலயாபீடம்.

35 நிகரில் மலரைச் செற்றதும் (6-4-3)

36. வேழ மருப்பை யொசித்தான் (1-9-2).

வேழம்: குவலயாபீடம், மருப்பு—தந்தம், ஒசித்தான்—முறித்தான்.

37 விறல் கஞ்சனை வஞ்சனை செய்தீர் (2-4-8).

38 நலியும் நரகனை வீட்டிற்றும்வாணன்திண்டோள் துணித்த, வலியும் பெருமையும் யான் சொல்லும் நீர்த்தல்ல. (திரு. வி. 78).

வீட்டிற்றும்—அழித்ததும்.

(11) பாரதப் போரில் செய்தவை :

39. பிறந்த மாயா! பாரதம் பொருத மாயா! (8-5-10).

பாரதம் பொருத—பாரதப் போரில் அர்ச்சுனனுக்குத் துணையாக நின்று உதவி செய்த.

40. சித்திரத் தேர்வலவா! திருச்சக்கரத்தாய்! (7-8-3)

வியக்குமாறு தேரை நடத்தக் கூடியவன். பீஷ்மன் எறிந்த கணை அர்ச்சுனன் மேலே படாதவாறு தேரை நடத்தியது குறிப்பு.

41. கொல்லா மாக்கோல் கொலை செய்து—பாரதப் போர், எல்லாச் சேனையும் இருநிலத் தவித்த எந்தாய்! (3-2-3).

கொல்லா மா கோல்—கொல்லுவதற்கில்லாமல் குதிரைகளை ஓட்டுவதற்கான முட்கோல். கருவியாக. அவித்த—பீஷ்மர் போல்வார் காட்டுத்தீபோல் படர்ந்து வரத், தீயை அணைப்பது போல் யாவரையும் அழித்த.

42. நீர்மையில் நூற்றுவர் வீய ஐவர்க்கருள் செய்து நின்று, பார் மல்கு சேனை அவித்த பரஞ் சுடரை (3-5-7).

43. தாயம் செறும்ஒரு நூற்றுவர் மங்க ஓரைவர்க்காய்த், தேச மறிய ஓர் சாரதியாய்ச் சென்று சேனையை நாசஞ் செய்திட்டு (7-5-9).

தாயம் செறும்—தாயமுறைப்படி பெற்ற அரசைச் செலுத்திக் கைக்கொண்ட,

44. அடவரும் படை மங்க ஐவர்கட்காகி வெஞ்சமத்து—அன்று தேர் கடவிய பெருமான் (3-6-10).

அடவரும்—தன் பாலே தீங்கு நினைத்து வருகின்ற. அட—அடு வதற்காக, மங்க—அழியுமாறு.

45. மண்மிசைப் பெரும் பாரம் நீங்க ஓர் பாரதமா பெரும்போர், பண்ணி மாயங்கள் செய்து சேனையைப் பாழ்பட நூற்றிட்டுப் போய் (6-4-10).

நூற்றிட்டு-சூழ்ந்து முடித்து.

46. ஊணுடை மல்லர் ததர்ந்த ஒலி—மன்னர்
ஆணுடைச் சேனை நடுங்கு மொலி—விண்ணுள்
ஏணுடைத் தேவர் வெளிப் பட்ட ஒலி—அப்பன்
காணுடைப் பாரதம் கையறை போழ்தே (7-4-5)

பாரதப் போர் நடத்தும்போது நேர்ந்த ஒலி பலவகை. ஊண் உடை மல்லர்—வலிமை தரும் உணவு உண்டு வளர்ந்த ததர்ந்த—நெரிந்து விழுந்த. ஆண் உடை சேனை—வீரபுருஷர்கள் நிறைந்த சேனைகள். விண்ணுள்—வானில். ஏண் உடை தேவர்—சிறந்தவர்களாகக் கொண்டாடப் பட்ட தேவர்கள் வெளிப்பட்ட—தோன்றிக் கொண்டாடிய. காணுடை பாரதம்—கண்டு வியக்கு மாறு நிகழ்ந்த போர்.

47. நேர்சரிந்தான் கொடிக் கோழிகொண்டான்—பின்னும்
நேர்சரிந்தான் எரியு மனலோன்—பின்னும்
நேர்சரிந்தான் முக்கண் மூர்த்தி கண்டீர்—அப்பன்
நேர்சரி வாணன் திண்டோள் கொண்டன்றே (7-4-8).

கண்ணபிரான் வாணனோடு செய்த போரில்: நேர்சரிந்தான்—முதுகிட்டுப் போனான். கொடி கோழி கொண்டான்—மயிலைக்

கொடியாகக் கொண்ட முருகன், எரியும் அனலோன்—சுடர்கள் வாய்ந்த அக்நி பகவான்.

## 6. 9. யானைக்குமுன் தோன்றியது

1. தொழுங் காதற் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே (3-1-9).

தொழும் காதல்—கையில் மலரேந்தித் திருவடிகளில் சேர்த்துத் தொழ விரும்பிய.

2 மொய்மாம் பூம்பொழிற் பொய்கை முதலைச் சிறைப் பட்டு நின்ற, கைம்மாவுக் கருள்செய்த கார்முகில் வண்ணன் (3-5-1).

மொய்—அடர்ந்து. மா—உயர்ந்து. பூ—பூத்த. பொழில்—சோலையை யுடைய. பொய்கை—பொய்கையிலே. முதலைச் சிறைப் பட்டு—முதலையாலே சிறைப் பட்டு, கௌவப் பட்டு. கைம்மா—யானை; கஜேந்த்ரன்.

3. பூந்தண் புனற் பொய்கை யானை இடர் கடிந்த, பூந் தண்டுழாய் என் தனிநாயகன் (2-8-2).

## 7. அர்ச்சாவதாரம்

அர்ச்சை நிலையைப் பற்றி ஆழ்வார் அருளியுள்ளது; நெஞ்சினால் நினைப்பான் யவன், அவனாகும் நீள்கடல் வண்ணனே (3-6-9) மனத்திலே திருமேனியாக நினைத்து யாதொன்று ஏறியருளுவிக்கப்பட்டதோ, அத்தையே அவன் திருமேனியாக உடையவன்; இவன் பரந்த கடல் போலே இயல்புள்ள ஸர்வேச்வரன். "பக்தா நாம்" என்றவாறு இவன் பக்தர்களைக் காப்பதற்காகவே இந்நிலையில் விளங்குகிறான். இந்நிலை "பூர்ணம்" எனப்பெறுகின்றது: பரத்வம் முதலிய நிலைகளில் உள்ள கல்யாண குணங்கள் யாவும் சிறிதேனும் குறைவின்றி அர்ச்சை நிலையில் விளங்குவன. இவனைப் பற்றுவதற்கு அனுகூலமான குணங்களும், பற்றிய பின்பு அனுபவித்து உய்வதற்கான குணங்களும் அர்ச்சை நிலையில் அபரிமிதமாக மிளிர்கின்றன.

ஆழ்வார் மங்களாசாஸநம் செய்துள்ள திருப்பதிகளில், ஒவ்வொன்றிலும் அனுபவித்த சிறந்த குணங்கள் இப்பகுதியில் விவரம் பெறுவன.

## 7. 1. திருவரங்கம்

வ்யூஹ நிலையில் ஜகத் ரக்ஷண சிந்தனை செய்வதுபோல் ஸர்வேச்வரன் இங்கு சயனத் திருக்கோலத்தில் விளங்குகிறான். இங்கு விளங்கும் குணம் வ்யூஹ ஸௌஹார்தம், ஸௌஹார்தம்—நன்மனப்பான்மை,

1. கால சக்கரத்தாய் கடலிடங் கொண்ட கடல் வண்ணா! (7-2-7).

கால சக்கரத்தை நிர்வகிப்பவனாய், திருப்பாற்கடலிலே ஒரு கடல்சாய்ந்தாப்போல் கண்வளர்ந்தருள்பவனே!

2. ''என் திருமகள் சேர் மார்வனே!'' என்னும் என்னுடைய ஆவியே! (7-2-9).

பிராட்டியோடே இணைந்து அருள் செய்யும் இவன், எனக்கு உயிராவான்.

3. வெய்ய வாள் தண்டு சங்கு சக்கரம் வில்லேந்தும் விண்ணோர் முதல்! (7-2-6).

உயிர்களைக் காப்பதற்காகத் திருக்கைகளில் திவ்யாயுதங்கள் ஏந்தியவன்: ஸர்வ - ப்ரஹரண-ஆயுத:- அன்றியும் இவன் நித்திய சூரிகளின் தலைவன்.

## 7. 2. திருவேங்கடம்

''கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்'' என்றவாறு, இங்குறையும் பெருமானது திருவருள் வானரங்கள், வேடுவர் இவர்களிடமும் சார்கின்றது.

1. கண்ணாவானென்றும், மண்ணோர் விண்ணோர்க்கு.
தண்ணார் வேங்கட, விண்ணோர் வெற்பனே (1-8-3).

இவன் மண்ணோர்க்கும் நித்திய சூரிகளுக்கும் கண்ணாவான், நாயகனாவான். இரட்டைப் பிள்ளையைத் தாய் அணைத்துக் காப்பதுபோல் இந்த நிலை.

2. என்கண் பாசம் வைத்த பரஞ்சுடர்ச் சோதி (3-3-4).

என்கண்—(இழிஞனான) என்னிடமும். பாசம்—பேரன்பு. இந்தப் பாசம் கொள்வதால், இவன் பரஞ்சுடர்ச் சோதி, அளவு கடந்த சோதி வாய்ந்தவனாகிறான்.

3. ஓயு மூப்புப் பிறப்பிறப்புப் பிணி வீயுமாறு செய்வான் திரு வேங்கடத் தாயன் (3-3-9)

ஆயன்—கண்ணபிரான்.

## 7. 3. திருக்குருகூர்

ப்ரணவத்தின் கருத்து இரண்டு: பகவானைப் பற்றி: ஞானமய மான ஆத்மாவுக்கு ஈச்வரன். ஆத்மாவைப் பற்றி: ஈச்வரனுக்கு இவன் உரியவனாவான். இவ்விரண்டு கருத்துக்களும் வெளியாகு மாறு நம்மாழ்வார் ஆதிப்பிரானுடன் உறையும் திவ்ய தேசம், திருக்குருகூர்.

1 திருக்குருகூரதனுட் பொலிந்து நின்ற பிரான் (4-10-5).

அர்ச்சை நிலையில் ஸௌசீல்யம், ஸௌலப்யம் வாய்ந்து' எல்லா குணங்களாலும் பூர்ணனாக விளங்குவோன்.

2, பேசநின்ற சிவனுக்கும் பிரமன் றனக்கும் பிறர்க்கும், நாயக னவனே (4-10-4).

யாவர்க்கும் காரணமும் காப்பு மாவான்.

3 ...திருக்குருகூரதனுள், ஆடுபுட்கொடி ஆதிமூர்த்திக்கு அடிமை புகுவதுவே (4-10-7).

இதுவே உய்யும் வகை: பகவானை அனுபவிப்பதால் களித்து ஆடுகின்ற கருட பகவானைக் கொடியில் கொண்ட ஸர்வேச்வர னுக்கு அடிமை செய்வதுதான் ஆத்மாவின் ஸ்வரூபம்

## 7. 4. திருக்குறுங்குடி

நம்பியின் திருமேனி எழில், இவனிடம் நமக்கு பிரேமத்தை விளைவிப்பது.

1. நம்பியைத் தென்குறுங்குடி நின்ற—அச்
செம்பொனே திகழுந் திருமூர்த்தியை (1-10-9).

நம்பி—பரமபதத்தில் குணங்களால் பூர்ணனாக இருப்பவன், இங்கு யாவரும் அனுபவிக்குமாறு எழுந்தருளியிருப்பவன். செம் பொன் திகழும் திருமூர்த்தி—மனம், வாக்கு இவற்றிற்கு எட்டாத ஊறு சோதிமயமாய் விளங்குவோன்

2. சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும், செங் கனிவா யொன்றினோடும் செல்கின்ற தென் நெஞ்சமே (5-5-1).

கட்டழகு; திவ்யாயுதங்கள் ஆபரணங்கள் போல் விளங்கிக் கட்டழகைப் பெருக்குகின்றன.

3. கன்னல் பாலமுதாகி வந்தென் நெஞ்சம் கழியானே (5-5-9).

''ஸர்வரஸ:''—எல்லா வகையாலும் இன்பம் தருவோன்.

## 7. 5. வானமாமலை

சிரீவர மங்கல நகர். எம்பெருமானைப் பெறுவதற்கு அவனது திருவடிகளே உபாயமாகக் கருதுகிறார், ஆழ்வார்.

1. சேற்றுத் தாமரை செந்நெலூடு மலர் சிரீவர மங்கல நகர், வீற்றிருந்த எந்தாய்! (5-7-1).

எந்தாய்!—எனக்கு அருள் புரிவதற்காக இங்கு உறைவோனே!

2 ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய் (5-7-10).

எனக்கு, ஆறு—உன்னைப் பெறும் வழி. சரணாக—உபாய மாக. நின் பாதமே தந்தாய்: ' உன் திருவடிகளே சரணம்'' என்று துணிந்திருக்குமாறு அருள் செய்தாய்.

3. வந்தருளி யென் நெஞ்சிடங் கொண்ட வானவர் கொழுந்தே! (5-7-7).

வானவர் கொழுந்து—நித்திய சூரிகளுக்குத் தலைவன். எனக்கு அருள் செய்வதற்காகவே இங்கு வந்தவன். இதோர் அருளே!

## 7. 6. திருக்குடந்தை

பெருமானின் திருநாமம் ஆராவமுது. ஆதலால் இவனிடம் அனுபவிப்பது மாதுர்யம்—இனிமை.

1. ஆராவமுதே! அடியே னுடலம் நின்பால் அன்பாயே நீரா யலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே! (5-8-1)

ஆராவமுதே!—எவ்வளவு அனுபவித்தாலும் மேன்மேலும் விரும்புமாறு இன்பம் விளைவிக்கும் பெருமானே! நின்பால்

அன்பாயே—உன்னிடம் அன்பே வளருமாறு. அடியேன் உடலம் நீராய் அலைந்து கரைய—என் சரீரம் நீர்ப்பண்டமாய்க் கட்டுக் குலையுமாறு கரையச் செய்யும்.

2. யாழினிசையே! அமுதே! அறிவின் பயனே! அரியேறே! (5-8-6).

யாழின் இசை: செவிக்கு இன்பம்; அமுதம்: நாவுக்கு. அறிவின் பயன்—ஞானத்திற்கு இன்பம் தருவது. அரி ஏறு—சிறந்த ஆண் சிங்கம்: கண்ணுக்கு இனிமை.

3. களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றி லேன் (5-8-8).

என் துன்பத்தைப் போக்கினாலும், போக்காவிடினும், களை கண் (புகல்). மற்று புகல் இலேன்; நீயே புகல்.

## 7. 7. திருவல்லவாழ்

அடியார்க்கு அருள்செய்வதே இயல்பாக வுள்ளவன், எம் பெருமான்.

1. நல்லருள் ஆயிரவர் நலனேந்துந் திருவல்லவாழ் நல்லருள் நம் பெருமான் நாராயணன் (5-9-10).

நல் அருள் ஆயிரவர்—பெருமானிலும் விஞ்சிய அருளுடைய ஆயிரம் அடியார்கள். நலன் ஏந்தும்—இவனைப் பற்றிய ஞானம் வாய்ந்து இவனைக் கொண்டாடும் மேன்மை வாய்ந்தோர்.

2. நாமங்களாயிரமுடைய நம்பெருமான் (5-9-11).

நாராயணன் ஆதலால் நாமங்கள் ஆயிரமுடையவன்.

3. தேனார் சோலைகள் சூழ் திருவல்லவாழ் உறையுங் கோனார் (5-9-1).

கோன், கோனார்—தலைவன்.

## 7. 8. திருவண்வண்டூர்

வியக்கத்தக்க பராக்ரமம் வாய்ந்து, யாவரையும் காக்கும் இயல்புடையவன், எம்பெருமான்.

1. மாறில் போரரக்கன் மதிள் நீறெழச் செற்றுகந்த, ஏறு சேவக னார்க்கு (6-1-10).

மாறு இல் போர் அரக்கன்—போர் செய்வதில் தனக்கு எவரும் ஒப்பில்லாத இராவணன். ஏறு சேவகனார்—அடர்ந்த ஆண் பிள்ளைத்தனமுடைய இராமன்.

2. கறங்கு சக்கரக்கைக் கனிவாய்ப் பெருமானைக் கண்டு (6-1-3)

கறங்கு—சுழல்கின்ற கனிவாய்—அடியார்களைப் பெற்றதால் முறுவல். பெருமான் இதனால் முதன்மை தோன்ற விளங்குகிறான்.

3. பெருந்தண் தாமரைக்கண் பெருநீண்முடி நால்தடந்தோள் கருந்திண் மாமுகில் போல் திருமேனி யடிகளையே (6-1-8).

யாவர்க்கும் ஸ்வாமி என்பது தோன்ற விளங்கும் பெருமான்.

## 7. 9. திருவிண்ணகர்

இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான், யாவர்க்கும் பந்துவாகித் தன்னைப் பெறுவதற்குத் தானே உபாயமாய் விளங்குவோன்.

1. நல்குரவும் செல்வும் நரகும் சுவர்க்கமுமாய்
வெல்பகையும் நட்பும் விடமும் அமுதமுமாய்ப்
பல்வகையும் பரந்த பெருமான் என்னை ஆள்வானை (6-3-1).

நல்குரவு—வறுமை. எதிர்நிலைப் பண்புகள் வாய்ந்த நிலை, குணம் போன்றவற்றிற்கு உரியனாக இருப்பவன், இப்பெருமான்.

2. தென்சரண் திசைக்குத் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் (6-3-8).

தென் திசைக்கு சரண்—இங்குள்ளோர்க்குப் புகல்.

3. பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பன் என்னப்பனுமாய்த், தன்னொப்பார் இல்லப்பன் (6-3-9).

பொன் அப்பன்,...—இனிமை குறிப்பு, என் அப்பன்—எளிமை குறிப்பு. பொன், மணி, முத்து—இவற்றைக் கையிற் கொள்வதால் மேன்மை பெறுவது நோக்கு.

## 7. 10. தொலைவில்லி மங்கலம்

இது இரட்டைத் திருப்பதி எனப்பெறும். எம்பெருமான்களின் திருநாமம் தேவபிரான், அரவிந்த லோசனன்.

1. அவ்வூர்த் திருநாமம் கேட்பது சிந்தையே (6-5-10).

இவ்வூர் திருநாமத்தின் இனிமை, பிறர் சொல்லச் செவியாரக் கேட்டு இன்புறுவது.

2. துவளில் மாமணி மாட மோங்கு தொலைவில்லி மங்கலம் (6-5-1).

துவள் இல் மா மணி மாடம்—குற்றமே யில்லாத சிறந்த மணி பதித்த மாடங்கள். ஸ்ரீவைகுண்டம் போல் சிறப்புடையது இந்த திவ்யதேசம்.

3. நோக்கும் பக்கமெல்லாம் கரும்பொடு செந்நெ லோங்கு செந் தாமரை, வாய்க்குந் தண் பொருநல் வடகரை வண் தொலைவில்லி மங்கலம். (6-5-6)

நீர் வளம், நிலவளம்.

## 7. 11. திருக்கோளூர்

இங்கு எழுந்தருளியிருக்கும் பெருமான் வைத்த மாநிதி; ஆபத்துக் காலத்தில் உதவும் தனம் போன்றவன் ஆபத் ஸகத்வம் இவனது குணம்.

1. செல்வம் மல்கி அவன் கிடந்த திருக்கோளூர்க்கே (6-7-7).

அளவற்ற செல்வம் கரைபுரளுமாறு இவன் கிடக்கும் திருக்கோளூர். தன் மேன்மை பாராதே அடியார்களைக் காப்பதற்கே இங்குறைகின்றான் பெருமான்.

2. அனைத்துலகு முடைய அரவிந்த லோசனனை (6-7-9)

திருக்கண்களின் அழகால் இவன் ஸர்வேச்வரன் என்பது தோற்றும்.

3. உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையு மெல்லாம் கண்ணன் எம்பெருமான் (6-7-1).

இப்பெருமான் சோறு போல் போஷகமாயும், நீர்போல் தாரகமாயும், வெற்றிலை போல் போக்ய மாகவும்—எல்லா வகையாலும், நமது இன்ப அனுபவத்திற்குரியவன்.

## 7. 12. திருப்பேரை

பேரெழிலாலும் அரிய குணங்களாலும் அடியாரை இன்புறச் செய்யும் மேன்மை வாய்ந்தவன், இங்கு உறையும் எம்பெருமான்

*1. (என் நெஞ்சம்) வானப் பிரான் மணிவண்ணன் கண்ணன் செங்கனி வாயின் திறத்ததுவே 7-3-2).*

என் நெஞ்சம் இவனது அழகிலே படிந்தது.

*2. வேத வொலியும் விழா வொலியும், பிள்ளைக் குழா விளையாட்டொலியும் அறாத் திருப்பேரை (7 3-1).*

அறா—குறையாமல் என்றும் நிகழ்கின்ற; எப்போதும் விழா, பிள்ளைக் குழாங்களின் விளையாட்டொலி. விளையாட்டொலி, சிறு பிள்ளைகளும் பகவானது மேன்மையே சொல்லிக் கொண்டு விளையாடும் கோஷம் "திங்களும் நாளும் விழாவறாத."

*3. மகர நெடுங் குழைக்காதன் மாயன், நூற்றுவரை அன்று மங்க நூற்ற, நிகரில் முகில் வண்ணன் நேமியான் (7-3-10).*

முகில் வண்ணன் : திருமேனி யழகு; குழை: ஒப்பனை யழகு. நேமியான்—திவ்யாயுதங்களால் அழகு. நூற்றுவரை அன்று மங்க நூற்ற : அடியார்களது துன்பங்களைக் களைவோன்.

## 7. 13. திருவாறன்விளை

இன்பப் பொலிவு இவ்வூர்ப் பெருமானின் குணம்.

*1. இன்பம் பயக்க எழில் மலர் மாதருந் தானும் இவ்வேழுலகை, இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1).*

பிராட்டியுடன் எம்பெருமான் எழுந்தருளி இன்புறும் இந்த திவ்ய தேசத்தில் ஆழ்வார் தாம் பாடிய திருவாய்மொழியை விண்ணப்பஞ் செய்வதாகிய கைங்கர்யத்தை விரும்புகிறார்.

*2. வாணனை ஆயிரந் தோள் துணித்தான் சரணன்றி மற்றொன்றிலமே (7-10-7).*

*3. மாகந்த நீர் கொண்டு தூவி வலஞ்செய்து கைதொழக் கூடுங்கொலோ? (7-10-2).*

மாகந்த நீர்—பரிமளம் மிக்க தண்ணீர். இராமன் மீண்டு எழுந்தருளும் போது, பரதன் நந்திக் ராமம் முதல் பரத்வத்வா ஜாச்ரமம் வரையில் பனிநீரைப் பரப்பியது போல், நீர் தூவி.

## 7. 14. திருக்குளந்தை

வியக்கத்தக்க செயல்கள் வல்லவன் இவ்வூர்ப் பெருமான்.

1. மாடக்கொடிமதிள் தென் குளந்தை வண்குடபால் நின்ற மாயக் கூத்தன் (8-2-4).

வண்குட பால்—அழகியதான மேலைப் பாகத்தில். மாயக் கூத்தன்—வியக்குமாறு செயல்கள்வல்லவன். வண்குடபால்: பரத்வ நிலைபோல் அழகு.

## 7. 15. திருவண்பரிசாரம்

இங்கு உறையும் பெருமான் சுகுமாரமான திருமேனி வாய்ந்த வான்; இவன் விஷயமாக ஆழ்வார் பெரிதுங் கவலை கொண்டு தமது பரிவை வெளியிடுகிறார்.

1. ஆரும் ஆளார் ஆழியும் சங்கும் சுமப்பார் தாம் (8-3-3).

மலையைச் சுமப்பது போல் திருக்கரங்களில் இப்பெருமான் சங்கும் சக்கரமும் ஏந்துகிறான். இவற்றை இவன் கையிலிருந்து வாங்கிக் கொண்டு, தாம் ஏற்றுக் கூடச் செல்ல ஒருவரும் இல்லையே.

2. உருவார் சக்கரம் சங்கு சுமந்து இங்கு உம்மோடும் ஒருபாடு உழல்வான் ஓரடியானும் உளன் (என்று சொல்லுபவர் எவருமிலர்.) (8-3-7).

திருவண் பரிசாரம் போவார் பலர் உளர். "இளைய பெருமாளைப் போலே சங்கு சக்கரங்களை இவரிடமிருந்து வாங்கக் கையில் ஏந்தி உடன் செல்லஅடியேன் ஒருவன் உளன், இதை இப் பெருமானிடம் விண்ணப்பஞ் செய்வோர் இல்லையே"—என்று கலங்குகிறார், ஆழ்வார்.

## 7. 16. திருச்சிற்றாறு

அபாரமான சக்தி வாய்ந்தவன் இப்பெருமான். விபீஷணாழ்வான் விஷயமாக சுக்ரீவன் சங்கிக்க, இராமன் தனது மிடுக்கை விளக்கி இந்தச் சங்கையைப் போக்கினான், "பகைவர் பிசாசராயி

னும் தானவராயினும் யக்ஷராயினும் என் விரல் நுனியாலே அவர்களை மாய்க்க வல்லேன்'' என்று. இவ்வாறான பீடுக்கு இங்குக் குறிப்பு.

1. வார்கடா வருவி யானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி, ஊர்கொள் திண்பாகன் உயிர் செகுத்து அரங்கின் மல்லரைக் கொன்று, ...கஞ்சனைத் தகர்த்த, சீர்கொள் சிற்றாயன் (8-4-1)

யானை மாமலை— குவலயாபீடம் என்ற யானையாகிய மலை. வார் கடா அருவி—பாய்கின்ற மதம், இந்த மலையில் அருவி, இணை மருப்பு குவடு—தந்தங்கள் இரண்டும் இந்த மலைச் சிகரங்கள். ஊர் கொள் திண் பாகன்—யானையின் பலம் குலைந்த போதும் அதை நடத்தவல்ல பேராற்றல் உடையபாகன். மல்லர்—சாணூரன், முஷ்டிகன். சிற்றாயன்—சிறு பிள்ளையாகிய கண்ணன். சார்வு—புகல்.

2. எனக்கு நல்லரணை என தாருயிரை இமையவர் தந்தை தாய் தன்னை. (8-4-6).

3 திகழ என் சிந்தையு ளிருந்தானை... புகழுமா றறியேன். (8-4-8).

## 7. 17. திருக்கடித்தானம்

ஆழ்வாரது வீடாய் தீரக் கலந்தவன், இந்த திவ்ய தேசத்து எம்பெருமான்.

1. எல்லியுங் காலையும் தன்னை நினைந்தெழ
நல்ல அருள்கள் நமக்கே தந்தருள் செய்வான்
அல்லியந் தண்ணந் துழாய்முடி யப்பனூர்
செல்வர்கள் வாழுந் திருக்கடித் தானமே (8-6-1).

நல்ல ... செய்வான்—குற்றம் பாராதே அருளே செய்வான். செல்வர்கள்; இளைய பெருமாள் போலே கைங்கர்யத்தில் ஊன்றியிருப்பவர்கள்.

2. திருக்கடித் தானமும் என்னுடைச் சிந்தையும் ஒருக்கடுத்து உள்ளே உறையும் பிரான் (8-6-2).

ஒருக்கடுத்து—ஒக்க விரும்பி.

3. வானிந நிலம கடல் முற்று மெம் மாயற்கே ஆனவிடத்தும் என் நெஞ்சும் திருக்கடித்தான நகரும் தன தாயப் பதியே (8-6-9).

எம் மாயற்கு வான், இந்நிலம், கடல் முற்றும் ஆன இடத்தும்—யாவும் இவனுக்கேயாக இருந்தும் என்நெஞ்சும் திருக்கடித்தான நகரும் தாயப்பதி—தந்தை வழியாகப் பெற்ற செல்வம் போலே, என் நெஞ்சையும் இந்த திவ்ய தேசத்தையும் ஒக்க விரும்புகிறான் பெருமான்.

## 7. 18. திருப்புலியூர்

நாயக லக்ஷணங்கள் யாவும் வாய்ந்தவன் இங்குறையும் பெருமான்.

1. கருமாணிக்க மலைமேல்...செய்யபிரான் (8-9-1).

2. மின்னு நீள்முடியாரம் பல்கலன் தானுடை எம்பெருமான் (8-9-2).

ஆபரண சோலை: மின்னும் நீள்முடி. ஆரம், பல் கலன் (பல ஆபரணங்கள்). எம்பிரான்: இச் செவ்வியால் என்னைத் தனக் காக்கிக் கொண்டவன்.

3. சீர்வளம் கிளர் மூவுலகுண்டுமிழ் தேவபிரான் (8-9-4).

சீர்வளம் கிளர்—அடியார்களைக் காப்பதற்கான குணங்கள் அடர்ந்த. தேவபிரான்—தேவர்களுக்கும் நாயகன்.

## 7. 19. திருப்புளிங்குடி

அனுபவிக்க வேண்டும் என்ற ஆவலைத் தூண்டும் திருமேனி யழகுடன் கல்யாண குணங்கள் யாவும் வாய்ந்தவன், இத்தலத்துப் பெருமான்.

1. பவளம் போற் கனிவாய் சிவப்ப நீ காண வந்து நின் பல்நிலா முத்தம், தவழ்கதிர் முறுவல் செய்து நின் திருக்கண் தாமரை தயங்க நின்றருளாய் (9-2-5).

பல் நிலா முத்தம்—பற்களின் ஒளி முத்துநிரை போல் விளங்க, தவழ் கதிர் முறுவல் செய்து—ஒளி தவழும்படி முறுவல் செய்து, திருக்கண் தாமரை—திருக்கண்களாகிய தாமரை, தயங்க—ஒளி செய்யுமாறு. அடியார்களைக் காண்பதால் முறுவல்.

2. நீயொருநாள் படிக்கு அளவாக நிமிர்த்த—நின் பாத பங்கயமே தலைக்கணியாய் (9-2-2).

படிக்கு—பூமிக்கு. அளவாக நிமிர்த்த—பரப்பிற்கு ஏற்றவாறு ஆக்கிக்கொண்ட. அணியாய்—ஆபரணமாகுமாறு செய்தருள வேணும் என் தலைக்கு உன் திருவடி ஆபரணமாக வேண்டும்.

3 தடங்கொள் தாமரைக்கண் விழித்து, நீ எழுந்து உன் தாமரை மங்கையும் நீயும் இடங்கொள் மூவுலகும் தொழ இருந்தருளாய் (9-2-3).

பிராட்டியோடு இணைந்த உன்னை இம்மூவுலகத்தோரும் தொழுவதை நான் காண வேண்டும்.

4 வீற்றிடங் கொண்டு வியன்கொள்மா ஞாலத்திதனுளும் இருந்திடாய்—அடியோம், போற்றி ஓவாதே கண்ணிணை குளிரப் புதுமல ராகத்தைப் பருக (9-2-9).

நாங்கள் கண்டு களிக்கும்படி நீ வீற்றிருக்க வேண்டும். அடியோங்கள் உன்னை ஓவாதே போற்ற வேண்டும். எங்களது கண் கண்டு குளிருமாறு. புதுமலர் ஆகத்தைப்பருக—மலர் போலே சுகுமாரமான உன் திருவடிவை, விடாய்த்தவன் தண்ணீர் பருகுவது போல் அனுபவிக்குமாறு.

## 7. 20. வரகுணமங்கை

வீற்றிருக்கும் பேரழகு.

1. வரகுணமங்கை இருந்து (9-2-4). ''பிரான் இருந்தமை காட்டினீர்'' என்பது போல் அழகு.

## 7. 21. திருவைகுந்தம்

நின்றருளும் அழகு.

1. வைகுந்தத்துள் நின்று (9-2-4)

''நிலையார. நின்றான்'' என்றவாறு.

## 7. 22. திருக்காட்கரை

அடியார்களது நெஞ்சில் உறைந்து, இவர்களை அனுபவிப்பிக்கும் திவ்ய குணம், இப்பெருமானது.

1. நீர்மையால் நெஞ்சம் வஞ்சித்து புகுந்து—என்னை ஈர்மை செய்து என்னுயிராய் என்னுயிர் உண்டான் (9-6-3).

நீர்மையால்... புகுந்து—தான் ஸ்வாமி, நான் தாஸன் என்ற முறையிலே பரிமாறலாகும் என்று என் நெஞ்சிற் புகுந்தான். இந்த குணத்தால் என்னை வசீகரித்து, என்னை நீர்ப்பண்டமாக்கி, அனுபவித்தான்; எனக்குத் தன்னாலல்லது செல்லாதபடி பண்ணி என்னைக் கலங்கச் செய்தான்.

2. ஆட்கொள்வானொத்து என் உயிருண்ட மாயனால் (9-6-7).

என்னை அடிமை கொள்வது போல்நெஞ்சில் புகுந்து, என்னை நன்றாக அனுபவித்து வெறுந்தரையனாக்கினான்

3. வாரிக் கொண்டுன்னை விழுங்குவன் காணிலென்று, ஆர்வுற்ற என்னையொழிய என்னில் முன்னம், பாரித்துத்தான் என்னை முற்றப் பருகினான் காரொக்கும் காட்கரை யப்பன் கடியனே (9-6-10).

நான் பாரித்தது. பசியன் சோற்றை வாரி விழுங்குவதுபோலப் பேராவலுடன் இப்பெருமானை அனுபவிப்பது. எனக்கும் முன்னதாக இவன் செய்தது; விடாய்த்தவன் தண்ணீர் பருகுவது போல, என்னைத் தன் பிரேமத்தால் நீர்ப்பண்ட மாக்கி நன்கு அனுபவித்தான். பசியைப் பொறுக்கலாம், தாபத்தைப் பொறுக்க இயலாது.

## 7. 23. திருமூழிக்களம்

பக்தரோடு உறைந்து, இவர்களைப் பிரிய இயலாமை இந்த திவ்யதேசத்துப் பெருமானின் பண்பு.

1. தமரோடங் குறைவார்க்கு (9-7-2),

தமரோடு—தன் பரிஜனங்களுடன். அங்கு உறைவார்க்கு—நித்திய வாஸஞ் செய்பவர்க்கு

2. செக்கமலத் தலர்போலும் கண்கைகால் செங்கனிவாய், அக்கமலத் திலைபோலும் திருமேனி அடிகளுக்கே (9-7-3).

கண், கை, கால், செங்கனிவாய் இவை செக்கமலத்தலர் போலும். செம் கமலத்து இலைபோலும், அவர் திருமேனி—கமலத்து இலை பெருமானின் பேரழகு. அலர்—புஷ்பம்.

3. தெளிவிசும்பு திருநாடாத் தீவினையேன் மனத்துறையும், துளிவார்கட் குழலார்க்கு (9-7-5).

தெளி விசும்பு திருநாடா—நிர்மலமான ஆகாசத்தைத் தான் நித்தியமாக உறையும் ஸ்தானமாகக் கொண்டு, தீவினையேன் மனத்துறையும்—இத்தையே பரமபதமென்று கருதி எளியேனது மனத்துள் உறைபவன். தீவினையேன்—இவனைப் பிரிந்து தரிக்க இயலாத என். துளி வார்கள் குழலார்க்கு—துளித்து ஒழுகுகிற மதுவுடைய குழல்கற்றையால் விளங்கும் தலைவர்க்கு.

## 7. 24. திருநாவாய்

உலகமாகிய பெருங் கடலைக் கடப்பதற்கான தோணி போன்றவன் இப்பெருமான். ''விஷ்ணு போதோ நராணாம்'', ''வைகுந்தன் என்பதோர் தோணி''.

1. அந்தோ! அணுகப் பெறுநாள் என்று எப்போதும் சிந்தை கலங்கித் திருமால்! என்றழைப்பன் (9-8-10).

அணுகப்பெறு(ம்)நாள்—உலகமாகிய பெருங்கடலைக் கடந்து அணுக வாய்க்கும் நாள்.

2 நாளே லறியேன் எனக்குள்ளன நானும் மீளா அடிமைப் பணி செய்யப் புகுந்தேன் (9-8-4).

எனக்கு உள்ளன நாள் (ஏல்) அறியேன்—உன்னை விட்டுப் பிரிந்திருக்க வேண்டிய காலம் எவ்வளவோ, அறிய மாட்டேன். நானும் மீளா அடிமை...புகுந்தேன்—நித்திய சூரிகளைப் போலே தொடர்ந்து அடிமை செய்யும் ஆர்வமுடையேன்.

3. தேவன் விரும்பி யுறையுந் திருநாவாய்
யாவ ரணுகப் பெறுவார்— இனியந்தோ? (9-8-9).

யாவர் அணுகப் பெறுவார்?—இவனை அணுகிக் கைங்கர்யம் செய்வது எனக்கு நேருமோ?

## 7. 25. திருக்கண்ணபுரம்

பக்தர்களுக்குப் புகலாக இம்மை நலனும் மோக்ஷமும் அளிப்பவன் இங்குறையும் எம்பெருமான். இந்த குணம் சரண்ய முகுந்தத்வம் எனப்பெறும். சரண்யன்—நமக்கு புகல். முகுந்தன்—இம்மை நலனும் மோக்ஷமும் தருவோன்.

1. அன்பனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம் (9-10-6).

2. சரணமாகும் தனதா ளடைந்தார்க்கெல்லாம், மரணமானால் வைகுந்தம் கொடுக்கும் பிரான் (9-10-5).

வைகுந்தம் சேருவதற்கு முன் புண்ணிய பாவங்கள் தொலைய வேண்டும். இது பிறவிகள் பிறந்தே நேரும். ஆனால் அண்டிய அன்பர் இப்போதுள்ள சரீரம் விட்டபின்பு. இவனது அருளாலே மோக்ஷம் பெறுவர்.

3. திருக்கண்ண புரம் சொல்ல, நாளும் துயர் பாடு சாராவே (9-10-10).

பக்தியாலும் ப்ரபத்தியாலும் இறைவனை அடையக்கூடும்' அன்றேல் இவனது திருவடிகளில்பணிந்து உய்யக்கூடும். இதற்கும் சக்தி யில்லாதவர்கள் இவனுறையும் ஸ்தலமான திருக்கண்ணபுரம் என்ற திருநாமத்தைச் சொல்லி முக்தி பெறலாம்.

## 7. 26. திருமோகூர்

மோக்ஷம் பெற்றோர் அர்ச்சிராதி கதியில் செல்லும்போது வழித்துணையாவான், இந்த திவ்ய தேசத்து எம்பெருமான்.

1. தோளும் நான்குடைச் சுரிகுழல் கமலக்கட் கனிவாய். காள மேகத்தை யன்றி மற்றொன்றிலம் கதியே (10-1-1).

பரமபதத்திற்கு அழைத்துச் செல்லும் பகவான்காளமேகம் வழி யில் போகும் போது முன்னே ஒரு காளமேகம் பெய்து கொண்டு போவதுபோல் நமது களைப்பை இவன் ஆற்றுவது நோக்கு. இவன் அழைத்துச் செல்வதால் நடந்துசெல்லும் களைப்பெல்லாம் நீங்கும்; அன்றியும் திருமேனி அழகும் மனத்தைக் கவரும்

2. திருமோகூர், சுற்றி நாம் வலஞ் செய்ய நம் துயர் கெடும் கடிதே (10-1-7).

3. காமரூபங் கொண்டு எழுந்தளிப்பான் திருமோகூர் நாமமே நவின்றெண்ணுமின் ஏத்துமின் நமர்காள்! (10-1-10).

காமரூபம்... அளிப்பான்—அடியார்களைக் காப்பதற் கேற்ற திருமேனியைக் கொண்டு காப்பவன்.

## 7. 27. திருவனந்தபுரம்

நித்திய சூரிகளோடு இங்குள்ளோர் வணங்கித் தொழும் பெருமை வாய்ந்தவன் இப்பெருமான்.

அமரராய்த் திரிகின்றார்கட்கு ஆதிசேர் அனந்தபுரத்து
அமரர்கோன் அர்ச்சிக்கின்று அகப்பணி செய்வர்விண்ணோர்
நமர்களோ! சொல்லக் கேண்மின் நாமும் போய் நணுக
வேண்டும் (10-2-6).

அமரராய் திரிகின்றார் — தேவர்கள். ஆதி — இவர்களைப் பிறப்பித்தவன். அமரர்கோன் அர்ச்சிக்கின்று — சேனாபதியாழ்வான் அர்ச்சிக்கும்போது. விண்ணோர் — நித்திய சூரிகள், அகப்பணி செய்வர் — அந்தரங்கமான கைங்கர்யங்கள் செய்வர். நமர்களோ! — நம்முடையோரானவர்களே!

2. மன்றலர் பொழில் அனந்தபுர நகர் மாயன் நாமம், ஒன்றுமோர் ஆயிரமாம் உள்ளுவார்க்கும்பரூரே (10-2-2).

நாமம் — குணத்தைப் பற்றிய திருநாமம். ஒன்றும் — ஏதேனுமொன்றாகிலும், ஓர் ஆயிரமாம் — ஆயிரம் வகையாக. ஒரு திருநாமமே, பல வகையாலும், ரக்ஷகமாகும்; இவ்வாறே ஆயிரங்களும் ரக்ஷகமாவன உள்ளுவார்க்கு — கருதவல்லவர்களுக்கு (இது) உம்பர் ஊரே — ஸ்ரீவைகுண்டம் போன்றதாகும்.

3 மடைத்தலை வாளை பாயும் வயலணி அனந்தபுரம், கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே (10-2-7).

கைங்கர்யத்தின் பயன் குறிப்பு.

## 7. 28. திருவாட்டாறு

அடியார்களது விருப்பத்திற்கிணங்க நடந்து கொள்பவன், இங்குள்ள ஸர்வேச்வரன். இந்த குணம் ஆச்ரித பாரதந்த்ர்யம்.

1. அருள்பெறுவார் அடியார்தம் அடியனேற்கு ஆழியான்
அருள் தருவான் அமைகின்றான் (10-6-1).

ஸர்வேச்வரனுடைய அருளைப் பெற்ற அடியார்களுக்கு அடியேனான எனக்கு, ஈச்வரன் அருள்புரிய நினைக்கின்றான். இது விதி வகை — பாக்யம் என்கிறார் ஆழ்வார், தப்ப முடியாத பாக்யம்

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-3)

3. பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்து ஆளறக் கொண்டான் (10-6-10).

ஆட்செய்—(எனக்கு) அடிமை செய்வாய். பிறப்பு அறுத்து—பிறவிகளை அறவே ஒழித்து ஆள் கொண்டான்—நித்தியமான கைங்கர்யத்தையும் கொண்டான்.

## 7. 29. திருமாலிருஞ்சோலை

மெய்யன்பரது மேனியில் மோகங்கொள்பவன் இங்குறைபவன் ஆழ்வாரது திருமேனியில் மோகங் கொண்டு, இந்தத் திருமேனியோடே இவரை ஸ்ரீவைகுண்டத்திற்கு அழைத்துச் செல்ல விரும்பினான், திருமாலிருஞ்சோலைப் பெருமான். இந்த விருப்பத்தைத் தவிர்க்குமாறு ஆழ்வார் இறைஞ்சினார்.

1. என்னை முற்று முயிருண்டு என் மாயவாக்கை யிதனுள் புக்கு, என்னை முற்றுந் தானேயாய் நின்ற மாயவம்மான் (10-7-3).

என்னை முற்றும் உயிர் உண்டு—எல்லா வகையாலும் என் ஆத்மாவோடு கலந்து அனுபவித்து. என் மாய ஆக்கை இதனுள் புக்கு—இழிவான சரீரத்திலும் பிரேமம் கொண்டு. என்னை முற்றும் தானேயாய் — ஆத்மா, சரீரம் இவற்றிற்குத் தானே அபிமானியாகி, "நான், என்னுடைய" என்ற கருத்துக் கொள்ளா வகையில் பரிமாறினான்.

2. பண்ணார் பாடலின் கவிகள் யானாய்த் தன்னைத் தான் பாடித், தென்னா வென்னும் என்னம்மான் (10-7-5).

பண்ணும் இசையும் சிறந்த பாடல்கள் தன்னைப் பற்றியவை—என்னைக் கொண்டு பாடுவித்து. தென்னா என்னும்—பாட்டின் இனிமையால் "தென்னாதென்னா" (என்ன இனிமை! என்ன இனிமை! என்று இவன் முழங்குகிறான்.

3. அருமா மாயத்தெனது துயிரே மனமே வாக்கே கருமமே ஒருமா நொடியும் பிரியான் என்னூழி முதல்வ னொருவனே (10-6-8).

அரு மா மாயத்து எனது உயிரே—இழிவாய் வியக்கத்தக்க ப்ரக்ருதியோடு தொடர்பு கொண்டுள்ள ஆத்மாவையும், மனம், வாக்கு, கருமம்—இவற்றையும். ஒரு மா நொடியும் பிரியான்—இறைப்போதும் பிரிய விரும்புவதில்லை.

## 7. 30. திருப்பேர் நகர்

இங்குறையும் பெருமானது குணம், அடியார்களை ஏற்றுக் கொள்ள அவகாசம் பார்த்திருப்பது.

1. திருமாலிருஞ் சோலை மலை யென்றேன்—என்னத் திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-1).

ஏதேனுமொரு மலையின் பேரைச் சொல்லுவது போலே ஆழ்வார் 'திருமாலிருஞ் சோலை'' என்றார். தன்னையே சொல்லி யதாகக் கருதிப் பெருமான் இவரது திருவுள்ளத்தில் புகுந்தான்.

2. பேரே யுறைகின்ற பிரான் இன்று வந்து பேரே னென்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-2).

பேரேன் என்று—''இனி ஒருநாளும் போக மாட்டேன்'' என்று சொல்லி, பெரிய பிராட்டியார் தன்னிடம் சொல்லு மத்தையே (அகலகில்லேன் இறையும்) என்பதையே சொல்லுகின்றான்.

3. உண்டு களித்தேற்கு உம்பர் என் குறை? மேலைத்
தொண்டு களித்து அந்திதொழும் சொல்லுப் பெற்றேன்
வண்டு களிக்கும் பொழில் சூழ் திருப்பேரான்
கண்டு களிப்பக் கண்ணுள்நின் றகலானே (10-8-7).

உண்டு களித்தேற்கு—இவனோடு கலந்து அனுபவித்துக் களித்த எனக்கு. உம்பர் என் குறை—மேலே சென்று அனுபவிக்க வில்லை என்ற குறைதான் உண்டோ? மேலை தொண்டு உகளித்து—அபரிதமான தாஸ்ய ரஸத்தை அனுபவித்து அந்தி தொழும் சொல்—பிரேமம் மிக்கு நம: என்று சொல்லவும் பெற்றேன். நான் கண்டு களிக்குமாறு, அவன் என் கண்ணுள் நின்று அகலான்.

## 8. த்வயப் பொருள்

த்வயம் என்பது இரண்டு வாக்கியங்களாலான மந்த்ரம்—மந்த்ர ரத்னம் என்று பாராட்டப்பெறுவது. இவ்வாக்கியங்கள்: ஸ்ரீமந்நாராயண-சரணௌ சரணம் ப்ரபத்யே; ஸ்ரீமதே நாராயணாய நம: என்பன. இவற்றின் கருத்து: பெரிய பிராட்டியாரோடு எப்போதும் இணைந்துள்ள நாராயணனது திருவடிகளைச் சரணமாகப் பற்றுகிறேன்; பெரிய பிராட்டியாரோடே இணைந்துள்ள நாராயணனுக்கு எல்லாவகைக் கைங்கர்யங்களையும் செய்வேன். இக்கருத்துக்கள் திருவாய்மொழியில் முதல் பத்து முதல் பத்தாம் பத்து வரையில் அடங்கியுள்ளன. ''த்வயார்த்

நும் தீர்க்க சரணாகதி''; ஆதலால் ஸ்ரீராமாயணத்தைப்போல் திருவாய்மொழியும் சரணாகதி-க்ரந்தமாகும்.

## 8. 1. ஸ்ரீமத்

ஸ்ரீ:— பெரிய பிராட்டியார். ஸ்ரீமத்—பெரியபிராட்டியாரோடே என்றும் பிரியாமலிருக்கும் இக்கருத்து முதற் பத்தில் வந்துள்ளது.

1. மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறல் அடிகள் (1-3-1).
   அடிகள்—ஸ்வாமி.
2. திருமகளார் தனிக் கேள்வன் (1-6-9).
3. திருவின் மணாளன் (1-9-1).
4. செல்வ நாரணன் (1-10-8).
   பெரிய பிராட்டியார் தனக்குச் செல்வமாக உடையவன்.

## 8. 2. நாராயணன்

உலகங்களைக் காப்பவன் என்பது குறிப்பு இது இரண்டாம் பத்தில் விளங்கும்.

1. ...விண்ணோர் நாயகன்
   எம்பிரான் எம்மான் நாராயணனாலே (2-7-1).

   விண்ணோர் நாயகன் எம்பிரான்—நித்திய சூரிகளை அநுபவிக்கச் செய்பவன். அமமான்—அவர்களைப் போலே என்னைத் தனக்காக்கிக் கொண்டவன்; உதாரன்.

2. தோற்றோம் மடநெஞ்சம் எம்பெருமான் நாரணற்கு (2-1-7).
3. நாரணன் முழுவே முலகுக்கும் நாதன் வேத மயன் (2-7-2).

   வேதமயன்: ' நாராயணை பரம் ப்ரஹ்ம'' என்று வேதத்தால் போற்றப்படுகிறவன். இவனே உலகங்களுக்குக் காரணம்.

## 8. 3. சரணை

சரணை—திருவடிகள் இரண்டையும் பெரிய பிராட்டியாரோடு ஒன்றியிருக்கும் இவனது திருவடிகள் இரண்டையும், இது மூன்றாம் பத்தில் விவரம் பெற்றுள்ளது.

1. கொம்பு போல் சீதை பொருட்டு இலங்கை நகர் அம்பெரியுய்த்தவர் தாளிணை... (4-2-8).

அம்பு எரி உய்த்தவர்—சிலையில் பொருந்தும் போது அம்பு, வெளிவரும் போது நெருப்பு அம்பாலே எரி உய்த்தவர்.

2. ...நான்முகனும் சடைமுடி யண்ணலும், செம்மையால் அவன் பாத பங்கயம் சிந்தித் தேத்தித் திரிவரே (3-6-4).

3. மூவுலகுந் தொழுதேத்தும் சீரடியானே! (3-8-1).

4. ...அன்று தேர் கடவிய பெருமான் கனை கழல் காண்பது என்று கொலோ? (3-6-10).

இவனது திருவடிகளை வணங்குவதே யாவர்க்கும் இன்பம்.

## 8. 4. சரணம்

சரணம்—புகல், உபாயம், ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடிகளே புகல் என்பது நாலாம் பத்தில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

1. திருநாரணன் தாள் காலம்பெறச் சிந்தித்து உய்ம்மினோ (4-1-1).

2. மேவிநின்று தொழுவார் வினை போக மேவும் பிரான் (4-5-4).

மேவி நின்று—வேறெதுவும் பயனாகக் கருதாமல், நிலையாக நின்று. தொழுவார்—தொழும் அடியார்களது. வினை போக—. மேவும் பிரான்—கலந்து பரிமாறும் பெருமான். சரணமாகப் பற்றுவதன் பயன்.

3. கூட்டரிய திருவடிக்கள் எஞ்ஞான்று கூட்டுதியே? (4-9-8).

கூடு அரிய—பெறுதற்கரிதான கூட்டுதி—திருவடிகளில் சேர்த்துக் கொள்வாய் எஞ்ஞான்று—எக்காலம்.

## 8. 5. ப்ரபத்யே

பற்றுகிறேன் என்ற கருத்து ஐந்தாம் பத்தில்.

1. சங்கு சக்கரத்தாய்! தமியேனுக்கு அருளாயே (5-7-2).

அருள் பெறுவதற்கு, சங்கு சக்கரம் ஏந்திய உன்னையே பற்றுகிறேன்

2. உன்னா லல்லால் யாவராலும் ஒன்றுங் குறை வேண்டேன் (5-8-3).

உன்னை நான் பெறுவது, உன்னுடைய அருளாலேயே; என் முயற்சியா லன்று, பிறரைக் கொண்டும் உன் அருள்பெறுவதன்று.

உன்னைத் தவிர வேறு எவரையும் எதையும் எனக்குப் புகலாகக் கருதமாட்டேன்.

3. நாகணைமிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு (5-10-11)

''சரணௌ சரணம்'' என்ற கருத்து.

இதுவரையில் வந்துள்ளது முதல் வாக்கியத்தின் பொருள்: பெரிய பிராட்டியாரோடு பிரிவில்லாமல் என்றும் உறைகின்ற நாராயணனது திருவடிகளைப் புகலாகப் பற்றுகிறேன்—என்பது.

## 8. 6. ஸ்ரீ மதே

இரண்டாம் வாக்கியத்தின் கருத்து: பெரிய பிராட்டியாரோடு எப்போதும் உறைகின்ற நாராயணனுக்கு எல்லா அடிமையும் செய்வேன். இந்தச் சேர்த்தியிலே நாராயணனது குணங்கள் : வாத்ஸல்யம், ஸ்வாமித்வம், ஸௌசீல்யம், ஸௌலப்யம், ஞானம், சக்தி.

1. ...திருமா மகளிருந் தாம்—மலிந்திருந்து வாழ்பொருநல் வடகரை வண் தொலைவில்லி மங்கலம் (6-5-11).

தலைவி நிலையில் ஆழ்வார் இச்சேர்த்தியில் வணங்குகிறார். ''அரவிந்த லோசனனே!'' என்று வணங்கி அழைக்கிறார்.

2. அடிமை செய்வார் திருமாலுக்கே (6-5-8).

3. கோலத் திருமாமகளோ டுன்னைக் கூடாதே
சாலப் பலநாள் அடியே னின்னம் தளர்வேனோ? (6-9-5).

தாயும் தகப்பனுமாகிய சேர்த்தி நேராதே, சிறு குழந்தை நாக் கொட்டித் தவிப்பது போல் ஆழ்வார் தவிக்கிறார். இந்தச் சேர்த்தியாலேதான் எல்லா நலனும்.

## 8. 7. பெறும் இன்பம்

இச்சேர்த்தியில் வணங்கிப் பெறும் இன்பம் ஏழாம் பத்தில் வந்துள்ளது.

1. கன்னலே! அமுதே! கார்முகில் வண்ணனே! (7-1-2).

''அகலகில்லேன்'' என்ற பாசுரத்தில் குறிப்பிட்ட சேர்த்தியில் அனுபவிப்பதன் பயன்.

கன்னல்—கருப்புக்கட்டி. அமுது—சாவாமல் காக்கும் மருந்து. கார்முகில் வண்ணன்—திருமேனி யழகு

2. என் திருமாலும் என்னை..., விசும்பாளியைக் காணேனோ? (7-6-7).

விசும்பாளி—பரமபத நாதன்.

3. இன்பம் பயக்க எழில் மலர் மாதரும் தானும் இவ்வேழுலகை இன்பம் பயக்க இனிதுடன் வீற்றிருந்து ஆள்கின்ற எங்கள் பிரான் (7-10-1).

பிராட்டியோடு பெருமான் சேர்ந்திருப்பதால் ஏழுலகத்தவர் இன்பம் அனுபவிக்கின்றனர்.

## 8. 8. நாராயணன்

இவன் யாவர்க்கும் இறைவன் என்ற கருத்து எட்டாம் பத்தில்.

1. தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ, மற்றமரர் ஆட்செய்வார் (8-1-1).

பெரிய பிராட்டியாருக்கும் பூமிப் பிராட்டிக்கும் நாயகன்; அமரர் இவனுக் குரியவர்.

2. காண்டகு தாமரைக் கண்ணன் கள்வன் விண்ணவர் கோன் நங்கள் கோனைக் கண்டால் (8-2-2).

காண் தகு—காணத்தக்க. கள்வன்—தன் நோக்காலேயே என்னை மயக்கி, என் ஆத்மாவையும் மனத்தையும் கவர்ந்தவன். நித்ய சூரிகளுக்கும் மற்றைய ஜீவாகளுக்கும் இவன் நாதன்.

3 நேர்பட்ட நிறை மூவுலகுக்கும் நாயகன் (8-9-11)

## 8. 9. கைங்கர்யம்

நாராயணாய என்ற சொல்லில் ஆய என்ற உருபு குறிப்பது, கைங்கர்யம் செய்ய வேண்டு மென்பது. இது ஒன்பதாம் பத்தில் விளக்கம் பெறுகின்றது

1. பண்டை நாளாலே நின் திருவருளும் பங்கயத்தாள் திருவருளும், கொண்டு நின் கோயில் சீய்த்துப் பல்படிகால் குடிகுடி வழி வந்தாட்செய்யுந் தொண்டரோர்க் கருளி (9-2-1).

பல் படிகால்—கணக்கில்லாத காலம், உன் கடாக்ஷம் பெற்ற நாள் முதற்கொண்டு குடிகுடி—குடும்பத்தோடு. வழி வந்து—சாஸ்த்ரங்கள் விதிக்கும் முறைப்படி.

2. தொடர்ந்து குற்றேவல் செய்து (9-2-3).

3. ... நாளும் மீளா அடிமைப் பணிசெய்யப் புகுந்தேன் (9-8-4).

4. கள்ளவிழும் மலரிட்டு நீரிறைஞ்சுமின் (9-10-2).

5 பற்றுறவேண்டுவீர்! ... பணிமின் அவன் நாள்களே (9-10-11).

## 8. 10 கைங்கர்யத்தின் பயன்

பெருமானும் பிராட்டியும் இணைந்துள்ள சேர்த்தியில் கைங்கர்யம் செய்து இன்புறுவது பத்தாம் பத்தில் விளக்கம் பெறும்.

1. கொண்ட கோயிலை வலஞ்செய்திங் காடுதுங் கூத்தே (10-1-6)

வலஞ்செய்து களிப்பது.

2 இன்று போய்ப் புகுதிராகில் எழுமையும் ஏதம் சாரா (10-2-2).

திருவனந்தபுரம் போய்க் கைங்கர்யம் செய்யும் பயன். திவ்ய தேச யாத்ரை.

3. பிணி யொன்றுஞ் சாரா, பிறவி கெடுத்தாளுந் (10-4-7).

4. அமரத் தொழுவார்கட்கு, அமரா வினைகளே (10-5-9).

5. காட்டித் தன் கனைகழல்கள், கடுநகரம் புகலொழித்த, வாட்டாற்றெம் பெருமானை (10-6-11).

6. தொண்டு உகளித்து அந்திதொழுஞ் சொல்லுப் பெற்றேன் (10-8-7).

7. அவாவற்று வீடு பெற்ற (10-10-11).

## 8. 11. ஒரு கருத்து

திருவாய்மொழியில் முதல் மூன்று பத்து உத்தர வாக்கியத்தையும் (த்வயத்தின் இரண்டாவது வாக்கியத்தையும்), பின் மூன்று பத்து முதல் வாக்கியத்தையும் விவரித்து, மற்றைய பத்துக்கள் நான்கும் இவற்றின் தொடர்பாக அமைந்துள்ளன.

(1) உத்தர வாக்கியத்தைக் காட்டுவன:

1. வண்புகழ் நாரணன் (1-2-10).

2. செல்வ நாரணன் (1-10-8)

3. தொழுதெழு, சொற்பணி செய், அயர்ப்பிலன் என்பன பகவத் கைங்கர்யம் புருஷார்த்தம் என்று காட்டுகின்றன.

4. களிப்பும் கவர்வு மற்று, ஒளிக்கொண்ட சோதியமாய் (2-3-10). நலமந்தமில்லதோர் நாடு புகுவீர் (2-8-4)—பெற்ற நன்மை.

5. ஒழிவில் காலமெல்லாம்...வழுவிலா அடிமை செய்ய வேண்டும் (3-3-1). நம: என்பதன் கருத்து

6. புகழு நல்லொரு வனென்கோ (3-4-1) —வாசிக கைங்கர்யம்.

7. நான் ஓர் குறைவிலனே (3-10-1), ஒன்றும் துயரிலனே (3-10-6), என்றும் கேடிலனே (3-10-10)—கைங்கர்யத்தின் பலன்.

(2) பூர்வ வாக்கியத்தைக்காட்டுவன :

8. திருநாரணன் தாள் காலம் பெறச் சிந்தித் துய்ம்மினோ (4-1-1).

9. கழல்களவையே சரணாகக் கொண்ட (5-8-11): சரணௌ என்ற கருத்து.

10. நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கு (5-10-11) சரணம் என்ற கருத்து.

11. அலர்மேல் மங்கை யுறை மார்பா! ...உன் அடிக்கீழமர்ந்து புகுந்தேனே. (6-10-10).

ப்ரபத்யே என்ற கருத்து.

## 9. ஆழ்வார் பெற்ற அருள்

உலகினரை உய்விப்பதற்காகத் தான் கொண்ட பிறவிகள் பயனற்றமை கண்டு, ஸர்வேச்வரன், ஸம்ஸாரிகளுள் ஒருவரைக் கொண்டு உலகினரைத் திருத்தத் திருவுள்ளங் கொண்டான். இவனது அருள் நோக்கு தென் திசையில் சார்ந்தது; இதனால் இவ்வாழ்வார் மெய்ஞ்ஞானம் வாய்ந்து, பகவானது மேன்மையை விரித்து உலகினரைத் திருத்த முற்பட்டார். உலகமாகிய தாமரை அலர்வதற்காகக் கண்ணனாகிய சூரியன் தேவகியின் கர்ப்பமாகிய கிழக்குத் திசையில் தோன்றியது போல், ஆழ்வாராகிய பாஸ்கரன் தென்திசையில் உதித்ததால் அறிவின்மையாகிய இருள் நீங்கிற்று. தாம் அனுபவித்த தெய்வத்தாலே பெற்ற நன்மைகளை ஆழ்வார் உலகினருக்கு வெளியிட்டு இவர்கள் வேதநெறியில்

திற்குமாறு உபதேசஞ் செய்கிறார்; குறிப்பாகத் தம்மைப் பெறுவ தற்கு எம்பெருமான் கொண்ட முயற்சிகளையும், உலக வாழ்க்கை யின் இழிவை அறிவுறுத்தித் தன்பாலே மனங்கொள்ளச் செய்து, ஸ்ரீவைகுண்டத்தை அளித்ததையும் திருவாய்மொழியில் விவரிக் கிறார். திருமாலின் அருளால் ஓர் உயிர் வீடு பெற்றுய்ந்த வரலாறு, இந்தப் பிரபந்தமாகும்.

## 9. 1. பெற்ற நலம்

1. உலக வாழ்க்கையில் வெறுப்பு:

பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும், இந்நின்ற நீர்மை இனியா முறாமை (திரு. வி. 1).

பொய் நின்ற ஞானம்—அகங்காரம் மமகாரம் இவற்றை விளைவிக்கும் ஞானம் இதனால் விளையும் ஒழுக்கம், இந்த ஒழுக் கத்தின் பயனாய் அழுக்குடம்பு: உலகத்தில் பல பிறவிகள்.

2. ஆசை கரைபுரண்டமை: பகவான் தனது திருமேனியின் பேரெழிலைக் காட்ட, இப்பெருமானைக் காண வேண்டும் என்ற ஆசை திருவாசிரியத்தில் காணலாம்.

செக்கர்மா முகிலுடுத்து மிக்க செஞ்சுடர்ப் பரிதி சூடி... திருவா. 1).

3. ஆசைதீர வாழ்த்தியது: திருவந்தாதியில்:

எப்போதும் ஈதே சொல் என் நெஞ்சே!...மொய் கழலே ஏத்த முயல் (பெ. திரு. 87).

4. இவர் பெற்றது:

மயர்வற மதிநலம் (1-1-1).

மயர்வு—அறிவின்மை, அறிவு தோன்றாமை, ஐயம், திரிபு. அற—இது நீங்குமாறு. மதிநலம்—பக்தி. பக்தியால் பெற்ற ஞானம், பரபக்தி, பரஞானம், பரம பக்தி.

இத்தகைய பக்தியின் விளைவு: ஸர்வேச்வரனுடைய மேன்மையை நினைப்பது, கீர்த்தனஞ் செய்தல், பாசத்துடன் திருவடிகளை வணங்குவது போல்வன.

## 9. 2. கீர்த்தனம்

ஆழ்வார் கீர்த்தனஞ் செய்வது பகவானின் திருநாமங்கள்

1. பாடுமென் நா அவன் பாடல் (1-6-3).

2. அழுவன் தொழுவன் ஆடிக் காண்பன் பாடி அலற்றுவன் (5-8-5).

3. புன்னையம் பொழில்சூழ் திருப்புலியூர் புகழு மிவளே (8-9-2), தலைவி நிலையில் இவர் செய்வது.

## 9. 3. சிந்தனை

இவர் பகவானது அரிய குணங்களைச் சிந்தனை செய்து வந்தார் இந்த அரிய குணங்களுள் ஒன்று.

(1) பரந்த மனப்பான்மை : மனத்தில் அன்பில்லாமல் பொய்யாகக் கூறினாலும், ஸர்வேச்வரன் இது மெய்யென்று அருள் சுரக்கும் பண்பினன்.

1 கையார் சக்கரத்தென் கருமாணிக்கமே என்றென்று, பொய்யே கைம்மை சொல்லிப் புறமே புறமே ஆடி, மெய்யே பெற்றொழிந்தேன் (5-1-1).

''கை ஆர் சக்கரத்து என் கரு மாணிக்கமே!'' என்று மனமார வாழ்த்துவது போல், அன்பே சிறிதுமில்லாமல் பொய்யாகக் கூறினேன். கைம்மை—கபடம். இவ்வாறு பொய்யாகக் கூறினாலும் பெருமானைப் பெறக் கூடும்.

2. தேவார் கோலத்தொடும் திருச்சக்கரம் சங்கினொடும், ஆவா என்றருள் செய்து அடியேனொடு யானானே (5-1-9).

தே ஆர் கோலம்—பேரெழில் வாய்ந்த திருமேனி ஆஆ என்று —''என்னே! இவரது பக்தி''என்று. அடியேனொடும் ஆனான்—மனக்கு அபிமானியானான்.

(2) எளிமை : வெண்ணெயைக் களவில் உண்பதில் விருப்பங் கொண்டு, தாயால் கட்டுண்டேங்கியது.

3. எத்திறம்! உரலினோடு இணைந்திருந்து ஏங்கிய எளிவே! (1-3-1)

இந்த எளிமையை நினைத்து ஆழ்வார் ஆறு மாத காலம் மோகித்துக் கிடந்தார்.

அவதரித்து மனிசர்க்கா படாதன பட்டான் ஸர்வேச்வரன்.

4. பிறந்தவாறும் வளர்ந்தவாறும் பெரிய பாரதம் கைசெய்து (5-10-1)

பிறந்தவாறும் : திருட்டுப் பிறக்க வேண்டும்? ஒரு வெடி விளக்கு இல்லாமலா பிறக்க வேண்டும்? சோபனம் சொல்லுவார் இல்லாமலா பிறக்க வேண்டும்? ''பூண்டு அன்னை புலம்பவா'' பிறக்க வேண்டும்?

வளர்ந்தவாறும் : உலக நாயகன் மறைந்தா வளரவேண்டும்?

இவ்வாறெல்லாம் சிந்தனை செய்து ஆழ்வார் பின்னும் ஆறு மாதம் மோக முற்றுக் கிடந்தார்.

(3) திருமேனியின் கட்டழகை ஆழ்வார் எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தார்.

5. கண்கள் சிவந்து பெரியவாய், வாயும் சிவந்து கனிந்து-உள்ளே வெண்பல் இலகு சுடரிலகு, விலகு மகர குண்டலத்தன் (8-8-1).

பெரியவாய் கண்கள் சிவந்து: பெரிய தாமரை மலர்போல் சிவந்து. கனிந்து—அடர்ந்து உள்ளே—வாய்க்குள்ளே. வெண் பல் இலகு சுடர்—வெண்பல்லின் புகர். விலகு மகர குண்டலத்தன்—அலைந்து வருகின்ற மகர குண்டலங்கள் பூண்டவன். இவ்வாறான செவ்வியை நினைத்துப் பின்னுமோர் ஆறு மாத காலம் இவ்வாழ்வார் மோகித்துக் கிடந்தார்.

## 9, 4. அகல நினைத்தார்

இத்தகைய மேன்மை வாய்ந்தவனைத் தமது வாயால் புகழ்வது, இவனது மேன்மைக்கு இழுக்காகுமென்று ஆழ்வார் கருதினார்.

1. வளவேழுலகின் முதலாய வானோ ரிறையை அருவினையேன் களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா! என்பன் பின்னையும், தளவேழ் முறுவல் பின்னைக்காய் வல்லானாயர் தலைவனாய், இளவேறேழுந் தழுவிய எந்தாய்! என்பன் நினைந்து நைந்தே (1-5-1).

பரிவால் சிறந்த யசோதைப் பிராட்டி ''களவேழ் வெண்ணெய் உண்ட கள்வா!'' என்பாள்; இதையே எளியேனாகிய நானும் சொல்லுவதா? நப்பின்னைப் பிராட்டி, ''இளவேறு ஏழும் தழுவிய எந்தாய்!'' என்பாள்—இதையே நான் என் எச்சில் வாயால் சொல்லுவதோ?

2. அடியேன் சிறிய ஞானத்தன், ...செடியார் ஆக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும் திருமாலை, அடியேன் காண்பான் அலற்றுவன், இதனில் மிக்கோர் அயர்வுண்டே? (1-5-7)

அடியாரை, செடி ஆர் ஆக்கை (பாவங்களுக்கு ஆதாரமான ரீரத்தை), தீர்க்கும் திருமாலை. அடியேன்—நான் அவனுக்கு அடியேன் எனக் கருதி. காண்பான்—பாவியான என் கண்களால் காண விரும்பி. அயர்வு— அறிவுகேடு; என்னே என் அறிவுகேடு!

## 9. 5. பாசம், பரிவு

ஸர்வேச்வரனுடைய திருமேனியின் கட்டழகு, கல்யாண குணங்கள் யாவற்றையும் நன்கறிந்ததால், ஆழ்வார் இவனிடம் பாசமும் பரிவுங் கொண்டார். இவன் சிறு பிள்ளையாய் ஆலந் தளிரில் துயில்வதை நினைத்து, இவன் இடம் வலம் புரண்டால் என்ன நேருமோ என்று கவலை கொள்கிறார்.

1. ஆலம் பேரிலை அன்னவசஞ் செய்யும் அம்மானே! காலம் பேர்வதோர் காரிருள் ஊழி ஒத்துளதால்! உன், கோலங் காரெழில் காணலுற்றாழுங் கொடியேற்கே (8-3-4).

ஆலம் பேரிலை—சிறு ஆலந்தளிர். அன்ன வசஞ் செய்யும் உலகங்களை உண்டு வயிற்றுள் கொள்வதை நினைத்து. உன் கோலம் காணல் உற்று ஆழும் கொடியேற்கு—உனது அழகிய திரு மேனியைக் காண ஆசைப்பட்டுப் பெறாது வருந்தும் எனக்கு. காலம் பேர்வது—ஒவ்வொரு நொடிப் போதும். ஓர் கார் இருள் ஊழி ஒத்துளது—உனக்கு என்ன நேருமோ என்று கலங்கும் எனக்குப் பெரிதுங் கனத்து இருளடர்ந்த நீண்ட ஊழிபோல் தோன்றுகின்றது.

2. அரும்பாளர் ஆழியும் சங்கும் சுமப்பார்தாம், வாளும் வில்லுங் கொண்டு பின் செல்வார் மற்றில்லை (8-3-3).

சங்கு சக்கரம் ஏந்தி நிற்கும் பகவானைக் குறித்து ஆழ்வார் இரங்குவது: பெரிய மலைகளைச் சுமப்பது போல் இவற்றைக் கை களில் சுமந்து நடக்க வேண்டுமோ? இவரது கரங்கள் நோவாவோ? வாளும் வில்லும் ஏந்தி இளையபெருமாள் பின்தொடர்ந்ததுபோல் இந்தச் சங்கு சக்கரங்களை ஏந்திப் பின் செல்வார் இல்லையே! நம்மை ஏவினால், ஏந்திச் செல்லலாம் என்பது ஆழ்வாரது திரு வுள்ளம் போலும்!

3 ஊழி தோறூழி ஓவாது வாழிய என்று யாம் தொழ இசை யுங் கொல்! (திருவா-4)

இப்பெருமான் பல ஊழிகள் வாழ்க என்று வாழ்த்த எனக்கு வாய்க்குமோ? என்கிறார் ஆழ்வார். பெரும் பரிவால் பெரியாழ்

வார் என்ற திருநாமம் படைத்தவர், "பல்லாண்டுகள் வாழ்க" என்றிசைந்தார்; இவரோ "வாழி பல்லூழிகள்" என்கிறார்.

இவ்வுலகிற் பரிவதற்கு ஒருவரும் இல்லையே என்று கலங்கி, ஒரு பக்கத்தில் தாம் இருப்பதாகக் கருதுகிறார், ஆழ்வார்:

4. உம்மோடு, ஒரு பாடுழல்வான் ஓர் அடியானும் உளன் (8-3-7).

திருவண்பரிசாரத்துப் பெருமானே! ஒரு பக்கம் இளைய பெருமாள் உடன் சென்றது போல, அடியேனும் உடன் செல்ல உளன் (இருக்கிறேன்)

4. கொடியார் மாடக் கோளூரகத்தும் புளிங்குடியும்
மடியாதின்னே நீ துயில் மேவி மகிழ்ந்தது தான்,
அடியாரல்லல் தவிர்த்த அசைவோ? அன்றேல் இப்
படிதான் நீண்டு தாவிய அசைவோ பணியாயே, (8-3-5).

திருக்கோளூரிலும் திருப்புளிங்குடியிலும் எம்பெருமான் களைப்பாலே சயனித்துக் கொண்டிருக்கிறான் என்பது ஆழ்வார் கருத்து. கொடியார் மாட—கவலையில்லாமல் தூங்குபவன் இவ்வாறு யாவரும் காணுமாறு கொடி கட்டின மாடங்கள் அடர்ந்த இடத்திலேயோ தூங்குவது? எவராலும் நீங்கு நேரு மென்று அச்சம். மடியாது—களைப்பாலே இடம் வலம் கொள்ளாமல். அடியார் அல்லல் தவிர்த்த—இந்திரன் முதலிய தேவர்களது துன்பத்தைத் தவிர்க்க இராமபிரானாய்ப் பாடு பட்டது. படி—பூமி. உரையாயே—அருளிச் செய்ய வேணும்; தாள்கள் நொந்தனவெனில், அவற்றைப் பிடிப்பேன்; தோள்கள் நொந்தனவெனில், அவற்றைப் பிடிப்பேன்; தோள்கள் நோவது: வில்லேந்திக் கணைகள் எய்ததால்

## 9. 6. போலி கண்டு அலமாப்பு

ஆழ்வார் பகவானைப் பிரிந்து ஆற்றாமையாலே தலைவி நிலையில், இவனது தொடர்பு வாய்ந்தவற்றைக் கண்டு, அல்லது போலிகளைக் கண்டு கலங்குகிறார்.

1. மண்ணையிருந்து துழாவி வாமனன் மண்ணிது வென்னும் (4-4-1).

2. கோமளவான் கன்றை புல்கிக் கோவிந்தன் மெய்த்தனை என்னும் (4-4-5).

3. நீறு செவ்வே இடக்காணில் நெடுமால் அடியார் என்று ஓடும் (4-4-7).

நீறு—ஏதேனும் ஒரு பஸ்மம் (பொடி), செவ்வே—நெற்றியில் கீழ் மேலாக (குறுக்காக அல்லாமல்), இவர்களைக் கண்டால் தலைவி, இவர்களை திருமாலின் அடியார்கள் என்று அணுகுவாள்.

4. செய்ய தோர் ஞாயிற்றைக் காட்டிச் சிரீதரன் மூர்த்தி ஈதென்னும் (4-4-2).

செய்ய—சிவந்த ஒளியுடைய ஞாயிறு—சூரியன். மூர்த்தி—வடிவு: "ஸவித்ரமண்டல-மத்ய-வர்த்தி நாராயண" என்பது போல், சூரியன் நாராயணனது திருவடிவே என்பாள்.

5. திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே என்னும் (4-4-8).

காக்கும் இயல்புடைய ராகையால் மன்னர் திருமாலின் அம்சம் என்ப.

## 9. 7. இவர் விரும்பாதன

ஆத்மாக்கள் யாவும் எம்பெருமானுக்கே உரியன, இவனுக்கே தொண்டு செய்வது பிறவியால் இயல்பாக வாய்ந்தது. ஆதலால் தமது ஆத்மாவும் இதனோடு தொடர்புள்ளனவும் ஸர்வேச்வரனுக்குப் பயன்படாவிடில், இவை தமக்கு வேண்டா என்கிறார் ஆழ்வார், ஒரு தலைவி நிலையை ஏற்று.

1. ...குலங்குலமா அசுரர்களை நீறாகும் படியாக நிருமித்துப் படைதொட்ட, மாறாளன் கவராத மணிமாமை குறைவிலமே (4-8-1).

மாறாளன்—பகைவர் நடுங்குமாறு மிடுக்குடையவன் கவராத—விரும்பாத. மணிமாமை—ஒளியுடைய (தனது) மேனி நிறம் குறைவிலம்— இந்த நிறத்தால் பயன் ஏதுமில்லை.

2. மணிமாயன் கவராத மடநெஞ்சால் குறைவிலமே (4-8-2).

3. நெடுமாயன் கவாராத நிறையினால் குறைவிலமே (4-8-3)
நிறை—பூர்ணமான பெண்மை நிலை.

போற்றி என்றே—பல்லாண்டு பாடி, சொல் மாலைகள்—வாடாத மாலைகள் ஏற்ற நோற்றேற்கு—சிறந்ததாகப் பாராட்டுமாறு பாக்கியம் செய்த எனக்கு

10. புகழுநல் லொருவனென்கோ? பங்கயக் கண்ணனென்கோ? (3-4-1, 2). வாழ்த்தும் வகை வாக்கால் செய்யும் கைங்கர்யம்

## 9. 10. பரவசம்

ஸர்வேச்வரனிடம் பக்தி கொண்ட ஆழ்வார் பரவசராகி, இவ்வாறு பரவசரான அடியார் செய்வனவற்றை விவரிக்கிறார்.

1. எம்மானைச் சொல்லிப் பாடி எழுந்தும் பரந்துந் துள்ளாதார், தம்மால் கருமமென்? (3-5-1).

தம்மால் கருமம் என்?—இவர்கள் பிறந்து என்ன பயன்?

2 பண்கள் தலைக் கொள்ளப் பாடிப் பரந்தும் குனித்தும் துள்ளாதார், மண்கொள் ஞாலத்துப் பிறப்பார் வல்வினை மோத மலைந்தே (3-5-2).

வல்வினை மோத மலைந்து—பாவங்கள் மேலிட்டுத் தரையில் எற்றுமாறு, மண்கொள் உலகில் பிறப்பார்.

3. தலையினோ டாதனம் தட்டத் தடுகுட்டமாய்ப் பறவாதார் (3-5-3)

ஆதனத்தோடு—தரையோடு, தலை தட்ட—தலை தட்டுமாறு, தடுகுட்டமாய்—கீழது மேலாய்.

4. கும்பிடு நட்டமிட்டாடிக் கோகு கட்டுண்டுழலாதார் (3-5 4).

கும்பிடு நட்டமிட்டாடி—தலைகீழாகக் கூடத் தாடி. கோகு—அடைவு கெட்டு. உகட்டு உண்டு—ஆரவாரஞ் செய்து.

5. வார்புனல் அந்தணருவி வட திருவேங்கடத் தெந்தை.
பேர் பல சொல்லிப் பிதற்றிப் பித்த ரென்றே பிறர் கூற
ஊர் பல புக்கும் புகாதும் உலகோர் சிரிக்க நின்றாடி
ஆர்வம் பெருகிக் குனிப்பார் அமரர் தொழப் படுவாரே
(3-5-8).

பரவசத்தின் எல்லை: பேர் பல சொல்லி—திருநாமங்கள் பலவற்றையும். பிதற்றி—அடைவுகெட வாய்விட்டுச் சொல்லி. ஊர்

பல புக்கும், மனிதர் நடமாட்டமில்லாத இடத்திலும், உலகோர் சிரிக்க நின்று ஆடி—யாவரும் சிரிக்க அதுவே தாளமாக நின்று ஆடி. குனிப்பார்—நடனமாடுவார்.

## 9. 11. காணத் துடித்தல்

ஆழ்வாருக்குப் பிரேமம் அதிகரித்து, எம்பெருமானை நேரில் கண்டு எல்லாக் கரணங்களாலும் அனுபவிக்கத் துடிக்கிறார். கேட்பாரது நெஞ்சு நீராகக் கரையுமாறும், பகவானுக்கும் பரம பதத்தில் இருப்பது அரிதாகுமாறும், இவர் ஓலமிட்டுக் கூப்பிடு கிறார்.

1. கூராராழி வெண்சங் கேந்திக் கொடியேன்பால், வாராய் ஒரு நாள் மண்ணும் விண்ணும் மகிழவே (6-9-1).

மண்ணிலுள்ளோரும் விண்ணிலுள்ளோரும் மகிழுமாறு ஒரு நாளாவது வருவாய். விடாய்த்தவன் ஒரு கால் நாக்கு நனைக்கத் துளி தண்ணீர் விரும்புவதுபோல் இவரது ஆவல்.

2. கோலத் திருமாமகளோ டுன்னைக் கூடாதே, சாலப் பலநாள் அடியேன் இன்னம் தளர்வேனோ? (6-9-3).

3. உன்னைக் காண்பான் வருந்தி எனை நாளும், தீயோடுடன் சேர் மெழுகாய் உலகில் திரிவேனோ? (6-9-6).

காண்பான்—காண்பதற்காக தீயோடு உடன் சேர் மெழு காய்—நெருப்பினருகில் மெழுகு போல: தொலைவிலிருந்து அழியாமையும், நெருப்பிற் சேர்ந்து நசிப்பதும் குறிப்பு.

4. தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே, கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ! (6-9-9).

5. தாமரைக் கண்ணாவோ! தனியேன் தனி ஆளாவோ! தாமரைக் கையாவோ! உன்னை என்றுகொல் சேர்வதுவே? (7-6-1).

## 9. 12. வேண்டுகோள்

உலகில் அனுபவிக்கும் துன்பங்களை நினைத்து ஆழ்வார் தம்மைத் திருவடிகளில் சேர்த்துக் கொள்ளுமாறு வேண்டுகிறார்.

## 9. 15. ஆற்றாமையின் எல்லை

(1) கண்ணபிரானை நொடிப்பொழுதும் பிரிந்திருக்க இயலாத ஆழ்வார், ஆற்றாமையால் திருவாய்ப்பாடியிலுள்ள ஆய்ச்சியர்களது நிலையில் தம் நிலையை விளக்குகிறார் மாலைப் போது; கண்ணன் கன்றுகளுடன் மீண்டு வருகிறான். கன்றுகளுடன் முற்கொழுந்தில் இவனைக் காணாமல், பின்னால் வரும நொடிப் போதும் தரியாதவர்களாகி இவர்கள் பூசலிடுகின்றனர்; இது மாலைப் பூசல்.

1. இகலிடத் தசுரர்கள் கூற்றம் வாரான் இனியிருந் தென்னுயிர் காத்த மாறென்? (9-9-2).

இகல் இடத்து அசுரர் கூற்றம்—போர்க்களத்தில் எதிரிடும் அசுரர்களுக்கு யமனான என் தலைவன்.

2. தனியிளஞ் சிங்கம் என் மாயன் வாரான் (9-9-3).

3. யாமுடை ஆயன்றன் மனம் கல்லாலோ அவனுடைத் தீங்குழல் ஈருமாலோ! (9-9-5).

(2) காலைப் போதில் கண்ணபிரான் கன்றுகளை மேய்க்கப் போவானோ என்று அஞ்சி, ஆய்ச்சியர், "கன்று மேய்க்கப் போக வேண்டா" என்று இரந்துசும பாசுரங்கள் ஆழ்வார் வெளியிடுவன, மனத்தைக் கவர வல்லன ஆய்ச்சியர் இவ்வாறு பூசலிடுவது காலைப் பூசல்

4. ஆமருவி நிரை மேய்க்க நீ போக்கு ஒரு பகல் ஆயிரம் ஊழியாலோ! (10-3-1)

நீ பசுக்களை ஓட்டிச் சென்றால் மீளுமளவும் ஒரு பகல் நேரம் ஆயிரம் ஊழிகள்போல் நீளும், எங்களால் ஆற்றலரிது.

5. வீவ(ன்) நின் பசு நிரை மேய்க்கப் போக்கு, வெவ்வுயிர் கொண்டெனதாவி வேமால், யாவரும் துணையில்லை யான் இருந்துன் அஞ்சன மேனியை ஆட்டங் காணேன் (10-3-3).

நின் பசுநிரை மேய்க்க போக்கு, வீவன் நீ பசுக்களை மேய்க்கப் போனால், ஆற்றாமையால் நான் இறப்பேன்: இறப்பதே சிறந்தது ஏன்? வெவ்வுயிர் கொண்டு எனது ஆவி வேம்—உன் போக்கை நினைத்துப்பெருமூச்செறிந்து இதயம் உலர்ந்து, விரகத் தீயால் வேகின்றது.

6. சுகவெள்ளம் விசும்பிறந்து, அறிவை மூழ்கச் சூழ்ந்து அது கனவென நீங்கி யாங்கே அகவுயி ரகமகந்தொறும் உள்புக்கு ஆவி யின் பரமல்ல வேட்கை அந்தோ! (10-3-2).

சுக வெள்ளம்—கலவியால் அளவில்லாத இன்ப வெள்ளம். விசும்பு இறந்து—அளவில்லாத ஆகாசத்தையும் கடந்து. அறிவை மூழ்க—அறிவையும் மூழ்த்தும்படி பெருக, அது கனவு என நீங்கி— கனவில் காண்பது போல் வற்றிப்போய். அகம் அகந்தொறும் உள் புக்கு— இதயத்தில் எங்கும் புகுந்து. வேட்கை ஆவியின் பரம் அல்ல—ஆத்மாவால் வேட்கை பொறுக்க இயலாது.

7. பழுத்த நல்லமுதினின் சாற்று வெள்ளம் பாவியேன் மனமகந் தொறும் உள்புக்கழுந்த, நின செங்கனி வாயின் கள்வப் பணி மொழி நினை தொறும ஆவி வேமால் (10-3-6).

பழுத்த நல் அமுதின் இன் சாற்று வெள்ளம்—சிறந்த அமுதச் சாற்று வெள்ளம் போலே— பரவி, என் மனம உள் அகந்தொறும் புக்கு அழுந்த—இதயத்துள் எங்கும் புக்கடர்ந்து இன்பமளிக்க. கள்வப் பணிமொழி—இந்த வெள்ளத்திற்கு ஊற்றுவாய்; என் முன் தாழ்ந்து நின்று சொன்ன சொற்கள்; "பிரியேன், பிரியில் தரியேன்", "அடியேன்" என்பன போல்வன.

8. வெடிப்பு நின் பசுநிரை மேய்க்கப் போக்கு (10-3-6).

நீ பசுநிரை மேய்க்கப் போவது வெடிப்பு ஆகுக; அதாவது நிகழாதொழிக.

(3) ஆற்றாமை அறவிஞ்சி இதன் விளைவாகத் தாம் மடிந்த தாக ஆழ்வார் கூறுகிறார்.

9. இழை நல்ல ஆக்கையும் பையவே புயக்கற்றது, தழை நல்ல இன்பம் தலைப்பெய்து எங்குந் தழைக்கவே (9-5-10)

எனது சிறந்த சரீரம் பசையற்றுச் சிறிது சிறிதாகக் குலை கின்றது. என்னைப் போல் உலகினர் துன்புற வேண்டா; எங்கும் இன்பம் பெருகுக.

## 9. 16. மடலூரத் துணிதல்

தமது வாயால் பகவானைப் புகழ்வதும் இவனது மேன்மைக்குக் குறைவு என்று ஆழ்வார் அகல நினைத்தார்.

அன்றியும் இவனுக்கு விநியோகமாகாத ஆத்ம ஆத்மீயங்கள் தமக்கு வேண்டா என்றார். இத்தகைய மனப்பான்மை வாய்ந் திருந்தும் இவர் ஆற்றாமையின் மிகுதியால் தலைவி நிலையில் மடலூர்வதாக அச்சுறுத்துகிறார்.

1. உலகுதோறு அலர் தூற்றி ஆம், கோணைகள் செய்து குதிரியாய் மடலூர்துமே (5-3-9).

ஆம் கோணைகள் செய்து—என்னலான மிறுக்குகள் யாவும் செய்து. குதிரியாய்—பனைமடலாலான குதிரையோடு; அன்றி எதற்கும் அடங்காதவளாய். உலகு தோறு அலர் தூற்றி—உலகினர் யாவரும என் நிலையை அறிந்து இவனைப் பழிகூறுமாறு.

2. யாம் மடலூர்தும்...யாம் மடமின்றித் தெருவுதோறு அயல் தையலார், நா மடங்காப் பழி தூற்றி நாடும் இரைக்கவே (5-3-10).

யாம் மடம் இன்றி - பெண்மை பாராட்டாமல்; பெண்கள் மடலூர மாட்டார்கள் என்பதையும் புறக்கணித்து. தெருவு தோறும்—ஒன்றும் விடாமல்ஊர்ந்து. அயல் தையலார—என்னைக் காணும் பெண்கள் (அயலார்) பழிதூற்றி—இவன்மேல் பழியைக் கூறி நாடும் இரைக்க—நாட்டிலுள்ளார்களும் பழி கூறுமாறு. நாமடங்கா—பழி கூற நீட்டிய நா மடங்காமல், அல்லது நாவடர.

## 9. 17. ஊடல்

குறித்த காலத்திற் கண்ணபிரான் வராமல் 'தாழ்ந்ததால்', இவனொடும் ஊடும் தலைவி நிலையில் ஆழ்வார் அருளிய பாசுரங் கள் சுவையடர்ந்தன.

1. கழகமேறேல் நம்பீ! (6-2-0).

இப்பெண்கள் கூட்டத்தில் நீ புக வேண்டாம்.

2. போகு நம்பீ! உன் தாமரை புரை கண்ணிணையும், செவ்வாய் முறுவலும் ஆகுலங்கள் செய்ய அழிதற்கே நோற்றோமே யாம் (6-2-2.

3. கன்மமன்று எங்கள் கையில் பாவை பறிப்பது நின்மலா! நெடியாய்! உனக்கேலும் பிழை பிழையே (6-2-7).

4. நின்றன்னால் நலிவே படுவோம் என்றும் ஆய்ச்சியோமே (6-2-10).

## 9. 18. சரணாகதி

பகவானைப் புகலாகப் பற்றுவோர், தமது முயற்சி எதுவுமின்றி இவனையே உபாயமாகக் கொள்வர்.

1 திங்கள்சேர் மணிமாட நீடு சிரீவர மங்கல நகருறை, சங்கு சக்கரத்தாய்! தமியேனுக் கருளாயே (5-7-2)

2 ஆறெனக்கு நின் பாதமே சரணாகத் தந்தொழிந்தாய்—உனக்கோர் கைம்மாறு நானொன்றிலேன் என தாவியும் உனதே (5-7-10)

ஆறு—உபாயம். கைம்மாறு இல்லை, ஏன் எனில் "எனதாவியும் உனதே". ஆவி-ஆத்மா.

3 களைவாய் துன்பம் களையா தொழிவாய் களைகண் மற்றிலேன். வளவாய் நேமிப் படையாய்! குடந்தைக் கிடந்த மாமாயா! (5-8-8).

களைகண்—புகல். களைவாய்—போக்குவாய். என் துன்பத்தை நீ போக்கினாலும் போக்கா விட்டாலும் நீயே எனக்குப் புகல்.

4. உழலை யென்பின் பேய்ச்சி முலையூடு அவளை உயிருண்டான், கழல்களவையே சரணாகக் கொண்ட குருகூர்ச்சடகோபன் (5-8-11).

உழலை என்பின்—கணைமரங்கள் கோத்தாப்போல் வலியனவான எலும்புகள் உள்ள.

5. நாகணை மிசை நம்பிரான் சரணே சரண் நமக்கென்று—நாடொறும், ஏக சிந்தையனாய்க் குருகூர்ச் சடகோபன் (5-10-11).

சரண்—திருவடிகள். சரண் என்று—புகலென்று, ஏக சிந்தையனாய் இதுவே மனோரதமாகவுடைய.

6. நாமங்களாயிர முடைய நம்பெருமானடி மேல், சேமங்கொள் தென்குருகூர்ச் சடகோபன் (5-9-11).

அடிமேல் சேமம் கொள்—புறம்புள்ள காற்கட்டுக்களை அகற்றித் திருவடிகளே ரக்ஷகமாகக் கொள்ளும்.

## 9. 19. பரம பக்தி

முதற் பத்தில் ''கமலக் கண்ணன் என் கண்ணினுள்ளான்'' என்றுதொடங்கிப், பத்தாம்பத்தில் ''என் கண்ணுள் நின்றகலான்'' என்பது வரையில் ஆழ்வாரது பரபக்தி விளங்குகிறது. இதன் விளைவு பரஞானம்; இது ''அடிய ரோடிருந்தமை'' என்ற சொல்லால் விளங்கும். பகவானை அனுபவிக்க இயலாமையாலே விடாய்த்துக், கூப்பிட்டு தரிக்கமாட்டாமல் ஆணையிட்டுப் பெற விரும்புவது பரம பக்தியாலே.

1. தனியேனாருயிரே! என் தலை மிசையாய் வந்திட்டு, இனி நான் போகலொட்டேன் ஒன்றும் மாயஞ் செய்யேல் என்னையே (10-10-1).

என் தலை மிசையாய் வந்திட்டு—என் தலையிலே திருவடிகள் சேருமாறு நீட்டி வைத்து. மாயம் செய்யேல்—நான் உன்னைப் பெற்றேனாகச் செய்; வஞ்சனை செய்ய வேண்டா.

2. உன் திருமார்வத்து மாலை நங்கை, வாசஞ்செய் பூங்குழலாள் திருவாணை நின்னாணை கண்டாய் (10-10-2).

என்னை நீ ஏற்றுக் கொள்ள வேண்டு மென்பது, உன் திரு மார்பில் வீற்றிருக்கும் பிராட்டியின் ஆணை;— நின் ஆணை. அடியவராகிய ஆழ்வார் இவ்வாறு ஆணையிடக் கூடுமோ என்னில், ஆற்றாமை மிகுதியாலே, பரம பக்தியாலே—பரம பக்தி—பெற்றா லின்றி தரிக்க மாட்டாத நிலை.

3. போரவிட்டிட்டென்னை நீ புறம் போக்கலுற்றால் பின்னை யான்; யாரைக் கொண்டு எத்தை யந்தோ எனதென்பதென்? யானென்பதென்? (10-10-5).

யாரைக் கொண்டு...— எவனாலே எந்தப் புருஷார்த்தத்தை நான் பெறக்கூடும்? யாரை கொண்டு—எவன் புகலாக. எத்தை— எந்த உபாயத்தைக் கொண்டு. எனது என்பது என்?—எனக்கே யான கரணங்கள் எனக்கு இல யான் என்பது என்?—நான் என்பதற்கு நான் சுதந்தரனோ?

4. கோல மலர்ப் பாவைக்கு அன்பாகிய என் அன்பேயோ!...நீலக் கடல் கடைந்தாய்! உன்னைப் பெற்றினிப் போக்குவனோ? (10-10-7).

பிராட்டியிடம் எனக்கு பிரேமம் மிகும்: இவளது அருளை நான் பெற்றவன், ஆதலால் இவளுக்குரியேன். ஆதலால் நீ என்னை விடலாகாது. நான் உன்னைப் போகவொட்டேன்.

## 10. பகவானது நிலை

நம்மாழ்வாரைக் கொண்டு உலகினரைத் திருத்த எம்பெருமான் கொண்ட முயற்சிகள் பல. இவருக்கு மதிநலத்தையருளி இவரைக்கொண்டு திருவாய்மொழி பாடுவித்தான் ஈச்வரன், சிறந்த ஞானியைத் தனக்கு ஆத்மாவாகக் கருதும் ஈச்வரன், இவரிடம் கொண்ட பிரேமம் வரை கடந்தது.

### 10. 1. அருள் நோக்கு

1. எதிர் சூழல் புக்கு எனைத்தோர் பிறப்பும் எனக்கே அருள்கள் செய்ய, விதிசூழ்ந்ததால் எனக்கே லம்மான் திரிவிக்கிரமனையே (2-7-6).

எனைத்தோர் பிறப்பும்—நான் பிறந்த பிறவிகள் தோறும். எதிர் சூழல் புக்கு—என்னைத் தனக்காக்கிக் கொள்ளத் தான் பிறந்து. எனக்கு அம்மான் திரிவிக்கிரமனை விதி சூழ்ந்தது—அவனை இருக்க வொட்டாமல் கிருபை பூமியில் பிறக்குமாறு செய்தது. விதி—அவனும் தப்பவொண்ணாது, பிறந்தே தீர வேண்டும். நல்ல ஆத்மா ஒருவனைப் பெறப் பெருமான் படும் பாடு.

2. மயர்வற மதிநல மருளினன் (1-1-1).

3. மறப்பற என்னுள்ளே மன்னினான் (1-9-10).

நான் பெற்ற ஞானத்தை மறவாதவாறு என்னுள் மன்னினான்; நான் என்னை மறப்பனோ என்று மன்னினான்.

### 10. 2. அச்சம் தவிர்த்தான்

''வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:''—எல்லாம் வாஸுதேவன் என்று கருதும் மஹாத்மா ஒருவனைப் பெறுவது மிக அரிது—என்றான் கண்ணன். தன்னால் மதிநலம் பெற்ற ஆழ்வார் தன்னை விட்டுப் பிரியாமல் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொடுக்க வேண்டும் எனக் கருதிய பகவான், இவரது அச்சத்தைத் தவிர்க்க வேண்டியிருந்தது. தாம் பகவானைப் புகழ்

வது இவனது மேன்மைக்குக் குறைவாகும் என்று கருதிய ஆழ்வார் அகல நினைத்தார், ''வளவேழுலகு'' என்ற திருவாய்மொழியில். இதைத் தவிர்த்தான் பகவான்,

1. மாயோம்.— அம்மா மூர்த்தியைச் சார்ந்தே (1-5-9).

பகவானை விட்டகல்வது ஆத்ம ஸ்வரூபத்திற்கு விநாசகரம்; ஆதலால் இனி அகலுவதற்கு நினைக்க மாட்டேன் என்கிறார் ஆழ்வார்; அம் மா மூர்த்தியைச் சேர்ந்து நலம் பெறுவோம்; மாய மாட்டோம் என்கிறார். இவ்வாறு இவர் தேறியது பகவான் இவருக்கு அறிவித்த நலனாலே; அதாவது தனது விருப்பத்திற்கு மாறாகச் செய்யத் தகாது என்று.

2. தீர்ந்து தன்பால் மனம் வைக்கத் திருத்தி வீடு திருத்துவான் (2-5-10).

தீர்ந்து—அகல்வேன் என்று சொல்லாமல் திருத்தி, என்னைத் தன் பால் மனம் வைக்குமபடி செய்து. வீடு திருத்துவான்— என்னை வரவேற்பதற்காகப் பரம பதத்தைப் புதுமை பொலியச் செய்கிறான்.

3. தானொட்டி வந்தென் தனிநெஞ்சை வஞ்சித்து,
ஊனொட்டி நின்று என் உயிரில் கலந்து (1-7-7).

தான் ஒட்டி வந்து —இவனது ஆத்மாவில் நான் புகுந்தே தீருவேன் என்று தானே சங்கல்பித்து வந்து. ஊன ஒட்டி நின்று— ஊன் மயமான சரீரத்தைப் பற்றிய ஆத்மாவோடு கலந்து.உயிர்— ஆத்மா.

## 10. 3. கலந்த வகை

ஆழ்வாரது கலக்கத்தைத் தீர்த்து, இவர் இன்புறுமாறு அவயவங்கள் தோறும் கலந்து அணைந்து இறைவன மகிழ்கிறான். இன்பம் பொறுக்கப் பொறுக்க அனுபவிக்கச் செய்ய ஒவ்வோர் இந்திரியமாக பகவான் அணைகிறான். இதை ஆழ்வார் வெளியிடுவது வருமாறு:

1. சுவையன் திருவின் மணாளன் என்னுடைச் சூழலுளானே (1-9-1).

சுவையன்—என்னோடு கலந்து இன்புறுவானாய். சூழல் உளான்—முதலில் பக்கத்தில் அமர்கிறான்.

2. அருகலிலான் (1-9-2). பின்பு அருகிலே அமர்கிறான்.

3. ஒழிவிலன் என்னோடுடனே (1-9-3)

4. என் ஒக்கலையான் (1-9-4). ஒக்கலை—இடுப்பு.

5. என் நெஞ்சிலுளான் (1-9-5)

6. என்னுடைத் தோளிணையான் (1-9-6).

7. என் நாவிலுளான் (1-9-7).

8. என் கண்ணிலுளான் (1-9-8).

9. என் நெற்றியுளான் (1-9-9).

10. ஒற்றைப் பிறையணிந்தானும் நான்முகனும் இந்திரனும்,
மற்றை யமரரு மெல்லாம் வந்தெனதுச்சியுளானே (1-9-10).

உச்சி—தலை. ஒற்றை பிறை அணிந்தான்—சிவன். சிவன், பிரமன், இந்திரன், தேவர்கள் யாவரையும் அநாதரித்து, என்னை யொழியச் செல்லாதவனாய் என் உச்சியில் அமர்ந்தான்.

## 10. 4. ஆழ்வாரிடம் அன்பு

பகவான் ஆழ்வாரோடு இயல்பில் கலந்து பெரிதும் மகிழ்ந்தான்.

1 எனதாவி யார்? யான் ஆர்? தந்த நீ கொண்டு ஆக்கினையே (2-3-4).

பகவான் இவ்வாறு கலப்பதால் எனது ஆத்மா அவனதாயிற்று. இவ்வாறு தான் கொடுத்த ஆத்மா யாருக்குரியது? கொடுத்த நான் யாருக்குரியவன்? தந்த நீ கொண்டு ஆக்கினை—முதலில் இத்தை உண்டாக்கிய நீயே கொண்டாயானாய். ஆழ்வாரோடு பகவான் கலந்ததன் விளைவு இது; கலந்தது அன்பாலே. ஏற்றுக் கொண்டதும் அன்பாலே.

2. கன்னலே! அமுதே! கார்முகிலே! என் கண்ணா!
நின்னலாலிலேன் காண் என்னை நீ குறிக் கொள்ளே (2-3-7).

கலந்ததன் விளைவு.

3. படிவான மிறந்த பரமன் பவித்திரன் சீர்,...அடியேன் வாய்

படி வானம் இறந்த—தன் இயல்புக்கு வானிலுள்ளோர் நூய்பில்லாதவாறு. சீர் வாய் மடுத்துப் பருகி—பெருவிடாயோடே அனுபவித்து.

4. என் முடிவு காணாதே என்னுள் கலந்தானை (2-5-8).
என் முடிவு—என்னுடைய தாழ்நத நிலையின் எல்லை.

5. ஆராவமுதமாய் அல்லாவியுள் கலந்த (2-5-5).
அல் ஆவி—அசித்தைக் காட்டிலும் நான் இழிவாகக் கருதும் ஆத்மா.

6. எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டூழி யூழி தொறும்
அப்பொழுதைக் கப்பொழுது என ஆராவமுதமே (2-5-4).

## 10. 5. அன்பின் எல்லை

பகவான் தன்னிடம் கொள்ளும் அன்பு, தமது பரம்பரையாரிடம் வெள்ளமிடும் வகையை ஆழ்வார் விவரிக்கிறார்.

1. கேசவன் தமர் கீழ்மேல் எமரேழ் எழுபிறப்பும், மாசதிரிது பெற்று நமமுடை வாழ்வு வாய்க்கின்றவா (2-7-1).

கேசவன் தமர்—பகவானது வடிவழகில் ஈடுபட்டுள்ள அடியார். எமர்—என்னைச் சேர்ந்தவர்கள். கீழ் மேல்... எழுபிறப்பும்—கீழ் ஏழு பரம்பரையும மேல் ஏழு பரம்பரையும, எனனுடைய தொடர்பாலே. மாசதிர் இது பெறறு—இந்த அரிய பேறு பெற்று. வாழ்வு—ஸ்ரீவைஷ்ணவனாக வாழ்வது. வாய்க்கின்றவா—ஊற்று மாறாமல் மேன்மேலே பெருகி வருகின்றது

2. ......என்னைக் கொண்டு என்பாவந் தன்னையும் பாறக் கைத்து எமரேழ் எழுபிறப்பும, மேவுந் தன்மய மாக்கினான் வல்லன எம்பிரான் விட்டுமே (2-7-4).

என்னைக் கொண்டு—சேற்றிலே விழுந்த மாணிக்கத்தைக் கழுவி எடுத்துக் கொள்வது போலே எளியனான என்னை ஏற்றுக் கொண்டு. கைத்து—போக்கி. எமர் ஏழ் எழு பிறப்பும—என்னோடு தொடர்புடைய ஏழு பிறவிகளிலுள்ளார்களையும், மேவும் தன் மயம் ஆக்கினான்—தன்னைக் கிட்டி உய்யுமபடி செய்தான்.

3 எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே (2-6-2).

இவன் என்னுடனே கலந்து இன்புறுகிறான்; பிராட்டி தன்னை அணைத்தாலும் அங்கு நோக்குவதில்லை

## 10. 6. அச்சம் தீர்தல்

''வளவேழுலகு'' என்ற திருவாய்மொழி'யில் ஆழ்வார் பகவானை விட்டு அகலக் கருதினார்; பகவான் இவரைத் தேற்றி வைத்து இவரோடு கலந்தான். மீண்டும் ஆழ்வார் அகல நினைப்பாரோ என்று இவன் அஞ்ச, இவனை ஆழ்வார் அச்சங் கெடத் தேற்றுகிறார்.

1. உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கெனவே (2-6-1).

உன் திருவடிகளை திடமாகப் பற்றினேன்; நீ விட்டாலும் நான் விடமாட்டேன்.

2. வானேறே! இனி எங்குப் போகின்றதே! (2-6-9).

நித்திய சூரிகள் விட்டாலும் நான் உன்னை விடமாட்டேன். போகிலும் கூடப் போகும் படியன்றோ கலந்தது!

## 10. 7. பிரேமம்

ஈச்வரனைக் காண ஆவல் கொண்ட ஆழ்வார், இவனது அவதாரங்கள் தேசத்தாலும் காலத்தாலும் கைகழிந்ததை நினைத்துச் சிறுபிள்ளைகள் போலப் புலம்ப, இவன் தனது மேனியைக் காட்டினான். ஈச்வரன் தம்மிடம் கொண்ட பிரேமத்தில் ஈடுபட்டு இதை ஆழ்வார் பாராட்டுகிறார்

1. பூசுஞ் சாந்து என் நெஞ்சமே புனையும் கண்ணி எனதுயிரே,
வாசகம் செய் மாலையே வான்பட்டாடையும் அஃதே,
தேசமான அணிகலனும் என் கைகூப்புச் செய்கையே,
ஈசன் ஞால முண்டு மிழ்ந்த எந்தை ஏக மூர்த்திக்கே (4-3-2).

ஈசன் ஞாலம் முற்றும் உண்டும் உமிழ்ந்தும் கொண்ட ஆயாசந் தீர நான் உடனிருந்து ஒன்றுஞ் செய்யப் பெற்றிலேன். இப்போது நான் செய்யும் உபசாரம்: நெஞ்சு, வாசகம், கைகள் இவற்றை இவனுக்கு போக உபகரணங்களாகச செய்வதே. என் நெஞ்சு கலவைச் சாந்து ஆகும்; வாசகம் இவனுக்குச் சூட்டும் மாலை; சிறந்த பட்டாடையும் இதுவே; ஒளி மிக்க திவ்யாபரணங்கள் நான் செய்யும் அஞ்சலியாகும்.

2 (பேயுயிர் மாய்த்தவனே!) பூத்தண் மாலை கொண்டு உன்னைப் போதால் வணங்கேனேலும் நின்— பூத்தண் மாலை நெடுமுடிக்குப் புனையும் கண்ணி எனதுயிரே (4-3-4).

நீ பேயை மாய்த்த காலத்தில் நான் உதவப் பெற்றிலேன். இந்தக் குறை தீரத் தண் பூ மாலை சூட்ட வேண்டிய உன் முடிக்கு என் உயிர் மாலை போலாகும்.

3 குரைகழல்கள் நீட்டி மண்கொண்ட கோல வாமனா! — விரை கொள் பூவும நீருங் கொண்டு ஏத்த மாட்டேனேலும், உன் உரை கொள் சோதித் திருவுருவம் என்னதாவி மேலதே (4 3-7).

நீ பூமியை அளந்து கொண்டபோது உனது ஆயாசம் தீரத் திருவடிகளில் பரிமளமுள்ள மலர்கள் தூவி, நீரைப் பெய்து உன்னை ஏத்த இயலவில்லை. இப்போது உன்னுடைய சோதி வடிவம் என் ஆத்மாவுக்கு தாரகமாயிற்று. விரை—பரிமளம்.

4. உன்னதென்ன தாவியும் என்ன துன்ன தாவியும்,
இன்ன வண்ணமே நின்றாய் என்றுரைக்க வல்லனே (4-3-8)

என் ஆவியும் உன் ஆவியும் இரண்டறக் கலந்தன. இவ்வாறு எனக்கு உதவி செய்யும் உன்னை என்ன பாசுரம் சொல்லி வாழ்த்துவேன்?

## 10. 8. கருணை

எம்பெருமானைக் காணத் துடித்த ஆழ்வார், இவனுக்குப் போலியானவற்றைக் கண்டு மயங்கினார், தலைவி நிலையில். இவரிடம் கருணை கொண்டு, இறைவன் தன்னையும் தன் செல்வத்தையும் காட்டிக் கொடுத்தான். ஆழ்வார் மகிழ்ந்து இவனது மேன்மையைச் சுவை யடர்ந்த பாடல்களாகப் பாடி மேலும் மகிழ்கிறார்.

1. வீற்றிருந் தேழுலகும் தனிக்கோல் செல்ல வீவில் சீர்—ஆற்றல் மிக்காளு மம்மானை, ...போற்றி யென்றே கைகளாரத் தொழுது சொல் மாலைகள், ஏற்ற நோற்றேற்கு இனி என்ன குறை எழு மையுமே? (4-5-1).

மாற்ற மாலை—சொல் மாலை, பாக்களாகிய மாலை கையில் தாளத்தைக் கொடுத்துப் பாடச் செய்கிறான், பகவான்.

2. மொய்ய சொல்லால் இசைமாலைகள் ஏத்தி உள்ளப் பெற் பெற்றேன் (5-1-2).

மொய்ய சொல்—அடர்ந்த சொற்களாலே. உள்ளப் பெற் றேன்—அனுபவிக்கப் பெற்றேன்.

3. மாற்ற மாலை புனைந்தேத்தி நாளும் மகிழ்வெய்தினேன்,
காற்றின் முன்னம் கடுகி வினை நோய்கள் கரியவே (4-5-5).

காற்றின் முன்னம் கரிய—காற்றுக்கு முன் வெந்துபோகுமாறு; பிறகு காற்றில் பறந்துபோம்.

4. சொல் மாலைகள் சொல்லுமாறு அமைக்கவல்லேற்கு இனி யாவர் நிகர் அகல் வானத்தே? (4-5-8).

ஸ்ரீவைகுண்டத்தில் இருப்பவர்களும் எனக்கு ஒப்பாக மாட்டார்கள்.

## 10. 9. பரிவு

எம்பெருமானது வடிவழகை நேரில் காண மாட்டாமல் ஆழ்வார் விடாய் விஞ்சி அழுது அலற்றினார், "ஒரு நாள் வந்து தோன்றாயே", "உன்னை எங்கே காண்கேனோ?" என்று. எம்பெருமான் இரங்கி, இவரிடம் பரிவு கொண்டு, இவருக்கு முன் தோன்றி இவரது விருப்பப்படியே இவருடன் கலந்தான்.

1. அற்புதன் நாராயணன் அரி வாமனன்
நிற்பது மேலி இருப்பது என் நெஞ்சகம் (8-6-10)

திருக்கடித்தானத்துப் பெருமான் விரும்பி இருப்பது என் நெஞ்சுள்ளே.

2. பொருத்தமுடை வாமனன் தான் புகுந்து என்றன்
கருத்தையுற வீற்றிருந்தான் கண்டு கொண்டே (8-7-1).

கருத்தை— நெஞ்சில். உற—திடமாக. கண்டு கொண்டு— நோக்கி அருள் செய்து கொண்டு, வீற்றிருந்தான். "அறியேன் மற்றருள்" என்று மகிழ்கிறார், ஆழ்வார்.

3. தூய சுடர்ச் சோதி தனது என்னுள் வைத்தான் (8-7-4).

தனது தூய சுடர் சோதி—சோதி மயமான தனது வடிவத்தை.

4. என்னுள், திகழும் மணிக்குன்ற மொன்றே ஒத்து நின்றான் (8-7-5).

5. சிறியேனுடையச் சிந்தையுள் மூவுலகும்தன்,
நெறியா வயிற் கொண்டு நின்றொழிந்தாரே (8-7-8)

சிந்தையுள்—நெஞ்சிலே, நெறியா—காப்பாற்றுவதில் தப்பாத வாறு, மூ உலகும் தம் வயிற்றிற் கொண்டு— தம் வயிற்றில் கொண்ட மூவுலகங்களோடும் பொருந்தினார்.

ஆழ்வாரிடம் கொண்ட பேரன்பின் விளைவாக எம்பெருமான் இவரது நெஞ்சுள் புகுந்து களித்தான்.

1. திருவருள் செய்பவன் போல என்னுள் புகுந்து,
உருவமும் ஆருயிரும் உடனே உண்டான் (9-6-5).

திருக்காட்கரை யப்பன் செய்தது: அருள் செய்வதற்குப் போல மனத்துள் புகுந்தான்; ஆர்வத்தால் என்னையும் என் ஆத்மாவையும் தன்னுடையனவாகக் கொண்டான்.

2. நாளுநாள் வந்து என்னை முற்றவும் தானுண்டான் (9-6-8)

நாள்தோறும் என்னோடு கலந்து நன்கு அனுபவித்துக் களித்தான்.

3. தான் என்னை முற்றப் பருகினான் (9-6-10).

தன்னுடைய குணத்தாலும் செயலாலும் என்னை நீர்ப்பண்டமாக்கி, இயல்பில் கலந்து பரிமாறினான்; என்னைத் தன்வசமாக்கிக் கொண்டான்.

4. ஆருயிர் பட்டது எனதுயிர் பட்டது? (9-6-9).

இவ்வாறு இவனது குணத்தை அனுபவித்து நான் பட்டபாடு யார்தான் பட்டார்? நித்திய சூரிகளும் படவில்லை.

## 10. 11. ஆவல்

ஆழ்வாரைத் தன்பால் ஏற்றுக் கொள்வதற்கு இறைவன் பெரிதும் ஆவல் கொண்டான்.

1. திருமாலிருஞ்சோலை மலை என்றேன்...என்னத்
திருமால் வந்தென் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-1).

2. பேரேன் என்று என் நெஞ்சு நிறையப் புகுந்தான் (10-8-2)

3. வானே தருவான் எனக்கா என்னோ டொட்டி
ஊனேய் குரம்பை இதனுள் புகுத்து—இன்று
தானே தடுமாற்ற வினைகள் தவிர்த்தான் (10-8-5).

தடுமாற்ற வினைகள்—தன் பக்கலிலிருந்து என்னைப் பிரித்துத் தடுமாறும்படி செய்யும் தீவினைகளை. தவிர்த்தான்—போக்கி னான்.

4. என்னை முற்று முயிருண்டு என் மாய வாக்கை யிதனுள் புக்கு என்னை முற்றும் தானேயாய் நின்ற அம்மான் (10-7-3).

மாய ஆக்கை இதனுள்—அல்பமான ஆத்மாவில் என்னை முற்றும் தானானான்—என்னுள் புகுந்துச் சிறிதும் இடமில்லாமல் தானே முழுதுங் கொண்டான்.

5. என் நெஞ்சு முயிரும் அவையுண்டு தானே யாகி நிறைந்தானே (10-7-1).

இவை யின்றியும் திவ்ய தேசங்களில் கொள்ளும் பிரேமத்தைத் தம் அவயவங்களிலே பண்ணுகிறான் என்கிறார் ஆழ்வார்.

## 10. 12. ஆவலின் எல்லை

ஆழ்வாரிடம் கொண்ட பிரேமத்தால், இறைவன் இவரைத் தன்னிடம் சேர்த்துக் கொள்ளும் ஆவலில் இவரது திருமேனியிலும் விருப்பங் கொண்டான். இவ்வுடம்பு இழிவானது, இதில் பிரேமம் வேண்டா என்று ஆழ்வார் இவனிடம் வேண்டிக் கொண்டார்.

1. இன்று என்னைப் பொருளாக்கித் தன்னை என்னுள் வைத்தான் (10-8-9).

இழிஞனான என்னை ஒரு பொருளாகக் கருதி இவன் என்னுள் புகுந்தான்; வேறு எவர்க்கும் புகுவதற்கு அவகாச மில்லாதவாறு என்னை முற்றூட்டாக அனுபவித்தான்.

2. இன்று விண்ணுலகம் தருவானாய் விரைகின்றான் (10-6-1).

3. மங்கவொட்டு உன் மாமாயை (10-7-10).

ஆழ்வாரிடம் கொண்ட பிரேமத்தால் எம்பெருமான் இவரைத் திருமேனியோடே தன்னிடம் கொண்டு போக விரும்பினான். "இது ப்ரக்ருதி மயமானது, இழிவானது; இதனைப் போக்கி என்னை ஏற்றுக் கொள்" என்றார் ஆழ்வார். மாமாயை—உன் மாயையாலே ஒருவராலும் நப்பவொண்ணாதவாறு நீ பிணைத்த சரீரம்.

ஆழ்வார் கொண்ட விருப்பத்தால், இவரது வீடாயெல்லாந் திருமாறு எம்பெருமான் இவரைத் தன்னோடு சேர்த்துக் கொண்டு பெரிதும் மகிழ்ந்தான், தான் இதுவரையிற் கொண்ட அரு முயற்சிகள் பயனுற்றனவென்று.

## 10. 13. திருநாமங்கள்

இணையில்லாத பக்தியாலே ஆழ்வார் தாம் அனுபவித்ததற் கேற்ப வெளியிட்ட திருநாமங்கள் சில வருவன:

1. அக்காரக் கனியே (2-9-8).

அக்காரம்—கரும்பு, சர்க்கரை. அக்காரக்கனி—அக்காரம் மர மாகி அதில் பழுத்த பழம் : மாங்கனிபோல.

2. அல்லலின்பம் அளவிறந்தெங்கும் அழகமர் சூழொளியன் (3-10-8)

அல்லல் இல் இன்பம்—துன்பம் என்பதே கலவாத இன்பம். அளவு இறந்து—அளவு கடந்து, அமர் அழகு சூழ் ஒளியன்—கட் டழகும் சோதியும் வாய்ந்தவன்.

3. ஆராவமுதே! (5-8-1).

4. எரியேய் பவளக் குன்றே! (5-8-7)

எரி ஏய் பவளக் குன்றே—பகைவர் அஞ்சுமாறும் அன்பர் உகக்குமாறும் சோதி அடர்ந்து அழகிய குன்றம் போன்றவன்.

5. எனக்கே தன்னைத் தந்த கற்பகம் (2-7-10).

6 என்னுள் கலந்தவன் (2-5-3).

7. கடல் படா அமுதே! (2-3-5).

தேவர்கள் பெற்ற அமுதம்போல் அற்பமில்லாமல், யசோதைப் பிராட்டி அனுபவித்தது போல் பரமானந்தம் தரும் அமுதம். தேவர்கள் பெற்றது உப்புச் சாறு; அதை ஒரு முறைதான் இவர் கள் உண்டனர். ஆனால் ஆழ்வார் இவ்வமுதை எப்போதும் அனு பவித்தார்.

8. கனிவார் வீட்டின்பம் (2-3-5).

கனிவார்—உன்னிடம் அன்புள்ளவர்களுக்கு. வீட்டின்பம்—மோக்ஷம் போன்ற இன்பம் அளிப்பவன்.

9. கோதவமில் என் கன்னற் கட்டி (2-7-3)

கோது: வேறு பொருள் கலந்திருப்பதால். அவம்—யாகம் தப்புவதால் குற்றம். வேறு பொருள் கலவாது உரிய பாகத்தில் பெற்ற கட்டி.

10. தீர்த்தன் (2-8-6).

தன் திருவடியின் தொடர்பாலே யாவரையும் தூயோராக்கும் புனிதன்.

11. பரிவதிலீசன் (1-6-1).

பரிவு—துக்கம், பக்ஷபாதம். நாம் சமர்ப்பிப்பதை இவன் ஏற்றுக் கொள்வானோ என்பதால் துக்கம் நம்மிடம் இல்லாத வாறு, எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்வான், எம்பெருமான். பரிவு இல்—அன்பரிடத்துப் பரிவு தனக்கு இல்லாகவுடைய, அதாவது இயல்பாக வுடையவன்; அதாவது பரிவு மிக்கவன்.

12. மாசறு சோதி என் செய்யவாய் மணிக்குன்றத்தை (5-3-1).

பகவானது அழகு: சிவந்த வாய், மணி போன்ற திருமேனி. இதற்கு மாசு; இதை எவ்வகையாலும் அனுபவித்தே தீருவோம் என்னும்படி இது அமையாமை. மடலூர்ந்தாயினும் பெறுவேன் என்கிறார், ஆழ்வார் தலைவி நிலையில்.

13. விழுமிய அமரர் முனிவர் விழுங்கும் கன்னற் கனியினை (3-6-7).

## 11. உபதேசம்

பகவான் அருளிய பக்தியாலே கனிந்த ஞானம் வாய்ந்த ஆழ்வார் பகவான் விஷயமாகவும் அவனைப் பெறும் வகையை யும் உலகினர்க்கு அவ்வப்போது உபதேசம் செய்கிறார். திருவாய் மொழியில் ஒவ்வொரு பத்துலும் இவ்வாறான உபதேசம் அமைந்துள்ளது

குருபரம்பரைக்கு இவர் தலைவர் இவரது உபதேசம் பெற்று நாதமுனிகள் இதைப் பரப்பினார். இதனையே ராமாநுஜர் வளர்த்தார்.

### 11. 1. உலக வாழ்க்கை

உலக வாழ்க்கை துன்பமே அடர்ந்தது. உற்றார் உறவினர் நம்மிடம் பொருளுண்டானால் அதைக் கவர விரும்புவர், துன் பமே செய்வர். செல்வம், போகம் போன்றவை நிலையற்றவை.

1. நண்ணாதார் முறுவலிப்ப நல்லுற்றார் கரைந் தேங்க, எண்ணாராத் துயர் விளைக்கும் இவை யென்ன உலகியற்கை! (4-9-1).

தாம் அனுபவிக்கும் துயரால், நண்ணாதார் (பகைவர்) முறுவலிப்பர்—முறுவல் கொள்வர், களிப்பாலே. நல் உற்றார் கரைந்து ஏங்க—நல்ல மனம் வாய்ந்தவர் அனுதபிப்பர்.

2. கொண்டாட்டும் குலம்புனைவும் தமர் உற்றார் விழுநிதியும் வண்டார்பூங் குழலாளும் மனை ஒழிய உயிர் மாய்தல் (4-9-3).

கொண்டாட்டு—செல்வம் காரணமாக யாவராலும், பாராட்டப் பெறுவது. குலம்புனைவு—குலத்தின் மேன்மையைப் பாராட்டுதல். தமர்—சுற்றத்தார். உற்றார்—சம்பந்திகள் விழுநிதி—அடர்ந்த செல்வம். வண்டு ஆர் பூ குழலாள் மனைவி மனை—போகம் நுகருவதற்கான இடம் (வீடு). இவை ஒழிய—இவை குறியழியாமலிருக்கும் போது. மாய்தல்—இறத்தல்.

3. கொண்ட பெண்டிர் மக்க ளுற்றார் சுற்றத்தவர் பிறரும் கண்டதோடு பட்டதல்லால் காதல் மற்று யாதுமில்லை (9-1-1).

கண்டதோடு பட்டதல்லால்—கையில் பொருள் இருந்தால் அன்பு கொள்வார்களே யின்றி. காதல் மற்று யாதும இல்லை—வேறு வகையால் காதல் இல்லை.

4. அணைய வந்த ஆக்க முண்டேல் அட்டைகள் போல் சுவைப்பர் (9-1-2).

சுற்றத்தவரும் பிறரும் செய்வது: அணைய—கைக்கு எட்டி ஆக்கம்—செல்வம்

5. பொருள் கையுண்டாய்ச் செல்லக் காணில் போற்றி யென்றேற்றெழுவர், இருள்கொள் துன்பத் தின்மை காணில் என்னே! என்பாரு மில்லை (9-1-3).

இருள் கொள் துன்பத்து—அறிவின்மை, துக்கம இவற்றை விளைவிக்கும் துன்பம் நேர்ந்தால், என்னே! என்பாரு மிலை—வாயால் ஐயோ என்று சொல்பவர் இலர். வாயால் இரங்கிச் சொல்வதும் இல்லை.

6. ஒரு நாயகமாய் ஓட உலகுடன் ஆண்டவர்...இம்மையிலே பிச்சை தாம் கொள்வர் (4-1-1).

உலகு தன் உடன் செல்ல—உலகிலுள்ளோர் தன் ஆணைப்படி நடக்குமாறு. ஒரு நாயகமாய்—உலகத்தை ஒரே குடைக்கீழ்க் கொண்டு ஆள்பவர், இம்மையிலே—இப்பிறவியிலேயே. (பதவி நிலையற்றது).

7. ஆமின் சுவையவைஆறோ டடிசி லுண் டார்ந்தபின், தூமென் மொழிமடவார் இரக்கப்பின்னும் துற்றுவார், ஈமின் எமக்கொரு துற்றென்று இடறுவர் (4-1-7).

ஆறு இன் சுவை ஆம் அடிசில் உண்டு—ஆறு வகைச் சுவை யுடைய உணவு உண்டு. உண்டு ஆர்ந்த பின்—பூர்ணமாக உண்ட பின்னும், தூமென் ... துற்றுவர்—இவர்களது விருப்பத்திற்காக மேலும் உண்பவர். ஒரு துற்று ஈமின்—ஒரு பிடியாவது சோறு அளிப்பீர் என்று. இடறுவர்—தட்டித் திரிவர். இன்பம் நிலை யற்றது.

8. (உலகாள்பவர்) இம்மையே, தம்மின் சுவை மடவாரைப் பிறர் கொள்ளத் தாம் விட்டு, வெம்மினொளி வெயில் கானகம் போய்க் குமைதின்பர்கள் (4-1-2).

வெம்மின் ஒளி வெயில்கானகம்—கொடிய வெய்யில் அடர்ந்த கானகம். குமைதின்பர்கள்—மறைந்து துன்புறுவர்.

9. வாழ்ந்தார்கள் வாழ்ந்தே நிற்பர் என்பதில்லை — நிற்குறில், ஆழ்ந்தார் கடற்பள்ளி அண்ணல் அடியவ ராமினோ (4-1-6).

10. மின்னின் நிலையில, மன்னுயி ராக்கைகள் (1-2-2).

## 11. 2. மானிடம் பாட வேண்டா

பகவான் தன் அடியார்க்கு எளியவன்; இவர்கள் விரும்புவன எல்லாங் கொடுப்பவன், தன்னையுங் கொடுப்பான். கவி பாட வேண்டில் இவனையே பாடவேண்டும்; மானிடத்தைப் பாடிப் பெறுவது ஒன்றுமில்லை, பெற்றாலும் நிலை நிற்காது.

1. என்னாவது? எத்தனை நாளைக்குப் போதும் புலவீர்காள்! மன்னா மனிசரைப் பாடிப் படைக்கும் பெரும் பொருள்? (3-9-4).

பெரும் பொருள்—பெறுவது அற்பமாயினும் அதிகம் பெறும் விருப்பத்துடன் செல்வது நோக்கு.

2. கொள்ளும் பயனில்லை குப்பை கிளர்த்தன்ன செல்வத்தை,
வள்ளல் புகழ்ந்து நும்வாய்மை இழக்கும் புலவீர்காள்! (3-9 5).

குப்பை கிளர்த்து அன்ன செல்வத்தை—குப்பையைக் கிளறினாற்போல் இழிவே செல்வமாக உடைய அற்பரை. வள்ளல் புகழ்ந்து—"வள்ளலே!" என்று புகழ்ந்து வாய்மை—புகழும் வாக்குடைமை,

3. மாரி யனையகை மால்வரை ஒக்கும் திண்டோளென்று,
பாரிலோர் பற்றையைப் பச்சைப் பசும் பொய்கள் பேசவே!
(3-9-7).

பற்றையை—தூறு போலே பயனில்லாத ஒருவனை (புகழ்ந்து). பச்சை பசும் பொய்கள்—மெய்யே கலவாது கற்பித்த பொய்கள். பேச—பேசி வாழ்த்த. இப்பொய்கள்: மாரி அனையகை—மேகம் போல் பொழியும் கைகள். மால்வரை—பெரிய மலை.

4. (பகவானைப் பாடினால்) சாய் கொண்ட இம்மையும்
சாதித்து வானவர் நாட்டையும், நீ கண்டு கொளென்று வீடும்
தரும் நின்று நின்றே (3-9-9).

சாய்—ஒளி. சாய்கொண்ட இம்மையும் சாதித்து—ஒளியுடைய இம்மை இன்பத்தையும் தந்து. வீடு—கைங்கர்யத்திற்கான மோக்ஷம் நின்று நின்று—கிரமப்படி அருள்செய்வதில் நின்று.

## 11. 3. பகவானே புகல்

பகவான் தனது அன்பர்க்கு மிகவும் எளியவன். இவனை ஆராதனம் செய்வது மிகமிக எளிது.

1. பத்துடை அடியவர்க் கெளியவன் (1-3-1)

பத்து—பக்தி.

2. பிரிவகை யின்றி நன்னீர் தூய்
புரிவதும் புகை பூவே (1-6-1).

பிரிவகை இன்றி—நாம் எளிதில் ஆராதனஞ் செய்யக்கூடுமோ என்று கலங்கிப் பிரியாமல். நல்நீர்—பக்தியால் அளிக்கும் நீர் புரிவது—கொடுப்பது; அவன் இதை அருட் கொடை போல் கருதுவான். புகை பூவே—ஏதேனும் ஒரு புகை, ஏதேனும் ஒரு பூ.

3. வின்கை வின்னாமை விரும்பி
உள்கலந்தார்க் கோரமுதே (1-9-5).

**விள்கை**—வேறு பயனைக் கருதி இவனை விடுவது. விள்ளாமை—வேறு பயன் கோராமை உள்கலந்தார்க்கு—இவனையே புகலாகக் கருதி ஒருநீராகக் கலந்தவர்க்கு. ஓர் அமுது—ஒப்பற்ற அமுதமாவான்; ஆராவமுது.

4 தொழுது மாமலர் நீர்சுடர் தூபம் கொண்டு
எழுது மென்னும் இதுமிகை யாதலில் (9-3-9).

சிறந்த மலர், அர்க்ய தீர்த்தம், பாத்ய தீர்த்தம், தூபம், தீபம் கொண்டு உய்வோம் என்றிருப்பது, மிகை என்னும்படி உன் சீலம் இருப்பது

5 ...பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே (3-3-8).

6 உம்முயிர், வீடுடையானிடை, வீடு செய்ம்மினே (1-2-1).

உமது ஆத்மாவும் சரீரமும் உள்பட பகவானிடம். வீடு இசைமினே—(இவற்றை) ஒப்படைக்கக் இசைவீர்.

## 11. 4. பரதத்வம்

ஸ்ரீமந் நாராயணனே தேவர்களுக்கெல்லாம் ஆதியும் காப்புமாவான். தேவர்களுடைய நிலையும் அவர்களது பெருமையும் இவனாலேயே, பக்தர்கள் விரும்பும் பலன்களைத் தேவர்கள் வழங்குவது, ஸ்ரீமந்நாராயணன் இவர்களுக்கு அந்தராத்மாவாக இருப்பதாலே. ஆனால் இந்த தேவதைகள் அளிக்கும் பலன் அல்பமானது, அஸ்திரமானது. இந்தக் கருத்தைக் கண்ணபிரான் வெளியிடுகிறான். இதே கருத்தை ஆழ்வாரும் வெளியிட்டிருக்கிறார். இவர் வேத இதிஹாஸ புராணங்களிலுள்ள கருத்துக்களையே கூறியிருக்கிறார். இவற்றிற்குப் புறம்பாகத் தமது மனப்போக்கின்படி இவர் எதுவும் தாமாகவே படைத்துக் கூறவில்லை. இவர் பிற தெய்வங்களை இழிவாகச் சொல்லியதுமில்லை, ஸர்வேச்வரன் இவர்களை அப்போதைப்போது காப்பாற்றி அருளும் செய்கிறான். சிவபிரானுக்குப் பிரமனால் வந்த சாபத்தை இவன் தவிர்த்தான்; தனது மார்பில் ஓரிடமும் கொடுத்தான் என்கிறார், ஆழ்வார். இவர் வேதக் கருத்துக்களையே வெளியிட்டிருப்பதால், ''வேதம் தமிழ் செய்த மாறன்'' என்று பாராட்டப் பெறுகிறார்.

1. நாடி நீர் வணங்குந் தெய்வமும் உம்மையும் முன் படைத்தான் 4-10-2).

2. பேசநின்ற சிவனுக்கும் பிரமன்றனக்கும் பிறர்க்குமநாயகன் அவனே (4-10-3).

3. உறுவதாவது...குறிய மாணுருவாகிய நீள் குடக் கூத்தனுக்கு ஆட்செய்வதே (4-10-10).

## 11. 5. திவ்ய தேச வாசம்

1. கிளரொளி இளமை கெடுவதன் முன்னம், வளரொளி மாயோன் மருவிய கோயில், வளரிளம் பொழில்சூழ் மாலிருஞ் சோலை, தளர்விலராகில் சார்வது சதிரே. (2-10-1).

சதிர்—தக்கது. தகாதது (இளிம்பு) இதர விஷயங்களைப் பற்றுவது.

2. எய்த்திளைப்பதன் முன்னம்(திருவேங்கடம்) அடைமினோ (3-3-10).

எய்த்து—உடல் வலிமை இழந்து.

3. மதி தவழ் குடுமி மாலிருஞ்சோலைப் பதியது ஏத்தி எழுவது பயனே (2-10-2).

மதி—சந்திரன். குடுமி—சிகரம்.

4. ...திருவேங்கட மாமலை ஒன்றுமே தொழ நம் வினை ஓயுமே (3-3-8).

5. மாதுறு மயில்சேர் மாலிருஞ் சோலை
போதவிழ் மலையே புகுவது பொருளே (2-10-10).

## 11. 6. கைங்கர்யம்

1. ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் (3-3-1).

எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் பிரியாமலிருந்து குறையாதவாறு கைங்கர்யம் செல்யவேண்டும்.

2. படமுடை யரவில் பள்ளி பயின்றவன் பாதங் காண,
நடமினோ நமர்களுக்குள்ளீர் (10-2-8).

நாராயணனை வணங்க, திவ்யதேச யாத்ரை.

3. பேருமோர் ஆயிரத்துள் ஒன்று நீர் பேசுமினே (10-2-3).
திருநாமங்களைப் பாடி வணங்குவது

4. சுற்றிநாம் வலஞ் செய்ய நம துயர் கெடும் கடிதே (10-1-7).
திருக்கோயிலை வலஞ்செய்வது.

5. கடைத்தலை சீய்க்கப் பெற்றால் கடுவினை களையலாமே (10-2-5).

திருக்கோயிலில் அலகிட்டுத் தூயதாக்குவது.

6. தூப நல்விரை மலர்கள் துவளற ஆய்ந்து கொண்டு, வாமனனடிக் கென்றேத்த மாய்ந்தறும் வினைகள் தாமே (10-2-9).

நல் தூபம், மணமுள்ள மலர்கள் இவை பகவானது மேன்மைக் கேற்ப ஆய்ந்து, எடுத்துக் கொண்டு, இதுவே பயனாக வணங்க வேண்டும்.

7. சாந்தொடு விளக்கம் தூபம் தாமரை மலர்கள் நல்ல
ஆய்ந்து கொண்டேத்த வல்லார் அந்தமில் புகழினாரே.
(10-2-10).

## 11. 7. திருமந்த்ரம்

எம்பெருமானை அடைந்து உய்வதற்கு ஓத வேண்டிய மந்த்ரம் ஸ்ரீமந் நாராயணனைப் பற்றியது: ஓம் நமோ நாராயணாய என்பது. இதை ப்ரணவம் இல்லாமல் ஓதினாலும் பயன் பெறக்கூடும்.

1. (ஈறில) வண்புகழ் நாரணன், திண் கழல் சேரே (1-2-10).

ஈறு இல—எல்லையில்லாத. வண் புகழ்—சிறந்த கல்யாண குணங்களால் மேன்மையுற்ற. திண் கழல்—அன்பரை ஒரு நாளும் கைவிடாது அருள்புரியும் திருவடி.

2. கண்ணன் கழலிணை, நண்ணும் மனமுடையீர்! எண்ணுந் திருநாமம், திண்ணம் நாரணமே (10-5-1).

நாமம் நாரணம்; இது திண்ணம்: "ஸத்யம் ஸத்யம் புநஸ் ஸத்யம்" என்றவாறு.

3. (இதன் பொருள்): நாரணன் எம்மான், பாரணங் காளன், வாரணந் தொலைத்த, காரணன் தானே (10-5-2).

எம்மான்—என் ஸ்வாமி, என்னை யுடையவன். பார் அணங்கு ஆளன்—பூமிக்கு அபிமானியான பூமிப் பிராட்டியின் நாயகன்.

காரணம் தொலைத்த : இதற்கு அருள் செய்யத் தோன்றியவன். காரணன்—நமது நலனுக்கு ஆதாரமாக இருப்பவன். அகாரத்தின் பொருள்: உலகுக்குக் காரணம், காப்பு.

4. தானே உலகெல்லாம், தானே படைத்திடந்து, தானே உண்டுமிழ்ந்து, தானே ஆள்வானே (10-5-3).

5. நாராயணாய என்பதில் ஆய என்ற உருபின் கருத்து:

நாடீர் நாடோறும், வாடா மலர்கொண்டு, பாடீர் அவன் நாமம், வீடே பெறலாமே (10-5-5)

6. தொழுவதன் பயன் : சாரா ஏதங்கள், நீரார் முகில் வண்ணன், பேரார் ஓதுவார், ஆரார் அமரரே (10-5-8).

பேர் ஆர் ஓதுவார் அமரரே—நித்திய சூரிகளோடொப்பர்.

வேதங்கள், இதிஹாஸங்கள், புராணங்கள் யாவும் ஐந்து அரும்பொருள்களை (அர்த்த பஞ்சகம்) வெளியிடுகின்றன: ஈச்வர ஸ்வரூபம், ஆத்ம ஸ்வரூபம், ஈச்வரனைப் பெறும் உபாயம், இதனால் பயன், இவனைப் பெறுவதற்குத் தடைகள்.

ஈச்வர ஸ்வரூபம் : "எம்மான்" (10-5-2). உபாயம்—நாடீர் நாடோறும், பாடீர் அவன் நாமம்." பலன்—வீடே பெறலாம். தடை—பிறப்பால் ஏதங்கள்.

இவ்வாறு பல இடங்களிலும் காணலாம்.

## 11. 8. குணங்கள் : அனுபவம்

ஸர்வேச்வரனுடைய கல்யாண குணங்களைக் கேட்பதும், பேசுவதும், கீர்த்தனஞ் செய்வதும் அடியார்க்கு இன்பகரம்.

1. கற்பார் இராமபிரானையல்லாமல் மற்றும் கற்பரோ? (7-5-1).
2. கேட்பார்கள் கேசவன் கீர்த்தியல்லால் மற்றும் கேட்பரோ? (7-5-3).
3. நாட்டிற் பிறந்தவர் நாரணற் காளன்றி யாவரோ? (7-5-2).
4. கேட்டு முணர்ந்தவர் கேசவற் காளன்றி யாவரோ? (7-5-6).
5. வார்த்தை யறிபவர் மாயவற் காளன்றி யாவரோ? (7-5-10) வார்த்தை—ஸ்ரீகீதை.
6. மாய மறிபவர் மாயவற் காளன்றி யாவரோ? (7-5-9).

## 11. 9. அடியாராக வாழ்தல்

ஸர்வேச்வரனிடம் கொள்ளும் அன்பும் பக்தியும் இவனது அடியார்களிடமும் கொள்வதுதான் பூர்ணமான ஞானத்தின் விளைவாகும்

திருமலடியார் செய்வன வருமாறு: இந்த அடியார்களுக்கு அடியாராக வாழ வேண்டும்.

1. பாற்கடல் சேர்ந்த பரமனைப் பயிலுந் திருவுடையார் (3-7-1). திரு—பாக்யம்.

2. தூமணி வண்ணன் தன்னைத் தாளுந் தடக்கையும் கூப்பிப் பணியுமவர் (3-7-2).

3 அப்பனை...தொன்மை பிதற்ற வல்லாரைப் பிதற்றுமவர் (3-7-9).

பிதற்ற—அடைவின்றிப் பாராட்டிப் பேச.

4. ஒளிக் கொண்ட சோதியை உள்ளத்துக் கொள்ளுமவர் (3-7-6) பகவானது சோதியை.

5. வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணற்கு ஆளென்று உள் கலந்தார் (3-7-9)

6....அம்மான் புனைபூங் கழலடிக்கீழ், சயமே அடிமை தலை நின்றார் (8-10-2)

பூ புனை கழலடிக்கீழ்—பூவும் வீரக்கழலும அணியும் திருவடிகளின் கீழே. சயமே—அவனது பேரெழிலில் தோற்று, அல்லது இதுவே பயனாக. அடிமை தலை நின்றார்—அடிமையில் மேலெல்லையிருப்பவர்கள். சயமே: அடிமையா யிருப்பதே ஜயம் என்று, பரதாழ்வான் போல்வார்.

7 கோதில் அடியார் (8-10-9).

வேறு பயன் எதுவுங் கருதாது கைங்கர்யத்திலேயே தோய்ந்திருப்பவர்கள்; ராம குணங்களில் ஈடுபடாமல் பரதனுக்குத் தொண்டு செய்வதே தருமமாகக் கொண்ட சத்ருக்னாழ்வான் போல்வார்.

8. நீக்கமில்லா அடியார் (8-10-10). இளைய பெருமாள் போல்வார்கள்.

## 11. 10. ஸ்ரீவைகுண்டத்தில்

உலக வாழ்க்கை நீங்கியபின் ஆத்மாக்கள் அனுபவிப்பது என்ன? சிலர் வெளியிட்டுள்ளது: ஆத்மாக்கள் ப்ரஹ்மத்தோடு ஒன்றிவிடுகின்றனர் என்று; இதற்குமேல் விவரம் ஒன்றுமில்லை. உபநிஷத்துக்கள் அறிவித்துள்ளதை ஆழ்வார் திருவாய்மொழியில் விளக்கியிருக்கிறார். தனது அடியார்களை ஸர்வேச்வரன் அர்ச்சிராதி மார்கமாக அழைத்துச் சென்று, இவர்களுடன் இன்புறுகிறான்; இவர்கள் இவனுக்குத் தொண்டு செய்தும், இவனது புகழ்களைப் பாடியும், திருமேனியின் கட்டழகை அனுபவித்தும் மகிழ்கின்றனர்; இவ்வுலகுக்கு மீள்வதில்லை. அர்ச்சிராதி மார்கமாகச் சென்று பகவானை அடிதொழுது இன்புறுவது கௌஷீதகி என்ற உபநிஷத்தில் உள்ளது. இதில் குறிப்பிட்டுள்ளன: அபராஜிதம் ஆயதநம்—ஸ்ரீவைகுண்டம். விபுப்ரமிதம்—திருமாமணி மண்டபம். அமிதௌஜா: பர்யங்க:—திருக்கட்டில். வேறு சில உபநிஷத்துக்களிலும் இது குறிப்பிடப்பெற்றுள்ளது.

1. சூழ்விசும்பணி முகில் தூரியம் முழக்கின (10-9-1).

அர்ச்சிராதி மார்கமாகச் செல்லும் போது முக்தர்களைக் கண்டு, மேகங்கள் பறைபோல் முழங்கின.

2. தொழுதனர் உலகர்கள் தூப—நல் மலர் மழை பொழிவனர் (10-9-3).

உலகர்கள்—வழியில் அந்த அந்த உலகில் உள்ளவர்கள்.

3. கீதங்கள் பாடினர் கின்னரர் கெருடர்கள் (10-9-5).

4. மடந்தையர் வாழ்த்தலும் மருதரும் வசுக்களும், தொடர்ந்தெங்கும் தோத்திரம் சொல்லினர் (10-9-7).

மடந்தையர்: ஐந்நூறு அப்ஸரஸ் பெண்டிர் தங்கள் கரங்களில் மாலைகள், பட்டாடைகள் போல்வனவற்றை ஏந்தி முக்தரை அலங்காரஞ் செய்து வாழ்த்துகின்றனர். மருதர்—மருத்துக்கள் எழுவர். வசுக்கள்: எண்மர்

5. வந்தவர் எதிர் கொள்ள மாமணி மண்டபத்து, அந்தமில் பேரின்பத்து, அடியரோடிருந்தமை (10-9-11).

அவர் வந்து எதிர் கொள்ள—பிராட்டியோடு நாராயணன் எதிர் வந்து ஏற்றுக் கொள்ள. அந்தம் இல் பேர் இன்பம்—அடியார்களோடு கைங்கர்யம் செய்வதால்.

6. ...இமையோர்கள் குழாம் தொழுவதும் சூழ்வதுஞ் செய் தொல்லை எாலை (திரு வி. 97).

நித்தியசூரிகள் பகவானைச் சூழ்ந்தும் தொழுதும் பேரின்பம் பெறுவர். இத்தகைய இன்பம்ம முக்தர்க்கு.

7. மாக வைகுந்தத்து மகிழ்வெய்துவர் வைகலுமே (5 10-11).

மாக வைகுந்தத்து—பரமாகாசத்திலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில். வைகல்—எப்போதும், மீட்சியில்லாமல்.

8. அடிமை செய்வார் திருமாலுக்கே (6-5-11).

9. முகில் வண்ண லானத்து இமையவர் சூழ இருப்பர் பேரின்ப வெள்ளத்தே (7-2-11).

10. நேர்பட்டார் நெடுமாற்கு அடிமை செய்யவே (8-10-11).

11. தொண்டர் ஆள்வது சூழ் பொன் விசும்பே (10-8-11).

ஆள்வது—யாவராலும் பாராட்டப்பெற்று மகிழ்வது. சூழ் பொன் விசும்பு—வியக்கத்தக்க சோதிமயமான பரமபதம்.

## 12. தொண்டர்க்கு அமுது

ஸர்வேச்வரனது திருவருளாலே ஆழ்வார் திருவாய்மொழி பாடினார். "என் முன் சொல்லும்" என்கிறார், ஆழ்வார். பகவான் முன்னுருச் சொன்னதைத் தாம் சொன்னதாகக் கூறுகிறார், இவர்." 'என்னைத் தன்னாக்கி, என்னால் தன்னை இன் தமிழ் பாடிய ஈசன் என்கிறார்;, ஆதலால் திருவாய்மொழி எல்லா வகையாலும் சிறப்புடையது அரிய கருத்துக்களாலும், காவிய நலனாலும், இசை வளத்தாலும் நிகரற்றதாய் இது விளங்குகிறது. "தொண்டர்க்குஅமுதுண்ணச் சொலமாலைகள்" என்கிறார் ஆழ்வார், இத் திருவாய்மொழி விஷயமாக.

(1) உட்பொருளால் மேன்மை:

1 திருமாலால், அருளப்பட்ட சடகோபன் ஓராயிரம் (8-8-11).

அருளப்பட்ட: மயர்வற மதிநலம் பெற்றார், இவர்.

2. கேசவனடியிணை மிசைக் குருகூர்ச் சடகோபன் சொன்ன தூய ஆயிரம் (6-4-11).

3 முகில்வண்ண னடிமேல் சொன்ன சொல் மாலை ஆயிரம் (7-2-11).

4. திருவடிமேல் உரைத்த தமிழ் ஆயிரம் (4-9-11).

திருவடிமேல்—பகவானது திருவடிகள் பற்றி.

5 தீர்த்தங்கள் ஆயிரம் (7-10-11).

தீர்த்தங்கள்: புனிதமானவை; தீர்த்தனை (பகவானை)ப் போலே. பகவான் : "பாவந ஸர்வலோகாநாம்".

6. முந்தை ஆயிரம் (6-5-11)

முந்தை — பழைமையான. பழைமையான வேதங்களின் கருத்துக்களை வெளியிடுவதால்.

7. அழிவில்லா ஆயிரம் (9-7-11).

கேட்பார்களது நெஞ்சில் எப்போதும் தோய்ந்திருப்பது.

8. நூறே சொன்ன ஓராயிரம் (9-4-11).

பொன்னைக் கிழிகிழியாகக் கோப்பார் போலே நூறு நூறாக ஆழ்வார் அளிக்கின்றார்.

9. பொய்யில் பாடல் ஆயிரம் (4-3-11).

பகவான் "மெய்யனாகும்"; இவனைப் பற்றிய பாடலும் இவ்வாறே.

(2) பாடிய ஆழ்வாரால் மேன்மை:

10. நாவியலால் இசை மாலைகள் ஏத்தி மேவப் பெற்றேன் (4-5-4).

நா இயலால்: நெஞ்சிற் வவுத்தமின்றிக்கே நாவே இசைத்தது

11 தெருள்கொள்ளச் சொன்ன ஓர் ஆயிரம் (2-10-11).

கேட்பார்க்குத் தம்மிலும் தெளிவு மனத்தில் விளங்குமாறு.

12 துயக்கின்றித் தொழுதுரைத்த ஆயிரம் (3-1-11).

துயக்கு இன்றி—ஐயந்திரிபு இல்லாமல்.

13. அவாவிலந்தாதிகளால் இவை ஆயிரம் (10-10-11).

பக்திப் பெருக்கால் வாய்ந்த ப்ரபந்தம்.

14. ஆக நூற்றவந்தாதி ஆயிரம் (5-10-11).

தாம் பகவானைப் பாடி தரித்திருப்பதற்கு இசைத்த ஆயிரம்,

15. ஒலி புகழ் ஆயிரம் (5-?-11).

பகவானுடைய குணங்களை யாவரும் அறியுமாறு வெளியிடுகின்ற ப்ரபந்தம்.

(3) பக்தி வளத்தாலே கவிப் பெருக்கு:

16. சொல்பணிசெய் ஆயிரம் (1-10-11).

சொல்லாலே பணி செய்த ஆயிரம், சொற்கள் தாமே முன் வந்து பாசுரங்களாகிப் பணிசெய்தன.

17. சொல்வலங் கொண்ட ஆயிரம் (3-8-11).
சொற்களாலே கருத்துக்கள் நன்கு விளங்குமாறு.

18. வேட்கையால் சொன்ன பாடல் ஆயிரம் (4-10-11.)
குணங்களை அனுபவிக்க வேணுமென்ற ஆசையால்.

19. தெளிவுற்ற ஆயிரம் (7-5-11).
பாசுரங்களே தெளிவைப் பிறப்பிக்கும்.

20. மிடைந்த சொல் தொடை ஆயிரம் (1-8-11)
மிடைந்த சொல்—அடர்ந்த சொற்கள் ''என்னைக் கொள் என்னைக் கொள்'' என்று தாமே முன்வந்தவை.

(4) கவியால் வரும் சிறப்பு :
21. சீர்த்தொடை ஆயிரம் (1-2-11).
கவிக்கு உறுப்பான அலங்காரங்கள் வாய்த்ததால்.

22. அடியார்ந்த ஆயிரம் (3-7-11).
பாதம் போன்ற இலக்கணங்கள் பூர்ணமாக வாய்ந்த.

23. நிரைக்கொள் அந்தாதி ஓர் ஆயிரம் (5-3-11).

பக்தி பரவசரான நிலையில் எழுத்து, சொல், பொருள், அடி. தொடை, பா, இசை, தாளம், அந்தாதி யாவும் சேர அமைந்தன.

24 சீர்வண்ண ஒண்தமிழ்கள் இவை ஆயிரம் (5-1-11).

கவிக்கு அங்கமான சீர், வண்ணம், அன்றியும் இனிமையான தமிழ் இவை அடர்ந்து

25. கட்டெழில் ஆயிரம் (6-6-11).

கட்டு : செய்யுளுக்கான தொடை. இதனால் எழில்.

26 அமை பாட்டு ஓர் ஆயிரம் (2-4-11).

அமை — சமைந்த. சொல், பொருள் இவை பூர்ணமாக அமைந்த.

27. பணிகொள் ஆயிரம் (3-6-11).
தலையான பண்ணிலே சொன்ன.

28. பண்தலையில் சொன்ன தமிழாயிரம் (2-8-11).

29. செயிரில் சொல் இசை மாலை (3-2-11).
செயிர் இல்—குற்றமில்லாத சொல், பொருள் இவற்றால்.

30. குழலில் மலியச் சொன்ன ஓர் ஆயிரம் (5-8-11).
பகவானது திருக்குழலோசையினும் இனிமை மிகுமாறு.

31. பாலோடு அமுதன்ன ஆயிரம் (8-6-11).
பால்:- திருக்கடித்தானப் பெருமான் என்ற இனிமை அமுது—ஆழ்வாரது கவி.

(6) பாடிக் களிப்பவர்கள்:

32. பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவும் ஆயிரம் (1-5-11).
பால் ஏய் தமிழர்—பால் போல் இனிய தமிழ் அறிந்தோர்: முதலாழ்வார்கள் போல்வார். இசைகாரர்: ஸ்ரீமதுரகவி போல்வார் பத்தர்: பெரியாழ்வார் போல்வார்.

33. குழாம் கொள் ஆயிரம் (2-3-11).
குழாம்: ஸ்ரீவைஷ்ணவகோஷ்டிகள். கொள்—அனுபவிக்கின்ற.

இவரது திருவுள்ளம், பகவானது திருவருளால் வெளிவந்த திருவாய்மொழியை யாவரும் பாடி உய்யவேண்டும் என்பதே.

1. குழாங்களாய் அடியீருடன் பாடி நின்று ஆடுமினே (2-3-11).

2. ஆயிரத்துள் இப்பத்தும் பாடியாடிப் பணிமின் அவன் தாள்களே (9-10-11).

இவ்வாறு பாடினால்,

3. பன்னிரு நாமப் பாட்டு அண்ணல் தாள் அணைவிக்குமே (2-7-11).

4. வேரி மாறாத பூமேல் இருப்பாள் வினை தீர்க்குமே (4-5-11).

5. ஓதவல்லார் பிறவாரே (1-6-11).

6. எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்குமே (7-9-11).

7. மாக வைகுந்தத்து மகிழ்வெய்துவர் வைகலுமே (5-10-11)

8. நல்ல பதத்தால் மனை வாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே (8-10-11).

---